அறிவானந்த அடிகள் இயற்றிய

# சிறுத்தொண்டர் நாடகம்

பதிப்பாசிரியர்

முனைவர் இ. சுந்தரமூர்த்தி




INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

அறிவானந்த அடிகள் இயற்றிய

# சிறுத்தொண்டர் நாடகம்

பதிப்பாசிரியர்

முனைவர் இ. சுந்தரமூர்த்தி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.ஐ.டி. வளாகம், தரமணி

சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Ciruttoṇṭar Nāṭakam |
| Editor | : | Dr. E. Sundaramoorthy<br>Vice-Chancellor<br>Tamil University, Thanjavur - 613 005 |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>C.I.T. Campus, Tharamani<br>Chennai - 600 113 |
| First Edition | : | 2002 |
| Publication No. | : | 416 |
| Language | : | Tamil |
| Paper used | : | 18.6 TNPL Super Printing |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 points |
| No. of pages | : | xxx + 297 |
| Price | : | Rs.75/- (Rupees Seventy five only) |
| No. of copies | : | 1200 |
| Printed by | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004 |
| Subject | : | Folk Drama |

# பொருளடக்கம்


| | பக்கம் |
|---|---|
| சிறப்புரை | v |
| பதிப்புரை | ix |
| முன்னுரை | xxiv |
| முகப்புரை | xxix |
| நூல் | 1 |
| பாட்டு முதற்குறிப்பகராதி | 289 |
| நூலுள் எடுத்தாளப்பட்ட மெட்டுகள் | 295 |
| நூலுள் இடம் பெற்ற ராகங்கள் | 297 |

முனைவர் பொன். கோதண்டராமன் - பொற்கோ
துணைவேந்தர்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை - 600 005

# *சிறப்புரை*

அறிவானந்த அடிகளார் அவர்கள் ஏறக்குறைய நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன்பு பழைய திருச்சி மாவட்டத்திலுள்ள உடையாபாளையத்தில் பிறந்தவர். இவருடைய இயற்பெயர் மதுரை முத்து என்பதாம். ஐந்தாம் வகுப்பு வரை படித்தவர். இவருக்கு இரண்டு ஆண் மக்கள் உண்டு. கும்பகோணத்திற்கு அருகிலுள்ள நாச்சியார் கோயில் என்ற ஊரில் இவர் துறவு பூண்டார். துறவு பூண்ட பிறகு இவருக்கு அறிவானந்த அடிகள் என்ற பெயர் நிலைபெற்றுவிட்டது. எண்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் உயிர் வாழ்ந்தார். முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் மறைந்துவிட்டார்.

நாச்சியார்கோயில், இரும்புலிக்குறிச்சி, குணமங்கலம், கல்லங்குறிச்சி, தத்தனூர், குமிழியம், த. சோழங்குறிச்சி முதலான ஊர்களில் இவர் தமிழ்ப்பணி செய்திருக்கிறார். இரும்புலிக்குறிச்சியில் வாழ்ந்த ஆசிரியர் பி.ஆ. துரைசாமி அவர்களும், தத்தனூரில் வாழ்ந்த ஆசிரியர் ஆறுமுகம் அவர்களும் இவருடைய மாணாக்கர்களில் குறிப்பிடத்தகுந்தவர்கள்.

கல்லங்குறிச்சி அருள்மிகு கலியபெருமாள் திருக்கோயிலை மையப் பொருளாக்கி இவர் ஒரு தலப்பிரபந்தம் எழுதி வெளியிட்டிருக்கிறார். "வெள்ளத்தின் விபரீதம்" என்ற தலைப்பில் இவர் எழுதிய இன்னொரு நூலும் வெளிவந்திருப்பதாகத் தெரிகிறது. இவை தவிர ஐயாயிரத்துக்கு மேற்பட்ட தனிப் பாடல்களையும் இவர் பாடியிருக்கிறார். வெண்பா, அகவல் போன்ற பாடல்களையும் ஏராளமான கீர்த்தனைகளையும் இவருடைய நூல்களில் காணமுடிகிறது.

"சிறுத்தொண்டர் நாடகம்" என்ற இந்த நூல் "சிறுத்தொண்டர் சரிதம்" என்றும் "சிறுத்தொண்டர் புராணம்" என்றும் குறிக்கப்படுகின்றது. இந்த நூல் தோன்றி நூறு ஆண்டுகள் நிறைவு பெற்றுவிட்டன.

குணமங்கலம் என்ற ஊரில் சில காலம் உ.வே.சா. அவர்களும் வாழ்ந்திருப்பதாக அறிகிறோம். அவரை அறிவானந்த அடிகள் சந்தித்தார்

என்பதற்கான குறிப்புகள் எதுவும் கிடைக்கவில்லை. அடிகளாரின் காலத்தில் வாழ்ந்த பல பெரும் புலவர்கள் இவருக்குச் சாற்று கவிகள் வழங்கியிருக்கிறார்கள். அவற்றை இந்த நூலில் காணலாம்.

அறிவானந்த அடிகளார் அவர்கள் நன்னூல், நிகண்டு, கம்பராமாயணம், வில்லிபாரதம், திருவிளையாடற்புராணம், பெரியபுராணம், திருவருட்பா, திருக்குறள் முதலான நூல்களை நன்கு கற்றுத் தேர்ந்தவர். மருத்துவம், சோதிடம், யோகம் முதலான துறைகளில் நிரம்ப அறிவும் தேர்ச்சியும் பெற்றவர். அடிக்கடி ஊர்ப்பயணம் மேற்கொள்ளுபவர். பயணம் மேற்கொள்ளும் போதெல்லாம் புத்தகக்கட்டு ஒன்றைத் தலையில் சுமந்து கொண்டு செல்லுவார். எப்போதும் நடைப்பயணமே மேற்கொள்ளுவார். எப்போதும் படிப்பதும் எழுதுவதுமாகவே இருப்பார். நல்ல மாணவர்கள் கிடைக்கும் போது சொல்லச்சொல்ல அவர்களை எழுதவைத்துத் திருத்தம் செய்வார்.

நடுத்தரமான உயரமும் கட்டுக்கோப்பான உடலும் கொண்ட அடிகளார் எப்போதும் காவி உடையிலேயே இருப்பார். அடிகளார் தந்தை பெரியாரின் குடியரசு வெளியீடாக வந்த "இராமாயண ஆராய்ச்சி" என்ற நூலை நன்கு படித்திருந்தார். பிறருக்கும் அறிமுகப்படுத்தினார். வள்ளலாரின் திருவருட்பாவையும் நன்கு படித்திருந்தார். அதற்குரிய அடையாளங்களை இவருடைய பாடல்களில் காணலாம். வள்ளலார் பாடல்களிலும், தாயுமானவர் பாடல்களிலும், பட்டினத்தடிகள் பாடல்களிலும் இவருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. இவருடைய பெரும்புலமையும் துறவுக் கோலமும் கவித்துவமும் மற்றவர்கள் இவரைக் காணும்போது அவர்களை இவருக்குப் பணிந்து விழுந்து வணங்க வைத்தன. "உலக நிலை முழுதாகி___" எனத் தொடங்கும் வள்ளலாரின் பாடலில் வருகின்ற "அறிவானந்தம்" என்ற தொடரே இவருக்குப் பெயராக அமைந்தது என்பது இங்கே குறிப்பிடத்தகுந்தது.

இவருடைய நூலில் பாத்திரங்கள் வாயிலாக இவருடைய பல்துறைப் புலமை வெளிப்பட்டிருப்பதைக் காணலாம். இவருக்கு இருந்த இலக்கியப் புலமையும், மருத்துவ அறிவும், யோகப் பயிற்சியும், சோதிட அறிவும், தத்துவ நாட்டமும் ஆங்காங்கே இந்த நூலில் பக்குவமாகப் பொதிந்து வைக்கப்பட்டிருக்கின்றன.

சங்க இலக்கியங்களைப் பற்றியும் இவருக்குத் தெரிந்திருக்கிறது. இவர் எழுதிய தனிப்பாடல்களின் மூலம் இந்த உண்மை விளங்குகிறது.

விடுதலைக்கு முந்தைய தமிழகத்தில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாக மிகச்சிலரே இருந்த காலத்தில் எளிய சூழலில் பிறந்து

வளர்ந்த அடிகளார் ஒரு மாமனிதராக வாழ்ந்து மறைந்தார். சமய உலகமும், இலக்கிய உலகமும், அறிஞர் உலகமும் கண்டு மகிழும் வகையில் இந்த நூலை இப்போது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறது. அடிகளாரை நேரில் அறிந்தவன் என்ற முறையிலும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தோடு தொடர்புடையவன் என்ற முறையிலும் அடிகளார் உரிமை பாராட்டி வாழ்ந்த ஊரில் பிறந்தவன் என்ற முறையிலும் இந்த சிறப்புரையை உரிமையுணர்வோடும் பொறுப்புணர்வோடும் எழுதி இருக்கிறேன். அடிகளார் உரிமையோடு இரும்புலிக்குறிச்சியில் உறைந்தார். அந்த ஊரிலேயே மறைந்தார். இரும்புலிக்குறிச்சியில் இவர் வந்து தங்குவதற்கு முன்பே ஆண்டுதோறும் மாரியம்மன் கோயிலில் அன்னப்படையல் விழா நடந்து வந்தது. இவர் இரும்புலிக்குறிச்சிக்கு வந்து தங்கிய பிறகு அன்னப்படையல் விழா மேலும் சிறப்புப் பெற்றது. சித்திரை மாத அமாவாசையின்போது நடைபெறும் அன்னப்படையல் விழாவில் "சிறுத்தொண்ட நாடகத்"துக்கு ஒரு சிறப்பிடம் உண்டு. அண்மையில் நூறாவது முறையாக இந்த நாடகம் நடத்தப்பட்டிருக்கிறது.

அடிகளாரின் அன்புக்குரிய மாணவராக விளங்கிய திரு. பி.ஆ. துரைசாமி ஆசிரியர் அவர்கள் மூலப்படியிலிருந்து இந்த நூலைப் படியெடுத்துக் கொள்ளத் தேவையான உதவிகளைச் செய்தார். ஆசிரியர் திரு. கி. ஆதிமூலம் அவர்கள் இந்த நூலை முழுமையாகப் படியெடுத்துக் கொடுத்து உதவினார். நூலகர் திரு. இராம. மதியழகன் அவர்கள் ஆசிரியர் பற்றியும் நூல் பற்றியும் தேவையான குறிப்புகளைத் திரட்டிக் கொண்டுவந்து கொடுத்து உதவினார். இந்த நூல் வெளிவரப் பலர் பல்வேறு வகையில் உதவியிருக்கிறார்கள் என்பதை மிகுந்த மன மகிழ்ச்சியோடும் நன்றியோடும் நினைத்துப் பார்க்கின்றேன். கையெழுத்துப் படியிலிருந்த இந்த நூலை அச்சு வடிவில் நூலாக்க வேண்டுமென்று பொறியாளர் திரு. அ. மெய்யப்பன் அவர்கள் மேற்கொண்ட முயற்சியே இந்த நூலாக்கப் பணியின் தொடக்கம் என்று சொல்ல வேண்டும். கையெழுத்துப் படியில் உள்ள ஒரு நூலை அச்சுவடிவில் நூலாக்கும்போது எதிர்ப்படும் இடர்ப்பாடுகளைப் பற்றி நல்ல பதிப்பாசிரியர்களுக்கு மட்டுமே தெரியும். தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் இ. சுந்தரமூர்த்தி அவர்கள் இந்த இடர்ப்பாடுகளையெல்லாம் மிகுந்த அன்போடும் மகிழ்ச்சியோடும் ஏற்றுக்கொண்டு இந்த அரிய பதிப்புப் பணியை நிறைவேற்றியிருக்கிறார். தமிழ் இலக்கிய உலகமும் சிவநேசச் செல்வர்களின் உலகமும் இவருக்கு அன்போடு நன்றி சொல்ல வேண்டும்.

இதுவரை கையெழுத்துப் படியில் இருந்த இந்த நாடகம் இப்போது அச்சிட்ட நூல் வடிவில் வெளிவந்திருப்பது எல்லோருக்கும் மகிழ்ச்சி ஊட்டுவதாக இருக்கிறது. இந்த நூல் அறிவானந்த அடிகளுக்கு மேலும் புகழ் சேர்க்கும்.

**பொற்கோ**

**முனைவர் இ. சுந்தரமூர்த்தி**
துணைவேந்தர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - *613 005*

## *பதிப்புரை*

'சிறுத்தொண்டர் சரித மான்மியம்' எனப் பெயர்பெற்ற 'சிறுத்தொண்டர் நாடகம்' என்னும் இந்நூல் கூத்து நாடக வகையைச் சார்ந்தது. இது தென்னார்க்காடு, வட ஆர்க்காடு, செங்கல்பட்டு, சென்னை போன்ற தமிழகத்தின் வடபகுதிகளிலும் பாண்டிச்சேரி மாநிலத்திலும் செல்வாக்குடன் நடத்தப்படும் ஒரு நிகழ்த்துகலை நாடகம் ஆகும்.

இக்கூத்து தமிழகத்தின் பழமையான காலந்தொட்டே பாட்டும் நடிப்புமாக இருந்து வந்துள்ளது. தொல்காப்பியத்தின்,

> "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கம்"
>
> (தொல். பொருள். அகம். *56*)

என்கிற நூற்பாவானும்,

> "சேரி மொழியான் செவ்விதின் கிளந்து
> தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
> புலனென மொழிப புலன் உணர்ந்தோரே"
>
> (தொல். பொருள். செய். *233*)

என்கிற நூற்பாவானும் தொல்காப்பியர் காலத்தில் கூத்து அல்லது நாடக மரபு இருந்து வந்துள்ளது என்பதை உணரலாம். மேலும் தொல்காப்பியர் குறிப்பிடும் 'பண்ணத்தி' என்பது ஒருவகை நாடகமே என்பார் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய பேராசிரியர். அவர் பண்ணை வெளிப்படுத்தும் வகையால் அமைந்துள்ள பாட்டு பண்ணத்தி என்று இச்சொல்லிற்கு விளக்கம் தருகிறார். மேலும் கூத்தர்கள் மன்னர்களின் அவைக்களத்தில் அவர்களைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்றுத் திரும்பும் வழியில் பரிசில் பெறாத கூத்தர்களை ஆற்றுப்படுத்தும் செய்தியும் தொல்காப்பியத்தில் பேசப்பட்டுள்ளது.

> "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
> ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
> பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
> சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்"
>
> (தொல். பொருள். புறம். *30*)

என்னும் இந்நூற்பா வரிகள் கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்கிற பல்வேறு நாடகக் கலைப்பிரிவினர்களையும் கலைவாழ்க்கைக்கு ஆதரவு

தரும் மன்னர்களையும் குறுநில மன்னர்களையும் வள்ளல்களையும் நமக்கு அறிமுகம் செய்கின்றன.

சங்க இலக்கியத்துள் இந்நாடக மரபு வெகுவாகப் பின்பற்றப் பட்டதைப் பல்வேறு பாடல்கள் தெரிவிக்கின்றன. சங்க இலக்கியப் பாடலாசிரியர்களின் பெயர்களில் தமிழ்க் கூத்தனார் *(புறம்.344)*, உறையூர் முதுகூத்தர் *(அகம், 137,329)*, மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன் தேவனார் *(அகம்.164)*, மதுரைக்கூத்தனார் *(அகம்.334)*, மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் *(அகம். 348, நற். 273)*, வெம்பற்றூர் கண்ணன் கூத்தன் *(குறுந். 362)* என்பன கூத்தர் மரபின் செல்வாக்கை நமக்குத் தெளிவுறக் காட்டும்.

மலைபடுகடாம் என்னும் நூலுள் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் என்னும் புலவர் நன்னன் சேய் நன்னனைப் பாடியவிடத்துப் பொருநர்கள் பெறும் பரிசைப் பின்வருமாறு விவரித்துக் கூறுகிறார்.

> "மெல்லெனக் கூறி விடுப்பின், நும்முள்
> தலைவன் தாமரை மலைய, விறலியர்
> சீர்கெழு சிறப்பின் விளங்கு இழை அணிய,
> நீர் இயக்கன்ன நிரை செலல் நெடுந்தேர்
> வாரிக் கொள்ளா வரைமருள் வேழம்,
> கறங்குமணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை
> பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி,
> நிலம்தினக் கிடந்த நிதியமோடு அனைத்தும்
> இலம்படு புலவர் ஏற்ற கைந்நிறைய
> கலம்பெயக் கவிழ்ந்த கழல்தொடித் தடக்கையின்"
>
> *(மலை. 568 - 577)*

இவ்வடிகளினால் பொருநர், விறலியர் போன்ற நாடகக் குழு உறுப்பினர்களுக்கு மன்னன் அளித்த வெவ்வேறு வகையான பரிசுகள் பற்றிய விவரங்களை அறியமுடிகின்றன.

சங்க இலக்கியத்துள் 'வெறியாட்டு', 'வாடாவள்ளி' போன்ற பல்வேறு வகையான கூத்துகள் நடைபெற்றதற்கான செய்திகள் உள்ளன. பத்துப்பாட்டுக்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் 'வாடாவள்ளி' என்கிற கூத்தினைக் குறித்துச் சிறப்பான செய்திகள் தருகிறார். மேலும்,

> "நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த
> விசி வீங்கு இன்னியம் கடுப்ப....." *(பெரும். 55 - 56)*

> "பாடல் ஓர்த்து நாடகம் நயந்தும்"
>
> *(பட்டின. 113 வது அடி)*

என்னும் பாடல்களில் வருகின்ற 'நாடக மகளிர்', 'நாடகம்' என்னும் இச்சொற்கள் பண்டைய தமிழ் நாடக மரபை உணர்த்தி நிற்கும்.

கோடியர், பாணர், விறலியர், அகவுநர், வைரியர், கண்ணுளர், பொருநர் ஆகியோர் சங்க காலத்துக் கூத்து மரபினைச் சார்ந்தவர்கள் ஆவர். 'இந்திர விழவு', 'பங்குனி விழவு', 'உள்ளி விழவு', 'ஓண விழா', 'சுடர் விழா', 'பூந்தொடை விழா' ஆகிய பல்வேறு விழாக்களில் பல்வேறு வகையான கூத்துகள் நிகழ்த்தப்பட்டமையையும் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

கலித்தொகையில் *103*ஆவது பாடல் முல்லை நில மக்கள் தங்கள் எருதுகளைத் தொழுவில் கட்டிய பிறகு எல்லோருடனும் சேர்ந்து ஆடுகின்ற குரவைக் கூத்தினைக் குறிப்பிடுகின்றது. ஐங்குறுநூற்றில் இதே கருத்தினை 'வெறிப்பத்து' எடுத்தியம்புகிறது. நெய்தல் நில மக்கள் மதுவுண்டு கூத்தாடுகின்ற தன்மையைப் புறநானூற்றின் *24*ஆவது பாடல் கூறுகின்றது.

மேலும், பதிற்றுப்பத்துள் பரணர் கடல் பிறக்கு ஓட்டிய செங்குட்டுவனைப் பாடுமிடத்து,

"பாண்டில் விளக்குப் பரூஉச் சுடர் அழல
நல்நுதல் விறலியர் ஆடும்
தொல்நகர் வரைப்பின் அவன்உரை ஆனாவே"
(பதிற்று. *47 : 6-8)*

எனத் தெருக்களில் விறலியர் ஆடியதைச் சுட்டுகிறார். இதே நூலுள், அரிசில்கிழார் தகடுர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்கிற சேர மன்னனைப் புகழுமிடத்து,

"செய்யுள் நாரை ஒய்யும் மகளிர்
இரவும் பகலும் பாசிழை களையார்
குறும்பல் யாணர்க் குரவை ஆயரும்
காவிரி மண்டிய சேய்விரி வனப்பின்" (பதிற்று. *73:9-12)*

என இரவும் பகலும் குரவைக் கூத்து நடைபெற்ற செய்தியைக் கூறுவார்.

"மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டும் காணேன் மாண்தக் கோனை"
(குறுந். *31 : 1-3)*

என்னும் குறுந்தொகைப் பாடல் மகளிர் துணங்கைக் கூத்து ஆடியமையைக் காட்டும்.

இக்கூத்து மரபுகளின் தொடர்ச்சி சிலப்பதிகாரத்தில் வேத்தியல், பொதுவியல் என்கிற நிலைகளிலும், ஐந்திணை நிலப்பகுப்பு நிலையிலும்

(குன்றக்குரவை, ஆய்ச்சியர் குரவை, வேட்டுவர் வரி) வளர்ச்சி யடைவதைக் காணலாம். சிலப்பதிகாரக் கூத்துகளைச் சாந்திக் கூத்து, விநோதக் கூத்து, பிறவகைக் கூத்துகள் என்று மூன்று நிலைகளில் பிரித்துக் காண்பர்.

சாந்திக் கூத்தினுள் *108* கரணங்களை அடிப்படையாகக் கொண்டு அமைகிற சொக்கம், மெய், நாடகம் ஆகியவை அடங்கும். விநோதக் கூத்தினுள் குரவை, கல்நடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை முதலியவை காணப்படும். மூன்றாவதான பிறவகையினுள் வென்றிக் கூத்து, வசைக் கூத்து, பாண்டுரங்கம், கொடுகொட்டி, அல்லியம், மல், குடம், துடி, குடை, பேடு, மரக்கால், பாவை, கடையம் ஆகியன அடங்கும்.

சிலப்பதிகாரத்தின் அரங்கேற்று காதையில் மாதவியை அறிமுகப்படுத்தும் இளங்கோவடிகள்,

> "இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து
> பலவகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
> பதினோர் ஆடலும் பாட்டும் கொட்டும்
> விதிமாண் கொள்கையின் விளங்க அறிந்தாங்கு
> ஆடலும் பாடலும் பாணியும் தூக்கும்
> கூடிய நெறியின கொளுத்தும் காலைப்
> பிண்டியும் பிணையலும் எழிற்கையும் தொழிற்கையும்
> கொண்டவகை யறிந்து கூத்து வருகாலை"
>
> *(சிலம்பு. அரங். 12-19)*

என மாதவியின் கூத்தாடல் சிறப்பினைக் குறிப்பிடுகிறார். மேலும் அரங்கேற்று காதையில் கூத்துக்குரிய இசைக் கருவிகளின் இலட்சணங்கள், பண் இலட்சணங்கள் விளக்கப்படுகின்றன. இக்காதை மட்டுமன்றி வேட்டுவ வரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை போன்றனவும் கூத்துகளை அடியொற்றிய காதைகளாகும்.

சிலப்பதிகாரத்தோடு கதைத்தொடர்பு கொண்ட மணிமேகலையினுள்ளும் பல்வேறு கூத்து தொடர்பான செய்திகள் கூறப்படுகின்றன. இக்காப்பியத்தின் இரண்டாவதான 'ஊரலருரைத்த காதை'யினுள் மாதவி, மணிமேகலை ஆகிய இருவரின் பாடல், ஆடல் திறங்கள் வயந்தமாலை வழிக் கூறப்படுகின்றன.

> "வேத்தியல் பொதுவியல் என்றிரு திறத்துக்
> கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும்
>
> . . . . . . . . . . . . . .
>
> நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த
> ஓவியச் செந்நூல் உரைநூற் கிடக்கையும்
> கற்றுத் துறைபோகிய பொற்றொடி நங்கை"
>
> *(மணி. 2 : 18-32)*

என்கிற அடிகளில் மாதவியின் ஆடல், பாடல் திறங்கள் விவரிக்கப் படுகின்றன.

இதனையடுத்த 'மலர்வனம் புக்க காதையில்' 'பேடுகூத்து' என்கிற கூத்தினை மக்கள் கண்டு களிக்கும் காட்சி விளக்கப்படுகிறது.

"வாணன் பேரூர் மறுகிடைத் தோன்றி
நீணில மளந்தோன் மகன்முன் னாடிய
பேடிக் கோலத்துப் பேடு காண்குநரும்"

*(மணி. 3 : 123-125)*

என்கிற பாடல் அடிகள் இதனை உணர்த்தும்.

சிவபெருமானை அம்பலத்தாடுவான், கூத்தன் என்றெல்லாம் நாயன்மார்கள் அழைத்தனர். அபிதான சிந்தாமணி பாண்டரங்கம், கபாலம், கொடுகொட்டி என்பன சிவபெருமான் ஆடிய கூத்துகள் என்றும், சிவனின் அம்சமான ருத்திரன் கொட்டி, குரவை, குடம், குடை, வெறி, மல், பேடு, பாவை, கடையம், பாண்டுரங்கம், மரக்கால் ஆகிய கூத்துகளுக்கு உரியவராவார் என்றும் கூறுகின்றது.

இதைப் போலவே திருமகளின் ஆடலாகப் பாவையும், முருகனின் ஆடலாகக் குடி, துடி, என்பனவும், காமனின் ஆடலாகப் பேடு என்பதும் காணப்படுகின்றன.

சங்ககாலம் முதற்கொண்டு தமிழர்களின் வாழ்வியலோடு ஒன்றிப்போன கூத்து அரச செல்வாக்கோடும் வளர்ந்து வந்தது. பல்லவர் காலத்தில் தெருக்கூத்தின் செல்வாக்கை, "தெருக்கூத்தில் வேற்றுமொழிக் கதைகள் நுழைக்கப்பட்டிருக்கின்றன. அது கோயிற் கலையாக ஆடப்பட்டு வந்திருக்கிறது. கூத்திருமானியம் வழங்கப்பட்டது" *(அ. அறிவுநம்பி, தமிழகத்தில் தெருக்கூத்து, ப.15)* என்கிற செய்தி நமக்குத் தெரிவிக்கும். மேலும் முதலாம் இராஜராஜனின் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த கானபாடி, நாடகமய்யன், நிருத்தப்பேருரையன், திரைச்சேவகன், வாத்தியமாராயன் என்கிற தெருக்கூத்துக் கலைஞர்களின் தொழில் அடிப்படையிலான பெயர்களை South Indian Inscriptions Vol. II; Par -III (pp.261-268) நமக்குத் தருகிறது.

இக்கூத்துகள் 'கூத்து' என்கிற பெயரால் மட்டுமல்லாது நாடகம், விலாசம், சபா, அலங்காரம், சரித்திரம், வாசகப்பா, சரித்திரப்பா என்கிற பெயர்களாலும் தமிழகத்தில் அறியப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| நாடகம் | - | ஒட்ட நாடகம் |
| விலாசம் | - | கிருஷ்ண விலாசம் |

| | | |
|---|---|---|
| சபா | - | இந்திர சபா |
| அலங்காரம் | - | மார்க்கண்டேயர் நாடக அலங்காரம் |
| சரித்திரம் | - | நல்லதங்காள் சரித்திரம் |
| வாசகப்பா | - | இரணியன் வாசகப்பா |
| சரித்திரப்பா | - | சாரங்கதரன் சரித்திரப்பா |

தமிழ் மாநிலத்திலுள்ள தென்னார்க்காடு, வட ஆர்க்காடு, செங்கல்பட்டு, பாண்டிச்சேரி மாநிலம் ஆகியவற்றில் நடத்தப்படும் கூத்துகள் வடக்குத்திக் கூத்து, தெக்குத்திக் கூத்து என இடவகையாலும், ஆடும் முறையாலும் இருவகைப்படும். இரு கூத்துகளில் முன்னது வடஆர்க்காடு, செங்கல்பட்டுப் பகுதிகளிலும், பின்னது பாண்டிச்சேரி மற்றும் தென்னார்க்காடு பகுதிகளிலும் நடிக்கப்படுகின்றன.

தமிழகத்தின் வடபகுதியில் காணப்படும் இக்கூத்துக்களில் பெரும்பாலானவை பாரதக் கதையைத் தொடர்புபடுத்திச் செய்யப்பட்டவை ஆகும். இப்பகுதிகளில் காணப்படும் திரௌபதியம்மன் வழிபாடு அதற்குச் சான்றாகக் காணப்படுகிறது. பாரதக்கதைக்கு அடுத்த நிலையில் இப்பகுதியில் இராமாயண காவியத்தின் ஒரு சில பகுதிகள் கூத்து நாடக மரபிற்கு ஏற்றவாறு எழுதப்பட்டு நடிக்கப்படுகின்றன.

“பாரத கதா பாவ விமோசன” என்கிற இப்பகுதியில் வழங்கப்படும் பழமொழியும் பாரதக் கூத்துகளைத் தழுவி எழுந்ததே. பலர் பாரதக் கதையினைக் கூத்தாக நடத்துவதற்கு நிலங்களைத் தானமாக அளித்துள்ளனர். கருங்குழி ஊரில் எட்டு ஏக்கர் நிலத்து வருவாயை இன்றும் மானியமாக அளித்து வருகிறார்கள். இது ‘கூத்திரு மானியம்’ என்று அழைக்கப்படுகிறது. கூத்து நடைபெறும் இடங்களில் இறந்தவர்கள் மோட்சம் அடைய வேண்டும் என்பதற்காகக் ‘கர்ண மோட்சக் கூத்து’ என்பதையும், மழைக்காக ‘விராட நாடகம்’ என்பதையும் மக்கள் இன்றளவும் நடத்தி வருகின்றனர்.

பொதுவாகக் கூத்துகள் மார்கழி மாதத்தில் வைகுண்ட ஏகாதசி அன்று தொடங்கிவிடும். என்றாலும் மாசி மாதத்துச் சிவராத்திரியில் இருந்து புரட்டாசி மாத இறுதி வரையிலும் சிறப்பாக நடைபெறும். இத்தெருக்கூத்தினைக் குறித்து “மரக்கட்டைகளால் உருவான அணிகலன்களை உச்சி முதல் உள்ளங்கால் வரை பூண்டபடி பாடியாடுவதுதான் தெருக்கூத்தாகும். தெருக்கூத்து என்ற கலைக்குக் ‘கட்டை கட்டியாடும் நாடகம்’ என்பது சரியான விளக்கமாக அமையும்” (அ. அறிவு நம்பி, தமிழகத்தில் தெருக்கூத்து, ப.*2)* என வரையறுப்பர்.

இக்கூத்து நாடகம் இரவு முழுவதும் நடக்கும் ஒன்றாகக் காணப்படுகிறது. கதிரவனைக் கண்ட பிறகே இரவில் தொடங்கும் கூத்து முடிவுக்கு வரும். இதனை, "கூத்தாடி கிழக்கே பார்ப்பான்; கூலிக்காரன் மேற்கே பார்ப்பான்" என்கிற இப்பகுதிகளில் வழங்கும் பழமொழி உணர்த்தும். தெருக்கூத்து என்கிற பெயரில் அமையினும் சிறந்த நாட்டிய நாடகத்திற் குரிய தன்மைகளையும் இக்கூத்துகள் பெற்றுள்ளன. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் தமது *The Pageant of Tamil Literature* என்கிற நூலில், "Terukkuttu is a dance drama. But the dance is of the folk-art variety rather than of the classical Bharatha Natyam. I have seen variations in the way in which the different characters where to come on the stage with specific movements, dance varieties and Jathis" எனக் குறிப்பிடுவதைக் காணலாம்.

பொதுவாகக் கூத்துக்கான நாடகங்களின் வசனங்கள், காட்சி அமைப்புகள், பாடல்கள் ஏற்கெனவே திட்டமிட்டு எழுதப்பட்டவையாக இருந்தாலும், கூத்தரங்கங்களில் வந்துள்ள கேட்போர் மனநிலை, வந்துள்ளோர்களின் எண்ணிக்கை ஆகியவற்றால் நேரத்திற்கு ஏற்பச் சிற்சில மாற்றங்களோடு கூத்துகள் நடத்தப்பெறும். பொதுவாகக் கூத்தாடும் இடத்தில் அதிகமான பார்வையாளர்களைக் கூத்து நடத்துவோர் எதிர்பார்க்கின்றனர்.

"கூத்து ஆடறவன் சரியில் லேண்ணா
கூத்துப் பாக்கறவன் பாடு ததிங்கணத்தோம்
கூத்து பாக்கவறவங்க கொஞ்சமா இருந்தா
கூத்து ஆடறவங்க பாடு ததிங்கணத்தோம்"

என்கிற கூத்துக் கலைஞரான எஸ்.கே. அரங்கநாதன் பாடல் குறிப்பிடத்தக்கது.

இக்கூத்துக் கலையில் இடம்பெறும் அனைத்து நாடகக் கலைஞர் களிலும் 'கட்டியங்காரன்' என்பவனது பணி சிறப்பானது. இவனே அன்றன்று நடைபெறும் கூத்துக்கான ஒருங்கிணைப்பாளனாகத் திகழ்கிறான். இவனே அன்றைய கூத்தின் கதையைச் சுருக்கமாகக் கூறி, இடத்திற்குத் தகுந்தாற் போல் உரையாடல்கள் நிகழ்த்தி மக்களை ஆயத்தம் செய்கிறான். பிற நாடகங்கள் போல் அங்கம், களம் போன்ற திட்டமிட்ட வரையறைகள் ஏதும் இந்நாடக வகைக்கு இல்லை. ஆகையால் நேரத்திற்குத் தகுந்தாற் போல் கதையைச் சுருக்கவும் பெருக்கவும் செய்வதற்கான தளத்தைத் தம் உரையாடல் வழி கட்டியங்காரனே அமைக்கிறான். மேலும் கட்டியங்காரனே கூத்து மேடையில் நடத்திக் காட்ட முடியாத காட்சிகளை வசனத்தால் சரி செய்கின்றவனாகவும் காணப்படுகிறான். இரவு முழுமையும் நடக்கும் கூத்தில் மக்கள் கண் விழித்திருப்பதற்காக அவ்வப்பொழுது விகடப் பேச்சுக்

களையும் அவனே நிகழ்த்துகிறான். இங்குப் பதிப்பிக்கப்படும் 'சிறுத் தொண்டர் மான்மியம்' என்ற சிறுத்தொண்டர் நாடகத்திலும் கட்டியங் காரனின் பணி அளவிடற்கரியது.

இந்நாடகம் படிப்பதற்கும் பார்ப்பதற்கும் என மதுரை முத்துப் புலவர் என்னும் அறிவானந்த அடிகளால் உருவாக்கப்பட்டது. கடந்த *20*ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இதன் நூலாசிரியர் வாழ்ந்துள்ளார்.

"முன்னியற்றிப் பலர னுபவங் கொண்டாட
மூதுணர்ந்தோர் பலர்கண்டுங் கேட்டு ணர்ந்த
இன்னூலை **யுவவருட மிடப மாதம்**
இரும்பிலிக் குறிச்சியில்வாழ் இசைவல் லோனும்
வன்னியரின் குலமுதித்த உபாத்தி யாயன்
மதியுள்ளான் **துரைசாமி** கேட்டுக் கொண்ட
தன்னன்பின் முயற்சியினாற் றமுவல் தந்து
தக்கநலஞ் செவிக்கின்ப மாதர் கென்றே"
*(பா. 18 பாயிரம்)*

என்னும் இந்நூலின் பாயிரப்பாடல் இந்நூல் தோன்றிய வருடமாக கி.பி.*1936*-ஐ (யுவ வருடம்) குறிப்பிடுகிறது. மேலும் இந்நூலாசிரியரைப் புரந்தவரான இரும்புலிக் குறிச்சியில் வாழ்ந்த, இசையில் தேர்ந்த அனுபவம் கொண்ட துரைசாமியையும் குறிப்பிடுகிறது.

இந்நூலாசிரியர் தமக்கு இந்நூல் செய்யப் பெரிதும் துணையாக இருந்தவை பெரிய புராணம் என்னும் 'சாகாப் புராணமும்', மதுரை முத்துப் புலவர் எனத் தாம் அழைக்கப்பட்ட காலத்தில் எழுதிய பிறிதொரு சிறுத்தொண்டர் குறித்த நூலுமாகும் என்பதை நினைவுகூர்கின்றார்.

"தளம்பெரிய புராண மறுபத்து மூவர்
சரிதமென்னுஞ் சாகாப் புராண மென்றும்
வளந்தமிழி லியற்றிச் சைவசமயங் காத்த
**மாதவச்சேக் கிழாரவர்கள்** மலர்தாள் போற்றி" *(பா. 9)*

என்னும் அடிகளும்,

"சாது சர்ச்னர்க் கருள்செய் யீசனாய்
சனகர்நால்வர் ஞானகுருவாந் தட்சிணா மூர்த்தி
நாவ லர்க்குமடி யர்க்கும் அடியவன்
நண்பன்ராசன் **மதுரைமுத்துக்** கென்றும் அனுக்ரக"
*(பா.8)*

என்னும் அடிகளும் முறையே இந்நூலுக்குக் காரணமாய் இருந்த சேக்கிழாரையும், அறிவானந்த அடிகளின் இயற்பெயரையும் குறிப்பிடுகின்றன.

மேற்படி நூல்களை ஆதாரமாகக் கொண்டு சிறுத்தொண்டர் நாடகத்தை மேடை நாடகமாக இயற்றியவர் மதுரை முத்து என்னும் அறிவானந்தர் என்கிற செய்தியும், இந்நாடகத்தை உருவாக்கும் பொழுது ஆசிரியர் எவற்றைக் கவனத்தில் கொண்டார் என்கிற செய்திகளும் ஆசிரியர் கூற்றாகவே கீழ்க்காணும் பாடலில் காணப்படுகின்றன.

"அதுவுமன்னோ னனுபவத்தின் பாடங் கேட்டு
ஆதியந்தஞ் சமய நவரசங் கண்டேற்றிப்
புதியபல வன்னிமட்டிற் றருவுஞ் செய்யுட்
புனிதபல தாண்டகமும் பக்தி சாரம்
இதுவெனக் கேட்பார்க்குத் தத்துவமுஞ் சொல்லி
இறுதிவரை யுரையெழுதி அளித்தேன் முன்னம்
மதுரை முத்துப் புலவனென்ற நாமம் நிற்க
**வாழறிவானந் தனெனும்** நாமத் தோனே" *(பா.19)*

என்கிற இப்பாடல் நூலாசிரியர் அறிவானந்தர்; இவர் பல புதிய இசை மெட்டுகளை நூலில் அமைத்தார்; பாடல்களின் இடையிடையே தத்துவங்களைக் கூறினார்; நூல் முழுமைக்கும் உரையெழுதினார்; தாம் தழுவிச் செய்த இந்நாடகத்திற்குப் பெருமை சேர்த்தார் என்கிற செய்திகளை நமக்குத் தருகிறது.

இந்நாடகத்தை நடிப்போர்களும் இந்நூலாசிரியரான அறிவானந்தரை வணங்கிய பிறகே நூலின் கதையைக் கூறப் புகுவர் என்பதை இந்நாடகக் கையெழுத்துப் பிரதி ஒன்று நமக்கு உணர்த்துகிறது.

"யோகாட்சர குருபர ரஹர எழில் திரு
வருணிதியே பரநிதியே
இருடிகள் குணமதியே பதங்கெதியே - எளியேன்
செய்துதி பதியே **அறிவானந்த**" (பா. *10)*

என்கிற பாடலடிகள் இதனை உணர்த்தும். மேலும் பாயிரத்தின் வாழிப் பாடல் ஒன்று,

"முத்தியின்னூல் சரித பாயிரமேல் வாழி
மூதறி **வானத்தமுமேல்** வாழி வாழி"

என அறிவானந்தரை வாழ்த்துகிறது.

இந்நூல் தென்னார்க்காடு மாவட்டம் முதல் திருநெல்வேலி மாவட்டம் வரையிலுள்ள பகுதிகளில் வாழ்ந்த பல்வேறு அறிஞர்களால் சிறப்பிக்கப்பட்டது என்பதை இந்நூலுக்குப் பல்வேறு தமிழறிஞர்கள் வழங்கிய சாற்றுகவிகள் தெளிவுபடுத்துகின்றன. உடையார்பாளையம் கனகசபை, ஈச்சங்காடு வெங்கட்ராம ஐயங்கார், அரியலூர் அரங்கசாமி

உபாத்தியாயர், கும்பகோணம் சா. சுவாமிமலை, திருவைகாவூர் கலியமூர்த்தி படையாச்சியார், நாச்சியார்கோயில் கந்தசாமி பிள்ளை, திருநெல்வேலி சிவராமலிங்க சுவாமிகள் எனத் தமிழ்நாட்டின் வடபகுதியிலிருந்து தென்பகுதி வரையிலும் உள்ள புலவர்கள், அறிஞர்கள் இந்நூலுக்குச் சாற்றுக்கவிகள் பாடிச் சிறப்பு செய்துள்ளனர்.

இக்கூத்து சிறுத்தொண்டர் பிறந்த சித்திரை மாதம் திருவோண நட்சத்திரம் அன்று நடிக்கப்படுகிறது. திருசெங்காட்டாங்குடியில் பிறந்த சிறுத்தொண்டருக்கு இப்பகுதியில் மக்கள் விழா எடுத்துச் சிறப்புக் செய்கின்றனர். பன்னிரு நாட்கள் சிறுத்தொண்டர் குறித்த விழா நடக்க வேண்டும் என்பதையும், ஒவ்வொரு நாளின் போதும் விழாவில் என்னென்ன நடக்க வேண்டும் என்பதையும் இந்நூலின் இருபத்தைந்தாவது பாயிரப் பாடல் விவரிக்கிறது.

இக்கூத்துநூல் முழுக்க முழுக்கச் சேக்கிழார் இயற்றிய புராணத்தை அடியொற்றியே செய்யப்பட்டுள்ளது. பெரியபுராணத்தில் 'வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்' என்கிற ஏழாவது பகுதியில் சிறுத்தொண்டரின் சிவபக்தி சுருக்கமாக *88* பாடல்களில் விளக்கம் பெறுகிறது. சில ஒப்புமைகளுக்காக இரு நூல்களிலிருந்தும் சில குறிப்புகள் இங்குத் தரப்படுகின்றன.

இவர் குடியைக் குறிப்பிடும் சேக்கிழார்,

"கருநாட்டக் கடைசியர்தங் களிகாட்டுங் காவேரித்
திருநாட்டு வளங்காட்டுஞ் செங்காட்டங் குடியாகும்"
(பெரிய. சிறுத். பா. *1)*

என்பார்.

"பாரார்ந்த திருச்செங் காட்டின் பரஞ்சோதி சரிதஞ் சொல்ல
ஏரார்ந்தென் வாக்க கத்து மிருந்தென்றுங் காக்கப் போற்றி"
*(சிறுத். நாடகம் பா. 1)*

என அறிவானந்தரும் இதே செய்தியைக் கூறுகிறார்.

நரசிங்கப் பல்லவனின் அவரது சேனாதிபதியாக விளங்கிய சிறுத்தொண்டர் வாதாபி மீது படையெடுத்து, வெற்றி கொண்டு திரும்பியதை,

"மன்னர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வகையுரைத்துப்
. . . . . . . . . . . . . . . . . . யிகலரசன் முன்கொணர்ந்தார்"
(பெரிய. சிறுத். பா. *6)*

எனப் பெரிய புராணம் கூறும். இதுவே,

"மெய்யன் நரசிங்கபதி விடைய னாகி
வேந்தர் பலபகை யறுத்த விஜயங்கண்டு
துய்ய மனதுடன் பணியின்பின் தொடல்விலானாய்
. . . . . . . . . . . . . . . . . .
அறிந்தில்ல துறவடைந்து வந்தே னானே"

(சிறுத். நாடகம் பா. *16)*

என சிறுத்தொண்டரின் வாய்மொழியாக நாடகத்தினுள் கூறப்படுகிறது.

சிறுத்தொண்டர் தம் செல்வத்தை எல்லாம் சிவ அடியார்களைப் பேணி, பாதுகாத்து, அவர்களுக்கு உணவு அளிப்பதில் செலவிட்டு வாழ்ந்து வந்தார் என்பதை,

"நறையிதழித் திருமுடியார் அடியாரை நாடோறு
முறைமையினில் திருவமுது முன்னூட்டிப் பின்னுண்ணு
நிறையுடைய பெருவிருப்பா னியதியா கக்கொள்ளும்
துறைவழுவா வகையொழுகுந் தூயதொழில் தலைநின்றார்"

(பெரிய. சிறுத். பா. *13)*

என்கிற பாடல் குறிப்பிடும். இதனை,

"காக்குமறை பரசிவனார் கழலன் பார்ந்த
கற்றாரில் அற்றாரின் களைகண் டேந்தி
ஏக்கமற வன்னமிட எண்ணமுற் றேற்கு
இதங்கூட்டுந் தேவியுன் சம்மதங் கேட்டேனே"

(சிறுத். நாடகம். பா. *28)*

என இந்நாடகத்தில் சிறுத்தொண்டர் தம் மனவிருப்பத்தை மனைவியிடம் தெரிவிப்பதாய் அமைகிறது.

சிறுத்தொண்டர் இல்லாத நேரத்தில் சிவயோகியாக வந்த சிவ பெருமான், சிறுத்தொண்டரின் மனைவியிடம் உம் கணவர் வந்தால்,

"கண்ணுதலிற் காட்டாதார் கணபதீச் சரத்தின்கண்
வண்ணமலர் ஆத்தியின்கீழ் இருக்கின்றோ மற்றவர்தா
தண்ணினா னாமிருந்த பரிகரைப்பீ ரென்றருளி
யண்ணலார் திருவாத்தி யணைந்தருளி யமர்ந்திருந்தார்"

(பெரிய. சிறுத். பா. *41)*

எனக் கணபதீச்சுரத்திலுள்ள ஆத்தியின் அடியில் தம்மை வந்து காணுமாறு கூறிச்சென்ற செய்தியே இந்நாடகத்திலும் கூறப்படுகிறது.

"சொல்லும் கணபதிவனம் முன்னிலே
. . . . . . . . . . . . .

தீர்த்தமுஞ் சிறந்தி ருக்குந் திண்ணமே - அதில்
ஆத்தி யொன்று பட்டிருக்கு முன்னமே
ஆத்தியடி வீற்றி ருப்பேன் போற்றியுன் - புருஷனுக்குச்
சாற்றிவரச் சொல்லுவாய் நீஅங்கனே"

(சிறுத். நாடகம். பா. 103)

என இந்நூலும் சிவனடியார், நங்கை என்னும் பெயர் கொண்ட பரஞ்சோதியாரின் மனைவியிடம் தாம் இருக்கும் இடத்தைக் கூறுவதாக அமைகிறது.

இவை போலவே இரு நூல்களிலும் இறைவன் சிறுத்தொண்டரிடம் மாமிசம் கேட்டல்; சிறுத்தொண்டரும் அவர் மனைவியும் தம் ஒரே குழந்தையை இறைவனுக்கு உணவாகச் சமைத்தல்; இறைவன் அருளால் குழந்தை சீராளன் உயிர் பெற்று எழுதல் என்கிற செய்திகளும் மாறுபடாமலேயே அமைகின்றன.

மேலும் பெரிய புராணத்தில் வருகின்ற சிறுத்தொண்டர், அவரின் மனைவி திருவெண்காட்டு நங்கை, ஒரே குழந்தையான சீராளத் தேவர், பணிப்பெண் சந்தனம், திருஞானசம்பந்தர், சிவயோகியாக வந்த சிவ பெருமான் ஆகியோரே இத் தெருக்கூத்து நாடகத்திலும் இடம் பெறும் முக்கிய பாத்திரங்களாவர். இந்நாடகம் மக்கள் முன்பு இரவு முழுவதும் நடத்தப்பட வேண்டிய ஒன்று என்பதால் இந்நாடக ஆசிரியர் அறிவானந்தர் கீழ்வரும் புதிய பாத்திரங்களை நாடகத்தில் சேர்த்துள்ளார். மேலும் இந்நாடகம் இடையூறு இல்லாது நடக்க வேண்டிக் கட்டியங்காரன் கணபதியையும், சரஸ்வதியையும் அழைத்து அருள் வேண்ட, அவர்களும் தோன்றி அருள் வழங்குவதாய் நூல் தொடக்கத்திற்காகச் சில பாத்திரங்களைப் படைத்துள்ளார்.

| | | |
|---|---|---|
| நாரதர் | - | காட்சி ஆரம்பத்தில் சிவனிடம் சிறந்த சிவத் தொண்டரான சிறுத்தொண்டர் குறித்த உரையாடலை நிகழ்த்தி நாடக வளர்ச்சிக்கு அடிகோலியவர். |
| கணபதி, சரஸ்வதி | - | நாடகம் சிறப்பாக நடந்தேற அருள்புரிந்த தெய்வங்கள் |
| பாதைசாரிகள் | - | சிவ அடியார்கள் எவரும் தமது இல்லத்தில் உணவு உண்ணாது இருக்கும் குறிப்பிட்ட நாளில் சிறுத்தொண்டர் பெயர் சுட்டப்படாத சிலரிடம் சிவ அடியார்கள் தங்கிய இடம் குறித்து வினவுவதாய் அமைக்கப்பட்டவர்கள். |

| | |
|---|---|
| இடையர்கள் | சிறுத்தொண்டர், தாம் இல்லாமையால் தமது வீட்டில் உணவு உண்ணாது திரும்பிய யோகி வடிவில் வந்த சிவனைத் தேடிய இடத்தில் வழியில் எதிர்ப்பட்ட இடையர்களிடம் உரையாடுவது என்ற நிகழ்விற்குப் பயன்பட்ட பெயர்சுட்ட பெறாத பாத்திரங்கள் |
| சட்டாம்பிள்ளை | சீராளத் தேவன் பயிலும் வகுப்பின் தலைமை மாணவன் |
| சங்கரன்<br>நரசிம்மன்<br>நன்னுவையன்<br>பஞ்சாபகேசவனார் | சீராளத் தேவனோடு உடன் பயிலும் மாணவர்கள் |
| உபாத்தியாயர் | சீராளத் தேவனின் ஆசிரியர் |

அறிவானந்தர் என்னும் இந்நாடக ஆசிரியர் திருஞான சம்பந்தர் சிறுத்தொண்டரின் இல்லத்திற்கு எழுந்தருளி, உணவு உண்டு சென்ற விடத்து அவரைப் புகழ்ந்து நான்கு பாடல்கள் பாடியதாக இந்நாடகத்தில் அமைக்கிறார். இவை சம்பந்தர் தேவாரத்தில் இருந்து பெறப்பட்டவை. இவற்றுள்,

"நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
"

என்னும் பாடல் 'பழந்தக்காரகம்' பண்ணில் அமைந்ததும், 1-ம் திருமுறையில் தொகுக்கப்பட்டதுவுமாகும்.

"பைங்கோட்டு மலர்புன்னைப் பறவைகள் பயப்பூர
"

"கூராரல் இரைதேர்ந்து குளமுலவி வயல்வாழும்
"

"செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடியே
வெந்தநீ "

ஆகிய பாடல்கள் 'பஞ்சமம்' பண்ணில் அமைந்ததும், 3-ம் திருமுறையில் தொகுக்கப்பட்டதுவுமாகும்.

இந்நாடக ஆசிரியர் கதைப் பொருத்தம் கருதித் திருஞானசம்பந்தர் திருச்செங்காட்டங்குடியிலுள்ள சிவபெருமான் மீதும், அத்தலத்தில் வாழும் சிவ அடியவரான சிறுத்தொண்டர் குறித்தும் பாடிய பாடல்கள் 22-னுள் நான்கினைத் தேர்வு செய்து நூலில் இணைத்தமை குறிப்பிடத்தக்கது.

இந்நாடக ஆசிரியர் தமது நாடகத்தைப் பாட்டும் உரைநடையும் கலந்து அமைத்துள்ளார். பாடல்கள் விருத்தமும் கீர்த்தனையும் கொண்டு அமைகின்றன. கீர்த்தனைகளைக் கீழ் வருமாறு காண முடிகிறது.

*1)* இராகம் - தாளம் அமைந்த கீர்த்தனைகள்

*2)* இராகம் மட்டும் அமைந்த கீர்த்தனைகள்

*3)* தம் காலத்தில் மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்த இசை மெட்டுகளின் அடிப்படையில் உருவாக்கப்பட்டவை

இதே போல் இந்நூலில் நாற்சீர் கொண்ட அளவடி விருத்தங்களிலிருந்து *28* சீர்கள் கொண்ட கழிநெடிலடியில் அமைந்த விருத்தங்கள் வரை காணப்படுகின்றன.

உரைநடைப் பகுதி *1)* பாத்திரங்களின் உரையாடல் என்கிற நிலையிலும், *2)* அறிவானந்தர் பாடலுக்குத் தரும் உரைவிளக்கம் என்கிற நிலையிலும் அமைகின்றது. உரையாடல் என்கிற நிலையில் அனைத்துப் பாத்திரங்களுமே நாடகத்தில் உரையாடுகின்றன. கணபதி, சரஸ்வதி ஆகியோரோடு கட்டியங்காரன் என்னும் விதூஷகனின் உரையாடல், சிறுத்தொண்டர் இடைக்குலச் சிறுவர்களோடு நடத்தும் உரையாடல் ஆகியன நகைச்சுவைக்காகப் படைக்கப்பட்டுள்ளன.

இந்நாடகம் படிப்பதற்கன்றி நடிப்பதற்கென அமைந்தது. மேலும் தெருக்கூத்து நாடகங்கள் காண வருவோரின் கல்வித்தகுதி, இடச் சூழல், நாடகம் நடத்துவதற்கான கால அளவு ஆகியவற்றை மனதில் கொண்டே அமைக்கப்பெறும். ஆகவே சிறுத்தொண்டர் நாடக ஆசிரியரான அறிவானந்தரும் படிப்பதற்கும் நடிப்பதற்கும் எனச் சேர்த்து எழுதப்பட்ட நாடகங்களில் வரும் அங்கம்-களம், காட்சி, வகுப்பு-களம் என்கிற நாடகப் பிரிவுகளைத் தம் நூலில் அமைக்கவில்லை.

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் பக்தியோடு சேர்த்துச் சில சமூக நியதிகளையும் மக்களுக்குத் தெரிவிக்கும் மேலான கடமையைத் தெருக்கூத்து நாடகங்கள் செய்தன. கல்வியறிவில் பின்தங்கியும், மேலைநாட்டாரின் பணச்செலவு மிகுந்த கல்வியைத் தவிர்த்தும் வந்த மக்களுக்குத் தெருக்கூத்து நாடகங்கள் ஒரு காலத்தில் பள்ளிச் சாலைகளாகத் திகழ்ந்தன என்று கூறுதல் மிகையாய் இருக்காது.

வடஆர்க்காடு, தென் ஆர்க்காடு, செங்கல்பட்டு ஆகிய வட தமிழகப் பகுதிகள், புதுவை மாநிலப் பகுதி ஆகியவற்றில் தெருக்கூத்தின் பங்களிப்பு பேரளவில் இருந்தது. இந்நூல் பதிப்பிக்கப்படும் இத்தருணத்தில் தெருக்கூத்துகள் காலங்காலமாக மக்களிடம் ஏற்படுத்திய தாக்கத்தை மீளாய்வு செய்யவேண்டியதன் அவசியத்தை நமக்கு உணர்த்துகிறது.

அறிவானந்தர் போன்ற எத்தனையோ நாடகப் படைப்பாளிகளும் மேடைக் கலைஞர்களும் செய்து வைத்த தெருக்கூத்து நாடகங்கள் திரட்டப்பட வேண்டும்; தொகுக்கப்பட வேண்டும்; அச்சாக்கம் செய்யப்பட வேண்டும் என்பதையும் தெளிவுபடுத்துகிறது.

இதிகாச, புராணக் கருத்துகளைப் பொதுமக்களிடையே கொண்டு செல்லுவதற்கு இத்தகைய தெருக்கூத்து நாடக முறைகளும், கதாகாலட்சேப முறைகளும், வில்லுப்பாட்டு முறைகளும் பெரிதும் வழக்கத்திலிருந்தன. இக்கலைஞர்கள் அன்றைய புராணக் கதைகளோடு இன்றைய சமூகச் சூழல்களையும் இணைத்து மக்களிடையே செய்தியைப் பரப்பி வந்தனர். இவற்றை அழியாமல் பாதுகாக்கும் பொறுப்பு நமக்குரியதாகும். அவ்வகையில் இவ்வரிய நாடகத்தைப் பாதுகாத்து அச்சு வடிவில் உருவாக்குவதற்குரிய வாய்ப்பைப் பேராசிரியர் பொன். கோதண்டராமன் - பொற்கோ (துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம்) அவர்கள் மனமுவந்து வழங்கினார்கள். அவர்களின் ஈடுபாட்டாலும் முயற்சியாலுமே இந்நூல் அச்சு வடிவில் வருகின்றது. அவர்களின் அன்பிற்கும் ஈடுபாட்டிற்கும் நம் நன்றி உரியது. இந்நூலிற்கு அவர்கள் பல்வேறு பணிகளுக்கிடையிலும் சிறப்புரை வழங்கியுள்ளார்கள். அவர்கட்கு மீண்டும் நன்றி.

இந்நூல் உருவாவதற்கு இடைவிடாத முயற்சியை மேற்கொண்டு மிகுந்த ஆர்வம் காட்டியவர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன மேனாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களாவர். அவருக்கும் மிக்க நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்கின்றேன். இந்நூல் உருவாகும்போது அச்சுப்பணிகளில் பெரிதும் துணைநின்ற முனைவர் கி. ஜெயகுமார் அவர்கட்கு நன்றி.

இவ்வரிய நூலைத் தமிழுலகம் ஏற்றுப் போற்றும் என்று நம்புகின்றேன்.

**இ. சுந்தரமூர்த்தி**

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**மேனாள் இயக்குநர்** சென்னை - *600 113*

# முன்னுரை

சிறுத்தொண்டர் நாடகம் என்னும் இந்நூல் கி.பி. *1936* இல் ஒரு சேர நடிக்கவும் படிக்கவும் எழுதப் பெற்றதாகும். இதன் ஆசிரியர் மதுரை முத்து என்னும் அறிவானந்தர் என்பவர் ஆவார்.

இந்நாடகம் ஒவ்வொரு ஆண்டும் சித்திரைத் திங்களில் திருவோணம் அன்று சிறுத்தொண்டருக்குச் செய்யப்படும் குரு பூசையின்போது நடத்தப் பெறுகிறது. மக்கள் 'சீராளன் பாகு' என்ற ஒன்றை இந்நாடகம் நடக்கும் நாளில் செய்து, விரதம் இருந்து, அந்தணர்களுக்கு வேண்டிய கொடைகள் நல்கி, இரவில் பூசை செய்து உண்பது வழக்கம் என்பதை இந்நூலின் *24*-ஆவது பாயிரப்பாடல் தெரிவிக்கிறது.

இந்நூலில், திருச்செங்காட்டான்குடியில் அமைந்துள்ள சிறுத்தொண்டருக்கான கோயிலில் *10* நாட்கள் திருவிழா சிறப்பாக நடக்கும் என்றும், முதல் நாள் கோயிலில் ஓமம் வளர்த்தல்; இரண்டாம் நாள் அறுபத்தி மூன்று நாயன்மார்கள் ஊரை வலமாக வருதல்; மூன்றாம் நாள் நாயன்மார்களோடு பிற சைவ அடியார்கள் வலமாக வருதல்; நான்காம் நாள் திருஞான சம்பந்தர் ஊரை வலம் வருதல்; ஐந்தாம் நாள் சிறுத்தொண்டரின் மகனான சீராளத் தேவனைத் தொட்டிலில் இட்டு ஆட்டுதல்; ஆறாம் நாள் சீராளன் மற்றும் அவரின் ஆசிரியர் ஆகியோர் ஊர்வலம் வருதல்; ஏழாம் நாள் கயிலை சிவன் கொலுச்சிறப்பு; எட்டாம் நாள் பிச்சாடன மூர்த்தியாகச் சிவன் வருதல்; ஒன்பதாம் நாள் அன்று தேவியான உமையவளும், சிவனின் அடியவர்களும் வலம் வருதல்; பத்தாம் நாள் அன்று அமுது படைப்பும் மோட்சம் தரும் நிகழ்வும் நடத்தப்படுகின்றன என்று இந்நூலின் *24*ஆவது மான்மியப் பாடல் கூறுகிறது.

இவ்விதம் மிகவும் சிறப்பாக நடைபெறும் சிவன் கோயில் திருவிழாவில் பத்தாவது நாளன்று இரவு முழுவதும் சிறுத்தொண்டர் மோட்சம் அடைவதைக் குறிப்பாக உணர்த்தும் 'சிறுத்தொண்டர் நாடகம்' கூத்து நாடகமாக அரங்கேற்றப்படுகிறது.

இச்சிறுத்தொண்டர் நாடகத்திற்கு மூலமான நூலாகத் திகழ்வது பெரியபுராணத்தில் வரும் சிறுத்தொண்ட நாயனார் புராணமாகும். இது *88* விருத்தங்களில் அமைந்து விளங்குகிறது. மிக சிறிய அளவில் மட்டுமே எடுத்து விளக்கப்பட்ட, *63* நாயன்மார்களில் ஒருவரான சிறுத்தொண்டர் குறித்த விவரங்கள் யாவும் பல மடங்கு விளக்கமாய், விடியவிடிய நடத்தப்பெறும் கூத்து நாடக மரபிற்கு ஏற்பச் சிறுத்தொண்டர் நாடகமாக அறிவானந்தரால் இயற்றப்பட்டுள்ளது.

பொதுவாகக் கூத்து நாடகங்கள் தமிழ்நாட்டில் திருச்சிக்கும் வடக்கே அமைந்துள்ள பகுதிகளிலேயே செல்வாக்குடன் திகழ்கின்றன. ஆரம்ப காலத்தில் இக்கூத்து நாடகங்களுக்கு அரச செல்வாக்கும், அரவணைப்பும் இருந்தன. "முதலாம் இராஜராஜனின் 9-ம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த ஒரு கல்வெட்டின் மூலம் திருமூல நாயனார் நாடகமும், ஆரியக் கூத்தும் நடந்ததாக அறிய முடிகிறது" (S.I.I. Vol. IV Part V), சங்க காலத்தில் கூத்தர், பாணர், விறலியர், அகவுநர், புலவர், வயிரியர், கண்ணுளர், பொருநர் போன்றோர் கூத்துக் கலையை வளர்த்த பிரிவினர் ஆவர்.

"நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த
விசிவீங்கு இன்னியம் கடுப்ப"

என்றும்,

"பாடல் ஓர்த்து நாடகம் நயந்தும்"

என்றும் நாடகக் குறிப்புகளைப் பட்டினப்பாலை கூறுகிறது.

புறநானூற்றின் 32ஆவது பாடல் கூத்தரின் ஆடுகளத்தையும், மலைபடுகடாம் நூலின் 567-577 வரிகள் பாணனின் நாடகக் குழுவினது செயற்பாடுகளையும் விளக்குவதைக் காணலாம். சிலப்பதிகாரத்திலும் அரங்கேற்று கதையில் பல்வேறு கூத்துகளின் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. தமிழகம் முழுதும் சங்க காலத்தில் செழிப்புடன் திகழ்ந்த இந்நாடக வகை அரச மண்டபங்கள், குறுநில மன்னர்களின் நாளோலக்க மண்டபங்கள், ஜமீன் பிரிவினரின் மாளிகைகள் ஆகியவற்றில் சிறப்புடன் திகழ்ந்துள்ளமைக்கு நமது பண்டைய இலக்கியங்களே சான்றுகளாகும்.

காலத்தால் தென் தமிழகத்தில் செல்வாக்கு இழந்து, அரச குடும்பத்திலும் தனது செல்வாக்கை இழந்து இன்றைய காலகட்டத்தில் தெருக்கூத்து நிலையில் இக்கலை திகழ்கிறது. என்றாலும் மக்கள் விரும்பும் கலையாக, ஆடல் சார்ந்த நாடகமாக இது தமிழகத்தில் கோடைக் காலங்களில் நடைபெற்று வருகிறது.

"கூலிக்காரன் மேற்கே பார்ப்பான் கூத்துக்காரன் கிழக்கே பார்ப்பான்" என்பது பழமொழி. பகல் முழுவதும் உழவு மற்றும் பிற தொழிலினைக் கூலிக்காரர்கள் எவ்விதம் செய்வார்களோ அதைப் போலவே கூத்துக்காரர்களும் இரவு முழுவதும் கூத்தை நிகழ்த்துகின்றனர். இரவு முழுவதும் நடத்துவதற்கு ஏற்ற ஆடுகளம், கூத்தினைச் சோர்வின்றி மக்கள் பார்க்கும் வண்ணம் நாடகத்தில் கட்டியங்காரனின் பங்களிப்பு, ஊர்மக்கள் கூத்தினைப் பார்ப்பதின் மூலம் இறை யருள் பெறுவர் என்ற மரபு தழுவிய நம்பிக்கை ஆகியன ஓர் இரவு முழுவதும் கூத்தினை நடத்துவதற்கு ஏற்ற சூழல்களை ஏற்படுத்தித் தந்துள்ளன.

அதிகமாகத் தற்பொழுது பாரதக் கதைகளும் இராமாயணக் கதைகளும் கூத்துகளாக நடத்தப்பட்டு வருகின்றன. "பாரத கதா பாப

விமோசனோ" என்ற ஒரு சொல்லாடல் கூத்து நாடகங்கள் நடக்கும் இடங்களில் வழங்கப்பட்டு வருகிறது. இவற்றிற்கு அடுத்த நிலையிலேயே பிற புராணக் கதைகள் செல்வாக்குப் பெற்றுத் திகழ்கின்றன. அவ்வகையில் திருவிளையாடற் புராணம், பெரியபுராணம், கந்தபுராணம் போன்றன குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பெறுகின்றன. கங்கையம்மன் கூத்து, ஒட்டன் தரு போன்றனவும் கற்பனையால் புலவர்களால் படைக்கப்பட்டு வழங்கப்பட்டு வருகின்றன.

பெரியபுராணத்தில் ஒரு நாயன்மாராக வருகின்ற சிறுத்தொண்டர் என்ற பரஞ்சோதியாரின் கதை புராண வகையில் செல்வாக்குப் பெற்ற ஒரு கூத்தாகத் தென்னார்க்காடு முதலிய மாவட்டங்களில் நடைபெறுகிறது. "கள்ளக்குறிச்சி வட்டத்தில் பரஞ்சோதியார் பிறந்த பரணி நாளில் 'சிறுத் தொண்டர்' கூத்துகள் நிறைய நிகழும் என முனைவர் அ. அறிவுநம்பி கூறுகிறார். இந்நாடகத்தில் வரும் பகுதியில் சிறுத்தொண்டர் தம் வீட்டின் வாசலில் அன்னக் கொடி ஒன்றை நாட்டி, வரும் சிவனடியார்கள் அனைவருக்கும் உணவு அளித்தலால் இவ்வூர் பகுதியில் 'அன்னக்கொடி நாடகம்' என்றும் இந்நாடகம் வழங்கப்படுகிறது.

மக்கள் இந்நாடகத்தை மிகவும் பயபக்தியோடு பார்த்தனர் என்பதற்கு இதனுள் வரும் நாடகக் குறிப்புகளும் சான்றுகளாகத் திகழ்கின்றன. இந்நூலின் *236*ஆம் பாடலில் நாயனார் தம் மகனான சீராளத் தேவனை இறைவனுக்காக வேண்டி அவன் உடல் உறுப்புகளில் ஒவ்வொரு பாகமாய் அறுக்கிற வேளையில் "நமப்பார்வதி பதையே" எனக் கூட்டத்தார் குரல் எழுப்ப வேண்டும் என்கின்ற குறிப்புத் தரப்பட்டுள்ளது. மேலும் அறிவானந்தர் பாடலின் ஒவ்வொரு கண்ணி தோறும் "சூடம் எரிக்க வேண்டும்" என்கிற குறிப்பினையும் தருகின்றார். மக்களும் இந்நாடகத்தில் கருத்தொன்றி இருந்தனர் என்பதற்கு வேறு ஒரு குறிப்பினை முனைவர் அ. அறிவுடை நம்பி தருகிறார். "செல்லம்பட்டு என்ற கிராமத்தில் நடைபெற்ற சிறுத்தொண்டர் கூத்தின் போது சிவபெருமான் வேடம் பூண்ட கலைஞர் துறவி வேடமேற்று ஆடுபரப்புக்குத் திரும்புங்காலை, அவர் அருகாமையிலிருந்து கோவில் ஒன்றிலிருந்து வெளிப்போந்தார். அப்போது சேகண்டி, பம்பை முதலான கருவிகள் இசைக்கப்பட்டன". இச்செய்தியின் வழி இக்கூத்து நாடகங்கள் மக்கள் மனதை எவ்வளவு தூரம் கவர்ந்திருந்தன; ஒன்றச் செய்தன என்பனவற்றைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

சிறுத்தொண்டர் நாடகம் அடிப்படையில் பெரிய புராணத்தை மையமாகக் கொண்டே இயற்றப்பெற்றது. இதனை,

> ". . . . . . . . . . . . . சேக்கிழார் பெருக்கிச் சொன்ன
> பெரியபுராணத் தொகுதி பெற்று ணர்ந்தோன்"

என்னும் கனகசபைக் கவி சக்ரவர்த்தியின் சாற்று கவியிலுள்ள அடிகளால் அறியலாம். சேக்கிழாரின் சிறுத்தொண்ட நாயனார் புராணத்தை அறிவானந்தர் தம் நூலில் *290* பாடல்களாகப் பெருக்கி உரைக்கிறார்.

பெரியபுராணம் அடியவர்களின் வரலாற்றைப் படித்து மகிழ்வதற்காக எழுதப்பட்ட நூல். ஆதலால் அதற்கான தேவையான வரலாற்றுச் செய்திகளும், செறிவான வருணனைகளும் மட்டுமே நூலில் சேக்கிழாரால் எடுத்தாளப் படுகின்றன. இந்நாடகமோ விடியுமளவும் நடத்தப் பெறும் கூத்து சார்ந்த கலை. ஆகவே மூலக் கதையை அப்படியே ஏற்றுக் கொண்ட அறிவானந்தர் மூலக் கதையில் இல்லாதவற்றை உருவாக்கியும், அதில் சிறிதளவே கூறப்பட்ட செய்திகளைப் பலபட, வெகுவாக வருணனை செய்தும் 'சிறுத்தொண்டர் நாடகம்' என்கிற இந்நூலைச் செய்துள்ளார். மேலும் காப்பிய அமைதி பெற்ற பெரிய புராணத்தில் உள்ள ஓர் அடியவரின் வரலாற்றை மட்டும் இந்நூலாசிரியர் அறிவானந்தர் நாடகமாகச் செய்துள்ளதால் நாடகத் தன்மைக்கு ஏற்ப உரையாடல்கள், செய்யுள்கள், மக்களின் பொழுதுபோக்கிற்குப் பொருத்தமான சில நகைச்சுவைக் காட்சிகள், இசைமெட்டுப் பாடல்கள் ஆகியவற்றைச் சேர்த்து இந்நூலை விரிவுபடுத்தியுள்ளார். அவ்வகையில் கீழ்க்காணும் முறையில் பல உத்திகள் இந்நூலில் கையாளப்பட்டுள்ளன.

*1.* நாடகத்தில் மக்கள் ஒன்றுவதற்காக வேண்டி விதூசகன் பேசும் வேடிக்கைப் பேச்சுகள்.

*2.* சிறுத்தொண்டர் தம் வீட்டில் அன்னக் கொடியைப் பறக்க விட்ட பிறகு ஞானசம்பந்தர் வந்து அவருக்கு அருள் பாலிக்கும் நிகழ்ச்சிகள்.

*3.* திண்ணைப் பள்ளிக் கூடத்தில் அக்காலத்தைய கல்விமுறை எவ்விதம் இருந்தது என்பதைச் சீராளன் கல்வி பயிலும் நிகழ்வோடு இணைத்து விளக்குதல்.

*4.* சிறுத்தொண்டர் ஒரு குறிப்பிட்ட நாளில் எந்தச் சிவ அடியார்களும் வீட்டிற்கு உணவு உண்ண வராமல் போகவே மனம் வருந்திப் பாடும் பாடல்கள்.

*5.* சிவன் அடியவர் வடிவம் தாங்கிச் சிறுத்தொண்டர் இல்லாத நேரத்தில் அவர் இல்லம் வருதலும், நங்கை என்ற சிறுத்தொண்டரின் மனைவி அவரை உணவு உண்ண அழைத்தலும், அடியவர் 'பெண் மட்டுமே தனித்து இருக்கும் வீட்டில் புக மாட்டேன்' எனக் கூறி வாதிடுதலும் ஆகிய செய்திகளின் விரிவான பகுதிகள்.

*6.* சிவ அடியாரைத் தாம் இல்லாத நேரத்தில், தம் மனைவி திறமையாகப் பேசி உணவு உண்ணச் செய்யவில்லை என மனதிற் கருதிச் சிறுத்தொண்டர் மனைவியிடம் கூறிய கூற்றுக்கள்.

*7.* ஆத்தியடியில் சிவத் தொண்டராய் இருக்கும் சிவனோடு சிறுத்தொண்டர் செய்யும் வாத பிரதிவாதப் பாடல்கள்.

*8.* பெரிய புராணத்தில் இடம்பெறாத கதை நிகழ்வுகளைத் தன் மரணத்தை உணர்ந்த சீராள தேவனின் கனவு, அதைக் குறித்து அவன் தன் ஆசிரியரிடம் வினாவுதல், ஆசிரியர் பதிலுரை ஆகியன.

*9.* சீராள தேவன் தான் கற்ற யோக நெறிகளைக் கூறி, ஆழ்மனத் துயிலில் அமர்ந்த தன்னை எவ்விதம் உயிர்வதை செய்ய வேண்டும் என விளக்குமிடங்கள்.

*10.* பிள்ளைக் கறி சமைத்த பின்னர், நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருப்போர்களைப் பரவசப்படுத்தும் விதத்தில் சிவனடியார் சிறுத்தொண்டரிடம் விவாதிக்கும் தன்மையில் அமைக்கப் பெற்ற பாடல்களும் உரையாடல்களும்.

மேற்கண்ட இவ்வுத்திகளைப் பயன்படுத்திக் கதையை வளர்த்து இரவு முழுமைக்கும் நாடகமாக நடத்தத்தக்க விதத்தில் அறிவானந்தர் பாடல்கள், உரையாடல்கள் ஆகியவற்றையும் மிகவும் எளிமைப்படுத்தித் தந்துள்ளார்.

பாடல்கள் முழுவதும் பாரதி குறிப்பிடும், "எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினை யுடைய காவியமொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய் மொழிக்கும் புதிய உயிர் தருவோனாகின்றான்" என்கிற காவிய இலக்கணத்திற்கு ஏற்ப இந்நூல் செய்யப்பட்டுள்ளது எனலாம். இந்தக் கருத்து பாரதியால் பாஞ்சாலி சபதத்தை இயற்றிய *1912*இல் வெளியிடப்பட்ட ஒன்று. பாரதியின் எண்ணத்தினை அடியொற்றிச் சில ஆண்டுகளுக்குப் பிறகு இக்காவிய நாடகம் முழுமையும் எளிய மக்களை முன்னிறுத்தி அறிவானந்தரால் இயற்றப்பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இதுகாறும் அச்சுக்கு வராத நாடகமாக இது இருந்து வந்தது. இதனைத் தேடிக் கண்டுபிடித்துத் தந்தவர் இலக்கியம், இலக்கணம், மொழியியல் துறைகளைக் கற்றுத் தேர்ந்த உலகமறிந்த தமிழ் அறிஞர், இந்நிறுவனத் துணைத் தலைவர், சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் பொன். கோதண்டராமன் (பொற்கோ) ஆவார். அவர் தந்த கையெழுத்துப் படி முதல்முதலாக அச்சில் வருவதில் பெருமையும் மகிழ்ச்சியும் அடைகிறோம்.

இந்நூலைப் பதிப்பித்தவர் தஞ்சைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர், அரிய பல ஓலைச்சுவடிகளைப் பதிப்பித்துத் தமிழுக்குத் தந்தவர், நிகண்டு, இலக்கணம் போன்ற துறைகளில் பெரும் புலமை பெற்ற முனைவர் இ.சுந்தரமூர்த்தி ஆவார். அவருக்கு நன்றி.

**ச.சு. இராமர் இளங்கோ**

**முனைவர் சா. கிருட்டினமூர்த்தி**
**இயக்குநர்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# முகப்புரை

பெரியபுராணத்துள் சிறப்பிக்கப்படும் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் சிறுத்தொண்ட நாயனாரும் ஒருவர். பரஞ்சோதி முனிவர் என்னும் இயற்பெயருடைய இவர் அனைத்துக் கலைகளிலும் சிறந்து விளங்கினார். இவர், சிவனடியார்களுக்குத் திருஅமுது செய்வித்த பின்பு உண்ணும் வழக்கம் கொண்டவராக இருந்தார். சிவனடியார்களை வழிபடும்போது தன்னைத் தாழ்த்திச் சிறியராய்ப் பணிந்து, தொண்டு செய்ததால் சிறுத்தொண்டர் என்று அழைக்கப்பட்டார். பெரியோர்களின் வரலாற்றைக் கூறும் பெரியபுராணத்தில் இவர் சிறியராக இருந்து, பெரியராகப் பாராட்டப் பெற்றவர். தென்னார்க்காடு மாவட்டம், திருச்சி மாவட்ட வடக்குப் பகுதி, புதுவை மாநிலம் ஆகிய பகுதிகளில் சிறுத்தொண்டர் கதையை நாடகமாக்கி நடித்துவந்தனர். இந்நாடகம் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்று விளங்கி வருகின்றது.

சிறுத்தொண்டர் நாடகம்பற்றிய இந்நாடக எழுத்துருவைச் சென்னைப் பலகலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் பொற்கோ அவர்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்குத் தந்து, இந்த அரிய படைப்பை நூலாக வெளியிடும் பெரும்பேற்றை இந்நிறுவனத்திற்குத் தந்துள்ளார்கள்.

இந்நாடகம் சுமார் *120* ஆண்டுகளுக்கு முன்னர்த் திருச்சி மாவட்டத்தில் உடையார்பாளையத்தில் பிறந்த அறிவானந்த அடிகளார் அவர்களால் இயற்றப்பட்டது. . இந்நாடகம் இலக்கியத் தரமும் சிறந்த நாடகப் போக்கும் கொண்டதாக அமைந்துள்ளது.

ஒவ்வோர் ஆண்டும் சித்திரை மாதம் அமாவாசையின்போது இன்றும் இந்நாடகம் நடைபெறுகின்றது. அன்னப்படையல் விழாவில் இந் நாடகத்தை அரங்கேற்றுவதுடன் நாடகத்தைக் கண்டு களிப்பதில் மக்கள் பெரிதும் மகிழ்ச்சி கொள்கின்றனர். இந்நாடகம் படிப்பதற்கு எழுதப்பட்ட நாடகமாக மட்டுமன்றி, இசையோடு பாடி நடிப்பதற்குரிய கூத்து நாடகமாகவும் அமைந்துள்ளது. இந்நாடகப் பாடல்களுக்கு ஏற்ற இசை நுணுக்கங்களும், மெட்டுகளும்,

தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இந்நாடகத்தைநூல் வடிவில் கொண்டுவருவதற் கேற்ற பதிப்புப் பணியைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் இசுந்தரமூர்த்தி அவர்கள் மேற்கொண்டு, மிகச் சிறந்த ஒரு பதிப்பாக இதனை உருவாக்கியுள்ளார். சுவடிப்பதிப்பிலும், இலக்கிய ஆய்விலும், இலக்கண நுட்பத்திலும் ஆழங்கால்பட்டவராகிய பேராசிரியர் இசுந்தரமூர்த்தி அவர்களின் பதிப்புப் பணியில் இந்நூலை வெளியிடுவதில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பெருமைகொள்கிறது.

இந்நூலுக்குப் பாடல் முதற்குறிப்பகராதி, தாளம், மெட்டுகள் முதலியவற்றைத் தயாரித்து அளித்த முனைவர் இ. ஜெயகுமார் அவர்களுக்கு நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வியமைச்சர் முனைவர் மு.தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு பி.ஏ. இராமையா, இ.ஆ.ப., அவர்களுக்கும், கூடுதல் இணைச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலினை ஒளியச்சுக் கோப்புச் செய்த கணிப்பொறி உதவியாளர் திரு. சு.கண்ணனுக்கும் நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலினை அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இயக்குநர்

ஸ்ரீ
ஓம்பரப்பிரமனே நம:
ஓம்

# சிறுத்தொண்டர் சரித மான்மியம்

## காப்பு

1. உலககெலா மதிக்கப் பால னூனமு தளித்து முத்தி
நலமெலா மடைந்த மெய்யன் நனிசிறுத் தொண்டர் காதை
பலமெலா மிசைத்துப் பாட பரமன்மால் பிரம னோடு
வலமெலா மளித்த வக்ர துண்ட நீளடி வந்திப்பாம். (1)

## முருகன் துதி

2. தவமிகு தாதை தந்த தனையனை நூறி யுண்ணச்
சிவன்றனக் கீய்ந்தான் சீரைச் செப்ப விமலனோ ரொத்த
அவுணரை யணங்கி யானை யணங்கை கொண்டெங்குந் தானாய்ப்
பவனிசெய் வெற்றி வேலன் பரிபுரத் திருத்தாள் போற்றி. (2)

## கலைமகள் துதி

3. எத்தவமுங் கொண்டவர்தாய் குணமணி யாசன மாடை யெழில்காயத்ரி
யொத்தவரு மொருநிலைபெற் றாரவரின் சத்தியமு மோங்கி வாழ
சத்துவமே முதற்குணமு மெய்யாடை யணிதவகந் தாங்கி வேத
சத்தவரு ணாவிலெழுஞ் சத்தமிசை மலர்ந்தகலை சொல்தாய் போற்றி
(3)

## பயறணீச்சுரர் துதி

4. மயலறச் சனக னாதி மாவிரு டிகளும் வந்து
செயல்மிகு வகளக் காவில் திகழ்தவஞ் செய்தார்க் கேற்ற
வயலற மீந்துங் காத்தும் வாதவூர் வணிக ரீந்த
பயறணி நாதன் பாத பண்மலர் சென்னி சேர்ப்பாம். (4)

## ஸ்ரீனிவாசப் பெருமாள் துதி

5. தானிகர் தானாய் நின்று சகல ரட்சகனா யில்லம்
ஞானிக ளகமி ருந்தும் நன்னெஞ் சிற்றிருவைத் தாங்கி

யானியெவ் வுயிர்க்கு மின்றி யாதரித் தருட்கண் சாற்றுஞ்
ஸ்ரீனி வாசப் பெம்மானின் சேவடி தனைவந் திப்பாம். (5)

## திருமகள் துதி

6. ஒருமகளு மாகியு மெண்டிரு மகளுமாகியு மெவ்வொன்று மில்லா
வருமகளு மாகி மனநினைவி லெழுமகளாகி யறிஞ ருள்ளங்
குருமகளுமாய் ஜீவகுடி மகளு மாகி மால்குலவு நெஞ்சிற்
திருமகளுமாய் வாழுமா மகளின் பொற்பாதம் சென்னி வைப்பாம்.
(6)

## பரப்பரம்ம துதி

7. முத்திக்கு முன்னு மாகி முத்தி யாதிகளு மாகிச்
சத்திக்குச் சத்தி யாகிச் சகலசத் சித்து மாகிக்
கத்தவே ழவத்தை யற்ற துரியவா னந்த மான
வித்தக வறிவா னந்த விசுவத்தைப் பணிகின் றேனே. (7)

## குரு துதி

8. அனகனருள் முன்னோங்கப் புவிவீர சைவகுல ஆணி யாகத்
தினகர னோக்கிடை புவிவாழ்வென மொழிபோல் பலகலையுந் தேர்ந்தசுத்த
கனகமெனுங் கம்பர்கவி பிரசங்க நாவலனாங் கருணை பூத்த
கனகசபை கவிராஜ குருமலர்த்தாள் அனுதினமுங் கருத்துள் வைப்பாம்
(8)

## மணிவாசகர் துதி (வித்து முளை)

9. வேதவித்து பிரமவித்து ஞானவித்து விவிதவித்து விசேட வித்து
நாதவித்து கருணைவித்து அதீதவித்து புத்தகமாம் நன்னி லத்தில்
பேதமின்றிப் புதைத்தன்பு நீர்தெளித்துப் பெருமணி வாசக முளைத்த
போதமுளைக் காரணனை வாதவூரன் றன்னை போற்றிக் கொள்வோம்.
(9)

## நாயன்மார்கள் துதி (முளைதழை)

10. காத்தமுளை செழித்தெழுந்து கண்டன்பு வீர வைராக் கியங்கை
காத்து மிகவுளந் தழைத்துத் தவந்தழைத்துக் களைதழைத்து மக்களை
காத்தஇக பரத்தினுக்கும் பற்றொழிதல் சரத மெனக்கைப் பிடித்துக்
காத்தவறுபான் மூவர் ஏனையோர் கமலபதங் கருத்துள் வைப்பாம்.
(10)

## திருஞானசம்பந்தர் துதி (தழைபண் பூ)

11. தழைத்த வருட்டரு பருவகாலத்தே பூத்ததென தகைந்த ஞானஞ்
செழித்த வகம்பூத்துத் தயைபூத்து வாய்பூத்து மணம்திகழப் பூத்து
கொழித்த செகம்பூக்க விசைப்பண்மலர் களிஃதென்பர் கொள்க வென்றே
அழைத்தளித்த திருஞான சம்பந்த ரவரடிக்கே யடிமை கொள்வாம்.
(11)

## திருநாவுக்கரசு துதி (பூதேவாரத்தேன்)

12. பூத்தமலர் அலர்ந்தது தேன்மிக்குள துயினிப்புளது பூச்சுரும்பே
நாத்துடியா மனந்துடியா வுடல்துடியாப் பிணிபவத்தை நசிக்கும் நற்றேன்
கோத்த பூந்தேவாரத் தேனருந்தியே குறுகமுன் கூடு மென்றே
ஏத்திடு மெய்ஞ்ஞான குருவாக் கீசரடித் தாள்மேல் ஏற்றுவாழ்வாம்.
(12)

## சுந்தரமூர்த்தி துதி (தேவாமுதம்)

13. பசியது தவியாது அயராது துயிலாது பவனோய் துக்கம்
இசியாது மெய்ம்முயற்சி குறையாது தூண்டி விடுமித் தேவப்பால்
நசியாத வரமளிக்கு மேற்றுண்பீரென வழைக்கும் நல்லான் வாக்கு
பிசகாத பரஞான சுந்தரனார் மலர்ப்பதத்தைப் பிடித்து வாழ்வாம்.
(13)

## சிறுத்தொண்டர் துதி (அளிந்தபழம்)

14. சதம்பழுத்து செவிபழுத்து ஷளம்பழுத்து வினைபழுத்துத் தவத்தி னூக்கம்
இதம்பழுத்துக் குறிபழுத்து வுடற்பழுத்துக் கண்டபழுத்து இன்சொ லன்புச்
சிதம்பழுத்து புவிவாழ்வின் மதம்பழுத்து பந்த தொந்தசெயல் பழுத்துப்
பதம்பழுத்து அளிந்த பழமான சிறுத்தொண் டரடி சிரமேற் கொள்வாம்.
(14)

(சதம்-தன்னிலைமை-இதம்- உரிமை-சிதம். ஞானம்-பதம்-பக்குவம்)

## சேக்கிழார் துதி (உண்மை விளக்கம்)

15. பொய்ப்புலமை செவிகேளான் புறமதத்துக் கிச்சையிலான் புனித ஞான
மெய்ப்புலமைக் கொருமையுளான் சைவநெறி தழைத்தோங்க மேலோர் வாக்கு
வைப்பறிந்து வெளிவிரித்த வல்லான்மெய் வாழ்வினன்நன் மன்னன் சேவை
ஒப்புவி நற்பேரான் சேக்கிழார் திருவடிக்கே யுளங்கொண் டாள்வாம்.
(15)

## இந்நூலுக்கு அவையடக்கம்

16. முப்பதத்திற் கடைப்பதத்தின் கும்பகத்தாள் முடிசமந்து முதிர்ந்த முன்னோர்
மெய்பதத்தின் வாழ்ந்தறிய முத்தமிழ்த் தேன்கடல் குடித்த வித்வபாதன்
அப்பதத்தி னசடொழிய நன்னீர் கொண்டலம் புதல்போலறி விலேனென்
கைப்பதத்துட் கசடறுத்துக் கைக்கொள்ளு மெனத்துணிவாய்க் கழறி
னேனே. (16)

பொருள்:- முப்பதம்-மூன்றுகால் (ரேசகம், பூரகம், கும்பகம் என்ப) கடைப்பதம்-கும்பகம். தாள்-பாதம். முதிர்ந்த-பூரண. அப்பதம் - அழகிய திருவடி. அசடு-அழுக்கு, கசடு-குற்றம். கை-சிறுமை. பதத்துள்-சொல்லுள்

## இந்நூல் பிறந்தகாலம்

17. நிகழ்கலிஐ யாயிரத்தி யெண்பத்தி யெட்டில்
நின்ற சுபகிருது வைகாசி திங்கள்
அகமுகத்துஞ் சொற்பனத்துங் கருணை மூர்த்த
அறுமுகனார் தந்தமதி விளக்கத் தாலும்
புகலுமிதிற் பிழைதிருத்தந் தினமுஞ் செய்து
புலமை தந்த கலைவாணி தரிசனத்தாற்
சகமோங்க தந்த விந்த சரிதமாகுஞ்
சன்மார்க்கந் தரவிது நன்மார்க்க மாமே. (17)

## இந்நூலுக்கு உரை எழுதியகாலமும் ஆசிரியரும்

18. முன்னியற்றிப் பலர னுபவங் கொண்டாட
மூதுணர்ந்தோர் பலர்கண்டுங் கேட்டு ணர்ந்த
இன்னூலை யுபவருட மிடப மாதம்
இரும்பிலிக் குறிச்சியில்வா ழிசைவல் லோனும்
வன்னியரின் குலமுதித்த உபாத்தி யாயன்
மதியுள்ளான் துரைசாமி கேட்டுக் கொண்ட
தன்னன்பின் முயற்சியினாற் றமுவல் தந்து
தக்கநலஞ் செவிக்கின்ப மாதர் கென்றே. (18)

19. அதுவுமன்னோ னனுபவத்தின் பாடங் கேட்டு
ஆதியந்தஞ் சமய நவரசங் கண்டேற்றிப்
புதியபல வன்னமெட்டிற் றருவுஞ் செய்யுட்
புனிதபல தாண்டகமும் பக்தி சாரம்

இதுவெனக் கேட்பார்க்குத் தத்துவமுஞ் சொல்லி
இறுதிவரை யுரையெழுதி யளித்தேன் முன்னம்
மதுரைமுத்துப் புலவனென்ற நாமம் நிற்க
வாழறிவானந் தனெனும் நாமத் தோனே. (19)

## அன்னதான விரதங் காத்தல்

20. அன்பர்காள் கேளுமிச் சிறுத்தொண்ட நாயனார்
அரிய குருபூசை விரதம்
ஆதிமத் யாந்தமுங் கொலைகளவு பொய்வஞ்சம்
ஆங்கார கோப காமம்
இன்ப தாம்பூல மெச்சிற்பொடி சுருட்டொடும்
இகழ்பு லால்மது உண்டலும்
இத்திருப் பணிசெயக் கடன்பட்ட பேரிவை
இழந்த னாச்சார மின்றி
முன்புளோ ரனுபவங் கண்டுகேட்டுச் சைவ
முறைவழா திரவு பகலும்
மூதுணருஞ் சாட்சிக் கடங்கிச் சிவசிந்தையொடு
முதிர்தயை சாந்தப் பரனாய்
என்புருகு பக்தியி லிருந்தன்ன மிட்டவரின்
எழிலு ருபடக் காட்சியும்
இயல்சரித பஜனையு மாண்டாண்டுஞ் செய்வரேல்
இகபர சுகம டைவரே. (20)

## சிவநாமப் பெருமை

21. தீதிலருட் குருபூசை யதிலு மேலாஞ்
சிவபக்தி நிறைசரித மான தாலும்
ஓதுவது மிரவுபகல் சிவநாமச் சொல்லோசை
எழிலரு ளிறைக்கு மானந் தங்காண்
கோதுரைக்கிற் றிருப்பதிக்குச் செல்லு மாக்கள்
கோவிந்த வென்றுங் காவடி கொள்வோர்கள்
ஆதியந்த மரகரா வெனவே சத்தம்
அறைவதேன் இதுவிகழ்ோ வறிவு ளோரே. (21)

22. அழகுளவோர் வாலீபன் வாலீ ப்ப்பெண்
ஆசைகொடு விணைந்த சுகநினைவைப் போலும்
தழையுந்தன் குடும்பத்தி னினைவைப் போலும்
தனங்கண்டார் நினைவுமொக்கக் கரண மூன்றும்

குழையவனு தினத்தி லொருதரம் பரிந்து
குறித்துசிவ வெனிலன்று செய்த பொல்லாப்
பிழையிரவி கண்டவிருட் போலா மென்னில்
பிறப்பொழிய விதைவிடவுஞ் சிறப்பென் மாதோ. (22)

## சீராளன் பாகை செய்யும் முறையும் சடங்குமுறையும் அதனால் வரும் பலனும்

23. சீராளனாம் பிள்ளை பாகைசெயு முறைதனைச்
செப்பவுங் கேள்நண்பரே
செய்யுமிசை ப்ராமணப் பிண்டமுஞ்
செயல்பிரமச் சிருட்டியுமீ தாகையால்
தீதறச் செய்வோர்கள் ஆச்சாரபரனா கஸ்னானமுந்
சுத்த உடையுஞ்
செய்துடுத் திப்பொடி தாம்பூலம் நீக்கியுஞ்
செயுமிடஞ் சுத்தியாயுந்
தாராளமாய் வொமாவு படிநா லொடுந்
தக்க தினைமாவு
மைங்கால் சாருளுந்தின் மாவு மூவரைக்
காலொடுந் தாக்கிப்
பினிலவங்க மேலம் தகுவால் மிளகு
சாதிக்காய் இவ்வகை
பலந்தான் ஒன்று சாதி பத்ரி தக்க பைங்கற்பூரங்
குங்குமப் பூவகை யிற்றானெடு வரைப்பலந்தான்
நேரான கண்டிரண் டரைபலங் கொண்டுபடி
நிலைக்கொம்புத் தேன்மூவரை
நெகிழச் சுரக்கைமுன் கலுவத்தி லிட்டுதேன்
நேர்சிறு கட்டரைத்து
நினைவாக மாவொடு பிசைந்து கல்லுரலிட்டு
நெறிமணியு மொன்றிடித்து
நேர்ந்து மெழுகாம் படிதனிதேனை யுளவுபடி
நீவிட்டடித் திறுகலாய்
பேரான வைத்து மொருகதை வேலைக்காரனாய்ப்
பிழையிலா விரதமுளனாய்
பிறர்க்குக் காணாமலே தெய்வசன்னிதி யில்வாய்
பேசாமற் றனிளனாகிப்
பேதமற் றச்சமொடு திரைமறைந் தவையவப்
பிழையறச் செயல்நன்றதாம்

பின்னையின் றலைதென்னை கொப்பரைக்காய்ச் சிறுக
பீடுறவமைத்தல் நலமே. (23)

## பாகை செய்யும் விபரம்

24. நலமாக வேகணக் கிட்டுபிடி நீளமும்
நவிலு மிருதோளி னகலம்
நாட்டுத லிரண்டு பிடிகைநான்கு வுடல்மூன்று
நல்லிடை யின்கீழ் நான்கதாம்
நாட்டிச் சிரமொன்று பிடிபேதமற வொருபலகை
நத்தவே செய்யு மக்கால்
நால்வர்களின் பாடல்க ளுரைத்துத் தியானத்தில்
நல்குமப் பாகை யுருபில்
பலமாக சாமுத்ரிகா லட்ச ணங்கள்
படைத்த தாய்க்கண் டதற்கு
பகராடை மாணிமலரலங் கார மிட்டுபின்
பரனுக்கு ப்ரீதி யாகப்
பக்குவப் பிராமணர்கள் யாகாதி கன்மங்கள்
பண்ணி யாகூதி தந்து
பல்லாண்டு கூறியும் நிவேதனத்தொடு தூப
/ பாக தீபங்க ளேந்தி
புலனாக வாத்திய முழங்க வந்தணர்கட்கு
பூரி தானங்க ளீந்து
புகலறத் தாம்பூல சந்தன மளித்துமலர்
புகழரிசி யட்சதையிடப்
போற்றி சிவபசனையொடு தொண்டர்கை யேந்திநகர்
புக்கு வலமாக வந்து
புத்திரப் பாகையைச் சன்னிதியில் வைத்து
மிப்புவி பிரார்த்தனை கொள்பவர்
வலமாக விரதமன் றிரவுபக லேற்றிந்த
மைந்தன் கறிப்பாகமும்
வகைவகை கிழங்கினு மாவிளக் கன்னமும்
வழங்கினோர் மக்கள் கலியும்
வாழ்வு கலியற்று நீழ்வாழையடி வாழையாய்
வமிசம் விளங்கு மென்றே
மாதவரு ருத்திராபதி மொழிந்த தையுமறி
வானந்தன் செப்பி னாரோ. (24)

## சிறுத்தொண்ட நாயனார் குருபூசை திருவிழா விபரம்

25. சிவனேசச் செல்வர்காள் உலகில் சன்மார்க்கஞ்
சிறுத்தொண்டர் குருபூசையினைத்
திருவிழா சித்திரைத் திங்கடிரு வோணநாள்
திகழருந் சுபலக்கினம்
செம்மைகண் டாகம முறைப்படி பிராமணர்கள்
தேவா லயத்தைத் திகழச்
செய்கையிற் புண்ணியா வசனவோ மங்களுந்
தீதற நடத்தியிடப
துவஜவா ரோகண மிரண்டில் நாயனார்
தோகை நகர்வல மாகுதல்
சொல்லுநாள் மூன்றி னிற்றொண் டர்திரு
கூட்டமுஞ் சூழநகர் வலமாகுதல்
தூயதிரு சம்பந்தர் நகர்வலம் நாள்நான்கு
தோன்று நாளைத்திற் பாலன்
தொட்டிலிட் டாட்டுதலு மாறினிற் பாலனஞ்
சூழ்போ தகரு மாக
அவமறப் பள்ளிக்கு நகரிவல மாதலும்
ஆக நாளேழிற் கயிலை
அண்ணலார் கொலுச்சிறப் பெண்ணறச் சன்னதி
அலங்கா ரமது காட்டுதல்
அட்ட மிதினத்திற் பிச்சாடணர் நகர்வலம்
வரும் பாவையுந் தொண்டரும்
ஆகநா ளொன்பதில் நகர்வல மீரைந்தில்
அமுது படையலும் மோட்சமுந்
தவதினம் பன்னொன்றில் துஜமிறக்கலு மன்று
தகுமஞ்ச ணீராடலுந்
தக்க வீராறில் விடையாத்தியும் செய்து
சிவசம் பூரணம் பெறுதலும்
தாரணியி லிவ்வாறு திரிகண கத்தியாய்த்
தவறாமல் செய்நாட்டினிற்
சகல செல்வங்களும் பெற்று சஞ்சலமற்று
தார்வேந்தர் போல்வாழ் வாரே. (25)

## பாயிரத்தின் வாழி

26. நித்தி யானந்த பரப்பிரமம் வாழி
நிகரிலட்ட மூர்த்திகளும் நீடு வாழி
சத்திய நால்வேத மருமறையும் வாழி
சகலகலை யாகம புராணம் வாழி
எத்திசையும் புகழ்பெரிய புராணம் வாழி
எழிலாறு வகையில் சைவசமயம் வாழி
முத்தியின்னூல் சரித பாயிரமேல் வாழி
மூதறி வானந்தமுமேல் வாழி வாழி. (26)

## ஸ்ரீசிறுத்தொண்டர் புராணச் சாற்று கவிகள்

**உடையார்பாளையம் மகாறாயறாயஸ்ரீ சமஸ்தான வித்துவான்களில் ஒருவராகிய சுவாமிமலை வீரசைவம் கம்பராமாயண பிரசங்கம் ஸ்ரீலஸ்ரீபிர்ம்மசத்துவ பிரபுடீக் கனகசபைக்கவிச் சக்ரவர்த்தி அவர்கள் இயற்றியது.**

## ஆசிரியர் விருத்தம்

27. சீரடுத்த மறைபுகழுஞ் செகத்தின் காட்சி
தேர்ந்தளித்த தற்பரன்றாள் சிந்தை வைத்து
நேரடுத்த பக்தர் குழாம் நிலைமை யோர்ந்து
நிபுணன்கங் கைக்குலத்தோர் நெறியில் வந்தோன்
வாரடுத்த கனதனத்து வாணி பீடம்
மன்னிவித்வ சிகாமணியென் றெவரும் வாழ்த்த
பேரடுத்த சேக்கிழார் பெருக்கிச் சொன்ன
பெரியபுராணத் தொகுதி பெற்று ணர்ந்தோன் (27)

28. முருகனருட் பெற்றியநூல் முழுதா ராய்ந்து
முத்தமிழின் றுறையறிந்து மொழிய வல்லோன்
பெருகபர னடியவர்க்கு மடிமை பெற்றோன்
பேருலகில் நாடகப் பேரான வெல்லாம்
உருகுதல் செய்யமிச மிலையென வூகித்து
உயர்பலநூல் உதாரணமுன் னூட்டி யொப்பத்
திருமருவு மதுரைமுத்துப் புலவன் றோர்ந்து
சிறுத்தொண்டர் நாடகத்தைச் செப்பி னானே. (28)

29. செப்பிய விச்சரித மிதின்றிறத்தை யுன்னில்
சித்தாந்தி முத்தாந்தி தேர்ந்த நல்லோர்
ஒப்பியகங் கனிந்தமுத வுணவுக் கொப்ப
உவப்படையு மிலக்கணமு மூக்க மாண்மை
துப்புமிக விளைந்து பக்தி துளக்குபோதத்
தூண்டுகோ லாகிமிகத் துணிபு மேற்றும்
கைப்பரிசு மில்லத்தார்க் கிதுமெய் காட்டும்
கண்ணாடி யெனவெனது கருத்துற் றேனே. (29)

**உடையார்பாளையம் தாலுக்காவைச் சேர்ந்த ஈச்சங்காடு ப்ரம்மஸ்ரீ ப்ரம்ம இலக்கண வித்துவான் வெங்கட்டராம ஐயங்கார் அவர்கள் இயற்றியது.**

30. நீர்காத்தக் கடல்காத்த நிலவலையந் தனைக்காத்த
சீர்காத்தக் காடவர்கோ னமைச்சனெனுஞ் சிறுத்தொண்டன்
பேர்காத்த நற்கதையைப் பிறங்கியசீர் செந்தமிழால்
ஏர்காத்த நாடகமா யியற்றினனீ தாரென்னில் (30)

31. சென்னியன்கை வளநகரஞ் சீருடையார் பாளையத்தில்
மின்னியநற் குலத்துதித்த மெய்யறிஞன் பாவாணர்
தன்னகமே தழைத்தோங்குஞ் சத்குணனார் மதுரைமுத்து
என்னுஞ் செந்தமிழ்ப் புலவனில்லத்தார்க் கிதுதனமே. (31)

32. தனமேகைக் கொண்டார்க்கு தகைந்து மாண்டு கடோறும்
இனகா லொத்த ரியவிழா யில்பாகச் செய்வாரேல்
கனமாகச் சம்போகக் காட்சியுங் கண்டே மகிழ்ந்து
முனம்பரன்றாள் முத்தியினை மூட்டு மிந்த நாடகமே. (32)

**உடையார்பாளையந் தாலுக்காவைச் சேர்ந்த சரோத்திரியம் சிறுகடம்பூர் வித்துவான் ப்ரம்மஸ்ரீ வேங்கடராம ஐயங்காரவர்கள் யுப வருடம் ஆனி மாதம் 17ஆம் தேதி யின்னூலுக்கு யியற்றியது (குளகம்)**

33. கம்பனெனுங் கவிப்புலமை சான்றோ னீய்ந்த
காகுத்தன் காதை பிரசங்க வல்லான்
அம்பரமாங் கனகசபை கவிரா ஜன்றன்
அன்பேந்து மாணாக்க னறிவா னந்தன்
அம்புவியிற் கச்சிபுரத் தடிகள் ஞான
வருளிறை மாசரவ ணானந்த யோகி

செம்பதும மலர்ச்சரணஞ் சிரமேற் சூடிச்
சிறுத்தொண்ட னார்சரிதை சீர்த்தி கண்டான். (33)

## மேற்படியார் ஆசீர்வாதம்

34. கலைநி றைந்த மதிமுகத்தான் கலைநிரம்பு மதியுளத்தான் கருணையோங்கிக்
கலைமடந் தையருள் சுரந்து கலைபலவுந் துறைநிரம்பிக் கலைதேறார்க்குக்
கலைவரம்பு புகல்பதியாய்க் கமலமலர்க் கிழத்தியருட் கடைக்கண்ணோக்குங்
கலையருள்செய் கவியேற்கக் காசினியி லாயனம்பல் களிப்ப மாதோ. (34)

## அரியலூர் ஹைஸ்கூல் தமிழ் பண்டிட் மகாராசராச ஸ்ரீ அரங்கசாமி உபாத்தியாயரவர்கள் இயற்றியது.

## (கலிநிலைத் துறை)

35. பொன்னுகுக்கும் வளவனொடு புகழ்மலிந்து இந்நாட்டிற் பொலியு முற்கை
நன்னகர்வாழ் ஸ்ரீகச்சி கலியாண யுவரங்க நாமக் கோமான்
இன்னலங்கொள் கனகசபை கவிராசன் றமிழ்கேட்டு மேற்ற சீலன்
தன்னிகரி லுண்மையறி வானந்த பெயரினற் றகைமை யோனே. (35)

36. மெச்சுபுகழ் துறவுபுக மேலைநாட் புரிந்த தவமேலீட் டாலே
கச்சிபுரி யோகீசன் சரவணா நந்தகுரு கருணை போத
விச்சையொளி மகிழ்ந்தளிப்ப வீறுபுகழ் கலித்தலத்தில் விளங்கி யாங்கு
நிச்சயமா மனத்தினொரு நின்மலன் றானத்திருக்கும் நியமம் பூண்டோன். (36)

37. ஒப்பருஞ்சத் குணமுனிவன் உலகில்சிறுத் தொண்டர்கதை யுவப்பி லாத
செப்பருங்கற் பனையுளவோர் நாடகமாச் செய்துசகஞ் சிறக்கத் தந்தான்
தப்பருமப் பிரபந்தத் தக்கோரு மிக்கோருந் தமிழ்வல் லோரும்
எப்பெருநூல் வலருமிஃதினி தினிது வெனவேற்றி யியம்ப மாதோ. (37)

**கும்பகோணம் ட்ராமா கம்பெனி வித்துவான் சா. சுவாமிமலை, சவுளிக்கடை வியாபாரி ஸ்ரீமான் பாப்பு ராவுத்தர் நளஸ்ரீ சித்திரை மாதம் இந்நாடகஞ் செவியேற்றுப் பாடியது.**

38. சாதன வைராக்கியனாந் தற்பரன்றாட் சிந்தையினான் தரும சீலன்
பேதமைற் றாதுலர்க்கு உணவளித்துப் பேரின்பப் பிடிவி டாதோன்
சோதனைக்கு முன்னெழுந்து கதனினூ னுணவே முன்துணிந்து கேட்ட
நாதனுக்கே தன்மகனூ னளித்துகதி யடைந்துலகி னற்பேர் பெற்றோன். (38)

39. மூவேழு வள்ளலுக்கு முதல்வனென மூவுலகு முன்னோ ரேத்த
நாவாழுங் கலைமகளி னருளேந்தி யறிஞனெனும் நாவில் மிக்கோன்
மாவேறி விசயஞ்செய் சேக்கிழார் புராணமதாய் வகுத்து ரைத்த
பூவாழுங் கவுடமன்னன் சிறுத்தொண்டர் காதையின்மெய் புகழா ராய்ந்தோன். (39)

40. பம்பல் சமுந்திரு விளங்குங் கச்சிபுர மன்னுடையார் பாளையம்வாழ்
கம்பர்கவி வீரசைவ கனகசபை கவிராஜன் கையே டேந்திக்
கம்பலையற்றே பெருநூல் இசைபிரித்து படிக்கவியல் கருத்தில் மிக்கோன்
நம்பனடி மறவாத சிந்தையினன் சற்குருவி னன்மா ணாக்கன். (40)

41. வீரிய சித்தானந்தக் கடலாடும் படகிதென மெய்மை வாய்ந்த
ஆரியரா தியர்கேட்டு சம்ரதாயக் கதையிதல வென்றே ஏத்த
பாரினில் லண்டருக்காய் சிறுத்தொண்டர் சரித்திரத்தைப் பாடி யாடிச்
சீரிய செந்தமிழ்ப்புலவன் மதுரைமுத்து தேசிகன்றான் தரல்நேர்ந் தானே. (41)

**திருவைகாவூர் வன்னிய சங்கத் தலைவர் தர்க்கவாதி ஸ்ரீகலியமூர்த்தி படையாட்சியார் இச்சரித்திரம் செவிகேட்டு, நடைகேட்டு இயற்றியது.**

42. கொற்றனுடை யார்பாளை யச்சுதனாம் நல்லறிஞர் குணதா ளன்பன்
நற்றமிழ் மூன்றிற் பயின்றோன் பக்திநிற மகலாத நாட்டம் வைத்தோன்
கற்றகம்பர் கவிகனக சபைகவிஞர் கையேட்டுக் காதலன்பேர்
பெற்றவகைச் சாதனையை யகல விரித்தான் றிறமை பேசுவேனே. (42)

43. நல்லார்க்குங் கேட்டுணர்ந்த மாணவார்க்கு நற்கதிசேர் ஞான வின்ப
மில்லார்க்குங் கருணைவழி காணார்க்கு மிகபரத்துக் கிசைய மெய்நூல்
கல்லார்க்குஞ் செவியேற்று கரணாதி கனிந்து பரன்காதல் மீறச்
சொல்லார்க்கு மகமடக்கு கதிகாட்டும் மதியூட்டுத் துணையில் நூலே.
(43)

44. புகலவரி தானசிறுத் தொண்டர்கதை யிகபரத்துப் புனித காப்பாய்
தகைமைகுண மதுரை முத்துக் கவிஞனுளச் சாதனையைச் சதுரமாக
அகமிளகி யெவர்களுநற் கதிசாரக் கைச்சுமையா யறமே லோங்க
மிகமகிழ்ந்து சொலற்கினிய வமுதமென நாடகமாய் விரித்தீந் தானே.
(44)

## நாச்சியர்கோவில் கவிகுஞ்சரம் கந்தசாமி பிள்ளையிடம் கும்பகோணத்தில் பாடிய ஆசுகவி

45. ஜகம்மெச்சும் வாக்கில் வல்லோய் தன்மயக் கருணை சாந்தம்
குகன்மெச்சும் வைதீகங் கைக்கொண் டருங்குல விளக்காய்
பகையச் சமறநீள் வாழும் பதிகவி குஞ்ச ரப்பேர்
தகைகந்த சாமி பிள்ளை தண்ணடி சமூகம் போற்றி. (45)

46. நற்றவ புண்ணி யத்தால் நல்லாரின் சேவை பெற்றேன்
வெற்ற நாமகள் கடாட்சம் வேதியன் சிறுத்தொண் டன்சீர்
பெற்ற வில்லறத்தின் காதை பிடித்து நாடகமாய்ச் செய்தேன்
சிற்ற போததை யுரைப்பேன் செவிகொள வேண்டி னேனே.
(46)

## இதைக்கேட்டுக் கொண்ட வித்துவான் ஆனந்தித்து தான் கவிப்பரிசளித்தல்
### (கலிவெண்பா)

47. விந்தையின் மேதினியில் மெய்நூல் பலவோர்ந்த
சிந்தை பெருக்குடையான் தேற்றம் பலவுடையான்

கற்பனையாற் கம்பன்கவி நீள்பிர சங்கன்
விற்பனனாஞ் செவ்வேள்கை வீரசைவத் தோன்றல்

கனக சபைப்பேர் கவிரா சருக்குப்
பனுவலோன் கையோட்டுப் பாலனற் பேரான்

கலைவாணி பாதன் கலைபல தேர்ந்தோன்
அலைமனதிற் பற்றறுத்தோன் அன்பருறை கேள்வன்

தன்மார்த்த காம மோக்கத்துக் கியல்பான்
சன்மார்க்க கத்தன் தவறில்லான் சாந்தகுணன்

ஆசு மதுரகவி பாடவல்லான் மேலும்
தேசு கமகனெனும் பேருடையான்சீர் மேவு

கச்சி நகர பதிவாழ் கௌடன்சீர்
மெச்சுமதி மந்ரியம் மேதை மிகச்சதுரன்

செங்காட் டமாத்தியன் தெய்வ சிறுத்தொண்டன்
பொங்கு மில்லத்துறவி புண்ணியத்தில் மேலான

அன்னதானச் சிறப்பு மான்றோர்க்கு மாரியர்க்கும்
பின்னமற ஈந்த் பெரும்பேரான் பேசுங்கால்

அக்குரன் சிசுபாலன் அந்திமான் வைக்கிரன்போல்
தக்க வரம்புரிந்த தாராளன் றற்பரனார்

சோதனையாய்க் கேட்க நேர்தோன்றற் கறியளித்தான்
வாதனையு மற்றப் பதமடைந்தான் மாண்காதை

பக்திக்கு முக்கியமாய்ப் பாரினி லில்லத்தோர்
சித்தசுத்தி யாலதனைச் சிந்தித்து யேற்பார்க்குக்

கூற்றன திகாரத்துள் ளாகார் குன்றவில்லி
ஆற்றி யணைப்பான் அவதியிலை பென்றெண்ணிக்

கோஉடையார் பாளையப் பேர்கொண்ட மதுரைமுத்துப்
பாவலனுங் குற்றமற பண்டிதரு முன்னொப்ப

பாவுந் தொடையும் பதங்களுஞ் சீரனைத்தும்
நாவுக் கினிய நவரசகவி லட்சணமுங்

குன்றாதக மினிக்க கூர்ந்தளித்தா னாடகமாய்
நன்றே கைக்கொள்வார் நலம்.

## திருநெல்வேலி ஸ்ரீ சிவராமலிங்க சுவாமிகள் இயற்றிய சாற்றுக்கவி

### (வெண்பா)

48. பாரோங்கு மன்னுடையர் பாளையம் வாழ்சத் சீலன்
ஏரோங்கு மெய்வாக்கன் எம்மானின் - சீரோங்கும்
பொற்றா ளடிமைப் புலவன் மதுரைமுத்து
சொற்றேர்ந்த நாடகத்தின் துப்பு. (48)

49. துப்பார்ந்த வன்பர் துணைபொற்றாள் சிந்தித்து
துப்பார்சிறுத்தொண்டன் தூயகதை - ஒப்பார்க்
குணர்வோடு பக்திற மூட்டுவிக்கும் போதப்
பணைநூ லளித்தான் பரிந்து. (49)

50. பரிந்துமிந்த நாடகத்தைப் பற்றிக்கொண் டாடில்
விரிந்த மனமடங்கும் விண்ணோர் - விருந்துண்ட
தெள்ளமுதுங் கண்டுநெய் தேனுண்டா ரின்பினுமேல்
உள்ளமுற வூட்டு முவப்பு. (50)

**(உள்ளம் பூரித்திடவின்பூட்டும்)* - மூலத்தில் இருந்த பாடம் இது. நூலாசிரியர் அனுமதியோடு மாற்றம் பெற்றது.**

# நூல்

## காப்பு

1. சீரார்ந்த வுலக மூன்றுந் திகழ்பெற வளந்து காண்பான்
பேரார்ந்த வகண்டா காரப் பெருமான் பேர்நெடுமால் பாதம்
பாரார்ந்த திருச்செங் காட்டின் பரஞ்சோதி சரிதஞ் சொல்ல
ஏரார்ந்தென் வாக்க கத்து மிருந்தென்றுங் காக்கப் போற்றி. (1)

## சுத்தாத்தும அகநாட்டபிரபாவ சிந்தனை

இராகம்: நாட்டை தாளம்: ஆதி துரிதம்

2. ஓம் வேதாந்த சிகர சிவமே பரசிவமே
வேதாந்த சிகர சிவமே குருசிவமே
வேதாந்த சிகர சிவமே அருட்சிவமே
வேதாந்த சிகர சிவமே பிரணவமே ஜய ஜயா (வேதா)

நாதாந்த பரகுடிலை யகர கனாகன
நகைமிகு அகநிக்ழ் உகர தனாதன (வேதா)

மீதாந்த பரைவிகித மகர மனோமன
வித்தை புத்தி யொத்த சத்தி
நத்தி முத்தி நித்தி யத்தின் (வேதா)

யோகவறி வானந்த யேக பராபர
உலக நிலையளவும் பல்கும் நிராதர
ஆகபர நடனமாடு அராகர
அற்புத நிற்புத தற்பத பொற்பத
சொற்பத சிற்பத நற்பத முற்பத. (2) (வேதா)

## குமரகுரு வேல் துதி

இராகம்: மத்யமாவதி தாளம்: ரூபகம்

3. பூவார் புகழ்ந்தோங்கும் பாதா
பொன்னாடை சகாய நாதா

பூவார் துதிவேதவ தீதா
சுத்தத் திடமுடை யடியரு
ளொத்தப் பணிபெரு நினதிணை
மெய்த்தக் கழல்நத்திப் பெருகற்த
கஜமுக அதிதவ (பூவார்)

நாவலர்க் கருள் நாத போதபதே
நவின்ற கலைதழைந் தமுதே
இராகாதி துவேஷ நாசா
ஞானாதி சங்கீத நேசா
போகாதி பர்க்கா முபதேசா (பூவார்)

உச்சக் கிரிமகள் ஸ்ரீபதிமெச்சும் பிரணவ
நீணிதி விந்தைக் கெழில் சிந்தைத்
தருதொந்திக் கணபதி சுந்தர
முத்தமிழ் நாற் கவிக்கு மூலா
மூவரு மறை போற்றுஞ் சீலா
நர்த்த னானந்த மான லோலா (பூவார்)

நற்பதி சிற்பர பொற்பத கற்பனை
யற்புத விற்பன சத்தி செயலொத்து
விற்பன சத்திச் செயலொத் தத்திட
வைத்த விகர விதந்திர. (3) (பூவார்)

## மரகதவல்லி துதி

இராகம்: கல்யாணி

4. மரகத மாணிக்கமே தண்மலர்பதந்
தந்தருள்வாய் ப்ரதானிக்கமே (மர)

மகராசி முன் அகிலாண்டமும்
சுக வாசியில் புக வாண்டவென்
மாதவர் மூதவர் வேதகர்
போதக வீத சதோதைய (மர)

மகதத்துவ சுகமுற்றிட
இக மொத்தவர் அக மொத்திடு
மணிமேகலை தணிகாசல
அணி நூபுர இணைதாடல (மர)

மந்திர சிந்தை சுதந்தர
அந்தர துந்துமி யுந்தர
வர்த்த ஞானந்தருள் நர்த்த விலாசனி
கர்த்த னரனிட பாக உலாசனி (மர)

அர்த்த அறிவா னந்தி
கைசப்போஷணி மருளரு
கருணையு மிருவிழி தெருணிறை
கரு முகிலென பொழி (4) (மர)

## அம்பலவாணர் துதி

இராகம்: பைரவி

5. நானடிமை யாயினேன் சிற்றம்பலவாண சம்புகேசா
ஊனுடலை மெய்யென் றெண்ணி
உணர்வொன்றிய தணிவின்றிய
பிணமாகிய துணிவேந்திய (நானடி)

நல்லோர் பழக்கத்தி லில்லாத பாவியன்
நானாம் பினாந்தின்னுங் கூளிக்குச் சேவையன்
இல்லாதை உண்டென்னும் வல்லட வாதையன்
நர்த்தன தத்துவ வித்தக சத்திய நித்திய கர்த்தம
நாத கீத வேத போதம் வோது மேதை யாதி பாதம் (நானடி)

மெய்யவை யொப்பவோர் மெய்மை யில்லாதவன்
வீண்மதவாதி நல்லாண்மை கல்லாதவன்
மெய்யறி வானந்தம் உய்ய நில்லாதவன்
விட்டவர் பட்டவர் கெட்டவர் தொட்டவர் வெட்டுவர் பட்டமும்
வேண்டிப் படிதாண்டிப் பழிதூண்டித் துடித்தாண் டற்றிழி.
(5) (நானடி)

## சூத்திரதார் சுரலட்சண விருத்தம்

6. சாம வேதத்தி லொருபாலு ரைக்கும்
சங்கீத பேரியாய் மகர யாழும்
சேமமிகுஞ் சகோட யாழுஞ் செங்கோட்டி
யாழென செப்பிசை நரம்பி லிருபத்தொன்று
கோமளஞ்சேர் பதினேழு பதினா றேழு
குறித்திடு சட்சம ரிஷபங் காந்தாரத்தோ
டாமத்யமம் பஞ்ச மத்தை வாதம்
அடங்கு நிஷாதப் பேரேழிசையுங் கேட்டே. (6)

7. கன்னவாய் வாங்கி மனவமிர்த மாகக்
களையாற வுண்டு வானந்தங் கொள்ளுஞ்
சொன்னயத்தும் நாதவிசை நவர சத்துஞ்
சூக்குமத்து மிராகாதி சாதி தாளம்
பின்னவகை காலவகை யறியா பேதை
பிதற்றுகினு மதிலெனது பேதங் கண்டு
பொன்னிலகு சபையின் கற்றோர் கோபித்தாலும்
பூஷணத்து மமுதமெனப் போற்றி னேனே. (7)

## உரை

இதனால் இச்சபையின்கண்ணுள்ள சிவாபிமானிகளான நண்பர்களுக்கு அன்புகொண்டு வந்தித்துத் தெரிவிக்கின்றது யாதெனில் பரவிய இவ்வுலகத்தின்கண் அரிய மனிதப் பிறப்பைப் பெற்று வந்த இருவகை ஜாதியாரான ஆண்பால் பெண்பால். அவர்களில் எந்த வருணாச்சிரமத்திலும் அவர்க்கேற்ற பாஷாபூஷண வகை பதினெட்டென்றும், எந்தப் பதினெட்டு பாஷைகளிலும் ஒவ்வொன்றில் ஆதிமத்தியாந்தமுங் கரைகண்ட சம்பூரண சுத்த சத்துவ குண விவேகானந்த வித்துவ ஆசாரியார்களால் முன்னம் நான்முகனால் வகுக்கப்பட்ட நான்கு வேதங்களையும் வகைவகையே பிரித்து வருணாச்சிரமத்திற்கு ஏற்றவாறு பல சுருதிகளாக இயற்றியிருக்கின்ற எவ்வகையிலும் இளமைக் காலந்தொட்டு கல்வியைக் கற்க வேண்டியது அவசியம். ஆகையால் அவ்வாறு கற்றும் பொதுவாகிய இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழையும் உணர வேண்டியது மிக முக்கியம். அம் முத்தமிழிலும் கடையாகிய நாடகத் தமிழைத் தெளிவர ஆராய்வது மேலும் ஆச்சரியமே.

ஆகையால் இதைத் தேர்ந்த பரமசாதுவான நிற்குண ஆன்ம ஞானியாகிய தும்புரு நாரதர், ஆதிசேடன், தசக்ரீபன் இக்கலியுகத்தில் ஸ்ரீலஸ்ரீ காளிதாச ப்ரம்மம் ப்ரம்மஸ்ரீ அருட் ப்ரகாச தியாகராஜ அய்யரவர்கள் ஆதியாகப் பல ஆன்றோர்களால் தங்கள் தங்கள் மனோதிருப்திக்கு ஏற்ற பக்த ரச நாடகங்களை இயற்றி அனுட்டித்து வந்திருப்பது தொன்றுதொட்டு உலகந் தெரிந்த விஷயமே.

அவ்வாறு சங்கீதத்தில் நிறைந்த வித்துவான்கள் பெரிய ஆற்றின் மணல்போல் அளவிடப்படாமல் பரவிக் கிடக்கின்றது. அப்படி பரவிய பேருலகில் சிற்றறிவுடைய சிறியேன் சாம வேதத்தில் ஒருவாறு

சாற்றியிருக்கும் சங்கீத சாகித்யாதி மார்க்கங்களில் சுரலட்சண வகையில் பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என நான்கு வீணைகளும், இவைகளில் பேரியாழுக்கு நரம்பு 21, மகரயாழுக்கு நரம்பு 17, சகோடயாழுக்கு நரம்பு 16, செங்கோட்டியாழுக்கு நரம்பு 7 எனப் பேர் பெற்ற வீணை சுரமென்றும், அச்சுரங்களுக்கு ச,ரி,க,ம,ப,த,நி என்றும் ஏழு அட்சரமும், அதற்கு சட்சமம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்றும், இதற்கேற்ற இயல்பாகிய தாய் ராகங்கள் 32 என்றும், அதற்கமைந்த ஜாதிகளும் கால நிர்ணயங்களும் தேவதைகளுஞ் சொல்வதோடும், அதற்குப் பொருத்தமான துருவ மட்டிய ரூபக ஜம்ப திரிபுட அட ஏக என்னும் ஏழு தாளங்களுடன் இதில் அனைய வகையாய் க்ருபா கடாட்சம் பெற்றும், அந்த வல்லமையால் பிரசங்கித்து வரும் சங்கீத வித்துவ குருமூர்த்திகள் திருவடியைக் கண்டறியாத யான் இம்மகா சமூகத்தினின்று காலமறியாமல் கதறி, அகால சப்தமிடும் ஆந்தை பட்சியைப் போல அலறி, பேரிரைச்சலிடும் சப்தத்தினால் சங்கீத கியானிகளுக்கு அழகிய காதுக்கும் களங்கமற்ற மனதுக்கும் திருப்தி அடையாதிருக்கலாமென்றே அடிமை யான் மனதில் எப்போதும் பெரிய அச்சமுண்டு. ஆனாலும் எமது சத்குருமூர்த்தியாகிய சன்மார்க்க சிவாபிமான காருண்ய சாந்த சீல அறிவானந்த சுவாமிகளின் திருவடி சிரமேற் கொண்ட அடியேங்கள் தற்காலம் கொண்டாடி வருவது சிவபக்தியில் சிறந்த ஜீவகாருண்ய சிவாபிமான சரித்திரமானதால், அந்த அபிமானத்தைக் கொண்ட சிவாபிமான நண்பர்களுக்கு இச்சரித்திரம் சம்பூரண காலம் வரையில் எல்லாந் திருப்தியாகவே ஆனந்தம் அடைவார்களென்கிற திட சித்தத்தைக் கொண்டு இந்த நாடகச் சாலையில் நடிக்கலாயினோம்.

ஹே விவேக சிந்தாமணிகளே! இதில் எங்கள்பால் இந்நாடக கியானத்தில் வாக்குபேதம், ராகபேதம், காலபேதம், சுரபேதம், நவரஸபேதம், தாளபேதம், இன்னும் பரத சாத்திரங்களில் நந்தி பரதம், அனுமந்த பரதம், ராட்சஸ பரதம், நாரத பரதம் என்னும் நால்வகை பரதங்களில் பரதபேதங்களிருப்பினும் அவைகளை எல்லாம் தாம் பெற்ற சிறுகுழந்தைகள் தெருவில் விளையாடுங்காலத்துப் பல கோல வேடங்களைத் தரித்து விளையாடுவதைக் கண்டு ஆனந்திப்பதுபோல ஆனந்திப்பார்களென்றே அகமகிழ்ந்து சபையின்கண் வந்தனஞ் செய்து நாங்கள் ஆரம்பித்திருக்கும் இந்த நாடகத்தைச் சம்பூரணஞ் செய்ய உத்தரவளிக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

கனவான்களே! இத்திரைகடலாடை உடுத்த பரந்த பூமண்டலத்தின் கண் சேரமண்டலம், சோழமண்டலம், பாண்டிமண்டலம், தொண்ட மண்டலம் என நான்கு மண்டலங்களும் இப்பூமியின் மத்தியாகிய ஏமகூட பர்வதத்திற்குத் தெட்சண பாகத்திலுள்ளதென்றும், இதற்குப் பரத கண்டமென்றும் பேர் பெற்று விளங்கி வரும் இந்த தேசத்திலே ஒன்றாகிய தொண்டமண்டலத்திலே காஞ்சிபுர பட்டினத்திலே ராஜநீதி தவறாமல் அரசு செலுத்தி வந்த பல்லவருள் கௌட புரவலன் என்னும் ஓர் மகுடாதிபன் வரலாற்றை நாயினேன் சொல்லச் சற்று கவனித்துக் கேட்க வேண்டுமென்று பின்னும் வந்தித்து கேட்டுக் கொள்கிறேன்.

அதாவது சுருக்கிச்சொல்ல கேளுங்கள். நான்கு நிலத்திலொன்றாகிய குறிஞ்சி நிலத்திலே அஸ்வத்தாமா கோத்தரத்திலே வந்து, பிர்ம தேவன் போஷகத்திலே வளர்ந்து, ஆதிவர்மன், பிர்மவர்மன், இரணியவர்மன் என்ற திருநாமம் வாய்ந்த பல்லவகுலத்து கௌடனென்றும், கவண்டனென்றும், காடவனென்றும் பேர்பூண்டு கௌட தேசத்தை அரசு ஆண்டு வந்த ஆதிவர்மன் வம்சத்திலே பதின்மூன்றாவது மகுட மன்னனான சுவேதவர்மனுக்கு மகனாகிய சிம்மவர்மன், வேதவர்மன், சுமதிவர்மன் என்று மூவருண்டு. அம்மூவரில் சிம்மவர்மன் சிதம்பரத்துக்குக் கீழ்பால் பித்தர்புரத்துக்கதிபதி யென்றும், இரண்டாவது வேதவர்மன் காஞ்சீபுரத்துக்கதிபதி யென்றும், மூன்றாவது கசுமதிவர்மன் கௌட தேசத்ததிபதி யென்றும் சிதம்பரகோயிற் புராணத்திலும், தொண்டைமண்டல புராணத்திலும், மண்டல புருடனியற்றிய கலிகால மகராஜ வம்சாவளியிலும், வன்னியசங்க வருண தர்ப்பணத்திலும் பரக்க விளக்கப்பட்டிருக்கின்றன. அதில் இரண்டாவதாகிய வேதவர்மன் தொண்டை மண்டல காஞ்சீபுர பட்டினத்தை ஆளுகைபெற்று ஆண்டு வந்த பதினான்காவது தலைமுறையில் மகுடாதிபனான நரசிம்மவர்மன் ஆண்ட காலத்தில் தனக்கு அறுபத்துநான்கு அமைச்சர்களிருந்து அரசதந்திரத்திற்கு இலக்கணம் பற்றாமல் திருச்செங்காட்டாங்குடியில் ஆமர்த்திய ப்ராமண குலத்திலே அவதாரஞ் செய்து வந்த வீரசேகர பண்டிதருக்கு முதல் மகனாகிய ஞானப்ரகாச பண்டிதர் தவப்புத்ர சிகாமணியாகிய பரஞ்சோதி பண்டிதரெனப் பேர்பூண்டு வடகலைகளிலுந் தென்கலைகளிலும் ஆயுர்வேத தனுர் வித்தைகளிலும் விசேஷ பண்டிதனெனத் தெரிந்து வருவித்து, தனக்கு முதல் நேத்ர மந்திரியாகக் கொண்டு அரசாளுங் காலத்தில் தனக்குக் கப்பங் கட்டிவந்த

கிரவுஞ்சகிரியென்றும் இரத்தினாபுரியென்றும் வாதாபி நகரமென்றும் பெயருள்ள ராஜ்ஜியத்தை ஆண்டு வந்த புலிகேசி மன்னனால் கப்பஞ் செலுத்தப்படாமல் எதிர்ப்படையாளனாயிருக்கும் பகை நீங்கப் பரஞ்சோதி பண்டிதரைச் சதுரங்க சேனையுடன் தன் மகனாகிய கழற்சிங்கவர்மனோடு யுத்தத்திற்கு அனுப்ப, யானையின் மீதேறி அவ்வாதாபி நகரைச் சென்று, புலிகேசியை வென்று, நீடிய பாக்கியப்பகுதியும் பகரப்படாத பரிசும் பெற்று, காஞ்சி நகரம் வந்து தனக்கு எக்காலத்தினும் சத்துருக்களில்லையென திடங்கொடுத்த குதூகலத்தினால் அரியாசனத்தின் கண்ணிருந்த அரசன் பண்டைய அமைச்சர்கள்பால் புதிய அணுக்கரின் பிரபலத்தை வியந்துபேச, அவ்வமைச்சர்களால் புதியவணுக்கராகிய பரஞ்சோதியாரின் திருநாமச் சிறப்பையும், பரம்பரை சேர மகாராஜனுக்கும் சோழமகாராஜனுக்கும் பாண்டிமகாராஜனுக்கும் மந்திரியாக இருந்தவரின் சிறப்பையும் இவர் குணானுபவகல்வி அறிவும் ஒழுக்கத்தியல்பும் சிவஞான நிட்டானுபூதி விசேஷ அனுபவத்தையும் எதார்த்த பாக்கியமாய்த் தெரிவிக்க, அதைக் கேட்ட புரவலன் திடீரென சிம்மாஷனம் விட்டு குதித்து அணுக்கரை ப்ரதட்சண நமஸ்காரம் பண்ணிப் பலவாறு துதித்து என் அறியாமையால் சுவாமிகளை யிதுவரையில் அணுக்கராக ஏற்றுக் கொண்ட குற்றத்தை மன்னித்து, அருமையால் திரிகரண சித்தியோடு அளித்து, இடம் பொருள் ஏவலையும் பெற்று, தாங்களனுபவித்து வரும் சிவானுபவ ப்ரம்ம ஞான நிஷ்டானுபூதியைச் சஞ்சலமற்று நிறைவேற்றி நற்கதியடையக் கடவீர். அடுமையும் சுவாமிகளைப் பிரிந்த இன்று முதல் சிம்மாசனமேறிச் செங்கோல் செலுத்தேன்; இதோ பிள்ளைக்கு மகுடஞ் சூட்டுகிறேன் என்று சபதங் கூறி அணுக்கரை மட்டில்லாத இடம் பொருள் ஏவலோடு அனுப்பிவிட்டு அன்று முதல் தான் சிம்மாதனமேறாமல் பிள்ளைக்கு மகுடஞ் சூட்டி வைத்துவிட்டு பல தலங்களில் திருவாலாய திருப்பணிக்கும் திருத்தொண்டுக்கும் முயன்று சென்றுவிட்டார்.

ஹே சிவநேசச் செல்வர்களே! இந்தக் கௌடாதிபதியினால் மகிழ்ந்தளிக்கப்பட்ட பரிசுகளைப் பெற்றுத் திருவெண்காட்டின் நீலகண்ட தேசிகருடைய புத்ரியும் தனக்குப் பாரியுமான திருவெண்காட்டு அம்மையும் கௌட மன்னனாலளிக்கப்பட்ட சந்தனத்தாதியும் மற்றும் பல ஏவலர்களும் புடைசூழத் தானடைந்த திரவிய பரிசோடு காஞ்சிநகரை விட்டு தன்னகராகிய திருச்செங்காட்டாங்குடி வந்தமர்ந்த அணுக்கரான பரஞ்சோதி பண்டிதரின் சரித்திரத்தை இனி சவிஸ்தாரமாகக் கேட்டு ஆனந்தமடைவீர்களென்று நம்பி யான் வந்திக்கின்றேன்.

## பாவலர்கள் பாட்டு

8. தேவன் பஜனைசெய்யுஞ் செல்வர் நாங்களே
செங்கண் மாலுமயனுங் காண தேடியுமறியா
ஆதி மத்தி யாந்தரகித விராட்டுவாய்
அங்குமிங்கு மெங்குமாய் அமர்ந்த ஸ்ரீபர
சாது சர்ச்னர்க் கருள்செய் யீசனாய்
சனகர்நால்வர் ஞானகுருவாந் தட்சிணா மூர்த்தி
நாவ லர்க்குமடி யர்க்கு மடியவன்
நண்பன்ராசன் மதுரைமுத்துக் கென்று மனுக்ரக (8)

## விருத்தம்

9. வளவன் முனம்வகுத்த மொழிய பலமின்றி
மறைந்து வெளியாகாமற் கிடந்த மூவர்
உளமெழுந்த வடங்கன்முறை தேடிக் கொண்டு
உண்மை யுணர்ந்தவர் சரிதமுழுதுங் கண்டு
தளம்பெரிய புராண மறுபத்து மூவர்
சரிதமென்றுஞ் சாகப் புராண மென்றும்
வளந்தமிழி லியற்றிச் சைவசமயங் காத்த
மாதவச்சேக் கிழாரவர்கள் மலர்தாள் போற்றி. (9)

### உரை

தொண்டை மண்டலத்திலே குன்றத்தூரிலே வேளாளர் குலத்திலே சேக்கிழார் மரபிலே அவதரித்த அருண்மொழித் தேவர் என்பவர் அனபாய சோழ மகாராஜாவுக்கு முதல் மந்திரியாக இருந்து வருங் காலத்தில், அம்மகாராஜன் பல சமய நூல்களைக் கேட்டு காலட்சேபஞ் செய்து ஆனந்தித்து வந்ததைத் தடுக்க வேண்டி, அவர் முன்னில் சாகாப் புராணம் உண்டென்று சொல்ல, மகாராஜன் மயக்கமுற்று அப்புராணத்தை எனக்கு அறிவிக்க வேண்டுமென்று கேட்க, அதற்கு உடன்பட்டு அருண்மொழித் தேவர் சிதம்பரஞ் சென்று சபாநாயகர் திருவருளால் அறுபத்து மூன்று நாயன்மார்களின் சரிதத்தைத் திருத்தொண்டர் புராணமென்றுஞ் சாகாப்புராணமென்றும் பெயரிட்டு, தமிழில் பாடி, அதைச் சோழ மகாராசன் சமூகத்தில் அரங்கேற்றி, சைவ சமயத்தை நிலைநிறுத்தி, உலகமெங்கும் பிரசித்தி பெற்ற சேக்கிழார் நாயனாரவர்கள் திருவடியை எங்கள் சென்னிமேல் வைத்து

நமஸ்கரித்து, இச்சபையின் கண்ணுள்ள சிவபக்தி வைராக்கிய சாதன உபவாச தவ விசேடத்தை யடைந்த நண்பர்களுக்கு வந்தித்து சொல்வது யாதெனில்,

அரிப்ரமாதிகளும் தேடியும் காணுதற்கரிதாகியும், சனகாதி நால்வற்குச் சத்குரு மூர்த்தமாகியும், எங்கும் நிறைந்த நித்தவஸ்துவாகிய பரமேச்சுரன் திருவடியைச் சதா சிந்தித்து அவரருட்டிரு விளையாட்டில் ஒன்றாகிய திருத்தொண்டர் புராணத்தின் திருஞானசம்பந்த மூர்த்திகள் திருநாவுக்கரசு மூர்த்திகள் சுந்தரமூர்த்திகள் திருவடிகளைச் சென்னி மேற்சூடி, அவர்கள் அருள் நிறைந்த அடங்கன்முறை தேவார பஜனைகள் செய்யுஞ் சிவநேசச் செல்வர்கள் நாங்கள் ஆவோம். ஆகையால் எங்களால் இன்று நடத்தப்படும் திருத்தொண்டர் தொகையில் ஒன்றாகிய சீவகாருண்ய சிந்தாமணியும், சிவபக்த சிரோண்மணியுமான சிறுத்தொண்ட நாயனார் திவ்ய சரித்திரத்தைக் குருபூசை விசேஷமாய் நடத்துகிறபடியால் இந்தப் பக்தியில் விசேஷித்த சாதுசர்ச்சன அடியவர்கடியராகிய யாங்கள் செய்யுந் தவத்தில் இடையில் சிவபாதகர்களால் இடையூறு வாரா வண்ணம் பிராத்திக்கின்றேன்.

கனவான்களே! சிவபராக்கிரம செயலும், அந்தச் செயலுக்கு ளடங்கிய சிவபக்திமான்கள் பெருமையும் இவ்வாறிருப்பதால் எங்கள் பக்தி காலட்சேபம் சம்பூரணமாகும் படிக்கு ஆதிமத்யாந்தம் வரைக்கும் எவ்வித கலகமும் தேக சிரமமும் ஏனைய குற்றமும் அடையாவண்ணம் திருவருள் பெருந்துணை வேண்டியிருப்பதால் இந்த நாயனார் சரித்திரத்திற்கு முன்னங் கணேச பிரானைச் சிந்தித்தழைக்கின்றோம்.

### பாட்டு

(கலிலோகரி என்ற மெட்டு)

10. கருணாகர கசமுக கணபதி - கழலருள்
 பதந்துணையே தினம் பணிந்தேன் (கரு)

தெருளாசன திருமுக மருவிய - சிறுவரை
 யாளிதனே பரன் சுதனே
அருமறை மேல் பதனே விகசிதனே
 பெருகிடு மும்மதனே குணவதனே (கரு)

யோகாதிபர் தனதக பிரணவ - ஒளிநிறை
 தினபதியே வல்லபை யொரு

பாகாபரன் அருளிய சரவண பவன் திரு
துணைநிதியே செயல்பரவு
யோகாட்சர குருபர அரஹர எழில் திரு
வருணிதியே பரநிதியே
இருடிகள் குணமதியே பதங்கெதியே - எளியேன்
செய்துதி பதியே அறிவானந்த. (10) (கரு)

## விநாயகர் சபை - விதூஷகன் வரவு

11. அஆ நான் வல்லனே - எனக்கு
ஆரும் எதிர் நில்லனே - சற்றும்
அஞ்சிப் பதில் சொல்லனே - உண்மை
ஆடுமறை யின்றி பேடிநூல் கல்லனே (அஆ)

சாதுக்களைப் பணிவேன் - அவர்தாள்
துகள்களை யணிவேன் - கோபஞ்
சற்றுமின்றித் தணிவேன் - வித்வசங்க
தயவினால் சிங்கமுன் துணிவேன் (அஆ)

நாதன் கதையிற் குறை சொல்லி
நண்கற் றிகழ்ந்த வரை ஏம
நாட்டில் புகுத்திச் சிறை - எந்த
நாளும் வாழ்த்து வீரகாளை காவல்முறை (அஆ)

சைவ சமய சித்து - உக்ர
சண்முகன் தாளை ஒத்துக்
கவிதாசன் மதுரை முத்து - பதஞ்
சாற்றிடக் கேளதில் தோற்றிடுமே சத்து. (11) (அஆ)

## உரை

பா : நீ யாரப்பா?

விதூ : யான் விசித்திர விகட விநோத வித்துவ விவகார விலட்சண சபையலங்கார சங்கீத சரப சாமார்த்திய விடையானந்த பூஷணன். விதூஷகன் என்பேர்.

பா : நீர் எந்த ஊர்?

விதூ : நான் ஆகாயத்தில் நடன சபாபதி சபையில் பெருமாள் நடித்த காலம் குடமுழாய் வாசித்தளிக்கும் வாணன் வாய் நகரம்.

பா : சரி. இப்போது எங்கு வந்தனை?

விதூ : இப்போது இவ்விந்துமகா நாட்டில் இச்சிற்றூரில் சிவ பராக்கிரம திருத்தொண்டர் பக்த சரித்திர காலட்சேபம் நடப்பதாய்க் கேள்விப்பட்டு அன்புற்று வரலானேன்.

பா : சந்தோஷம். உனக்கு விற்பன கற்பனையில் என்ன தெரியும்?

விதூ : எனக்கு உலகின்கண் அறிவீனர்களை விவேகி யாக்கவும், துஷ்டரைச் சிஷ்டராக்கவும், பகைவரைச் சகசமாக்கவும், மூடரை விசேடியாக்கவும், கெருவியைச் சிரக்கம்பஞ் செய்யச் செய்யவும், அழுவாரைச் சிரிக்கவும், தூங்குவாரை விழிக்கவும், ஆடாதவரை ஆடச் செய்யவும், பாடாதவரைப் பாடச் செய்யவும், புகழ்வாரை இகழ்ந்தும், இகழ்வாரைப் புகழ்ந்தும், சோம்பேறிகளை ஊக்கத்துடன் பல்லையிளித்துக் கண்ணை விழித்துச் சிரக்கம்பஞ் செய்து தன்னை மறந்து கைக்கொட்டச் செய்யும் வல்லபம் ஏதோ அதுவெல்லாந் தெரியும்.

பா : சபாஷ். ஆனால் சகல சன வசியஞ் செய்யத் தெரியாதாக்கும். இருக்கட்டும். எங்களுக்குப் பெருந்துணையாகக் கணேசபிரானைத் தியானித்து அழைத்திருக்கிறோம். இதோ வந்திருக்கின்றார். எங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேட்டுக் கொண்ட பிறகு உனக்கு வேண்டிய வரத்தைக் கேள். கொடுப்பார்.

விதூ : ஆகா! அப்படியா?

பா : கணநாதா! திவ்விய திருவடிக்கு வந்திக்கின்றோம்.

வினா: கல்யாண பாலகா! யானோ திருக்கயிலாயத்தில் வெள்ளிமலையில் கனக சிம்மாதனத்தில் எழுந்தருளிய உமா மகேசன் பாகத்திருக்கேலாங் கொண்ட தேவியாராகிய என் அன்னையார் திவ்ய திருமடியில் வீற்று ஆனந்தித்திருக்குங் காலம் உனது தீனஸ்வரத்தைக் கேட்டு இவ்விடம் பிராப்தமாயினேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்பாயாக.

பா : ஹே கணதிபதே! பால்யர்களாகிய நாங்கள் திருத்தொண்டர் தொகையில் ஒருவராகிய சிறுத்தொண்ட நாயனார் குருபூசையை நடத்தி, அவர் திவ்ய சரித்திரத்தைப் பக்த ரஜ கீர்த்தன பஜனை பண்ண ஆரம்பித்திருப்பதால் இந்தச் சிவபுண்ணிய காலட்சேபத்தில் ஆதிமத்யாந்தம் வரையில் எவ்வகை இடர்களும் வராமல், தெய்வ சகாயப் பெருந்துணை வேண்டுமென்று தங்கள் திருவடி பெருந்துணையை முன்னிட்டு பிராத்திக்கின்றோம்.

கண : பாலகா! நீ விசேஷித்து ஆரம்பித்திருக்கும் நாயனார் குரு பூசையிலும், அவர் சரித பக்தரஜ கீர்த்தன நடன காலஷேபத்திலும் ஆதிமத்யாந்தம் வரையில் எனது திருவருள் துணை காப்பாக இருக்கின்றேன். சற்றும் அச்சமின்றி நாடகத்தை நடத்துவாயாக.

பா : விதூஷகா! கணநாதன் சமூகம் உனக்கு வேண்டிய வரத்தைப் பிரார்த்தித்துக் கேட்டுக் கொள்வாயாக.

விதூ : ஆஹா! அப்படியே.

பாட்டு

(திரிலோகமும் என்ற மெட்டு)

12. பிச்சாண்டி செம்படச்சி மகவபேத தாத மருகன் நீயே
பச்சாண பிள்ளையரே அச்சுக்கல் பிள்ளையரே
பச்சை மஞ்சள் பிள்ளையரே பாலகோல தொப்பையனும் நீயே
தித்திமி தத்தகு தகஜெனு தத்தமி தித்தகு தகனக
ஜெனுதகு தொந்தோ மெனநட மிடுகுட பிரணவனும் நீயே
செப்பு வெள்ளி பிள்ளையரே அப்பளிங்கு பிள்ளையரே
சப்பாணி பிள்ளையரே சாதவேத போத னீதன் நீயே
தாம்தாம் தரிகட தீம்தகு தோம்தோம் திமிதக தோந்தரி
தகஜெனு தகதிக தகதிமி ததிங்கணவென நடமிடு பதிகளும் நீயே
சந்திகரை பிள்ளையரே வந்தனங் கொள் பிள்ளையரே
மந்தி யானை பிள்ளையரே சாந்தனாமறி வானந்தன் நீயே
த்ருததாரி தகிட தகஜம் தரிதாம் தித்ததின தகிட தகஜெனுத கறீம்
தாரிதகிட தகஜம் தரிததின தகிடதக ஜெனுதக
தகஜெனு தகதிகதகதிமி ததிங்கண வெனநடமிடு
குடபிரணவனும் நீயே (12)

## உரை

விது : ஹே கணநாதா! விதூஷகன் வந்தனமளிக்கின்றேன்.

விநா : ஹே பாலகா! உனக்கு என்ன வரம் வேண்டும்? தெரிவிப்பாய்.

விது : கணநாதா! தங்கள் தரிசனம் கிடைத்த மாத்திரத்தில் எனக்குப் பெரிய அதிர்ஷ்டம் வந்ததாகவும், நீண்ட நாளாயிருந்த தரித்திரம் நீங்கினதாகவும் குதூகலமடைந்தேன். அதாவது என் மனைவி புடைக்க முறமில்லாமலும், குத்த உலக்கையில்லாமலும், ஆள பானையில்லாமலும் மிக்க கஷ்டப்படுகிறாள். ஆகையால் சுவாமிகள் தயவு செய்து தங்களது காதையும், தும்பிக்கையையும் தொந்தியையும் வேண்டுமென்று விரும்புகிறேன். கொடுத்தருளல் வேண்டும்.

விநா : ஏ மூர்க்கா! நீ அகட விகடனாகப் போகக்கடவது. இதோ நான் கயிலைக்கு எழுந்தருளுகின்றேன்.

விதூ : ஆஹா அப்படியே. நீ குளக்கரையிலும் அரசமரத்தடியிலும் சந்திக்குச் சந்தியிலும் வயிற்றை நிரப்பிக் கொண்டு கொழுக்கட்டைக்கு ஏமாந்திருக்கக் கடவது.

## கலைமகள் தோத்திரம்

(தனக்கோர் இணையில்லாத என்ற மெட்டு)

13. சதுர்வேத முத்தா வசனி
 சங்கை யில்லா வசனி
தன்மத்தே கன்மத்தே குருவரு ளின்புற்றே
 சொன்முற்றே பெறதகு தானந்த மிலாதனவாம்
 அறிவானந்த சிகாமணி வான்மணி (சதுர்)

சாக்கிய மொத்திட நீக்கமி லாதிடப்
பாக்கிய நித்திய வாக்கிய முத்திட
சமுகநிலை சுகுண வமிசமி நதிபதி
அமுதமு மிகுந்திசை பதமளி சரஸ்வதி
உருவே தரும் புராணி
 ஒன்றாம் பலசொல் வாணி
 உணர்ந்தா தரிக்குந் தேவி
 உவந்துய்ய தவம்பெய்ய விதிபதி (13) (சதுர்)

## உரை

பா : வாக்கீஸ்வரி! திவ்ய திருவடிக்கு வந்திக்கின்றோம்.

கலை: கல்யாண் பாலகா! சத்ய லோகத்தின்கண் கனக கமல பீடத்தின் மீது அமர்ந்திருக்கும் எனது பர்த்தாவாகிய நான்முக பிர்மதேவரது வாக்கின் கமலத்தில் உல்லாசித்து வீற்றிருந்த யான் உனது தீன தொனியைக் கேட்டு ஆனந்தித்து இவ்விடம் ப்ராப்தமாயினேன். உனக்கு யாது யிச்சை. அதைக் கேட்பாயாக.

பா : ஹே வேதமாதா! சிறுவர்களாகிய நாங்கள் சிவபராக்கிரம திருவிளையாட்டில் திருத்தொண்டர் தொகையில் ஒருவராகிய சிவபக்த ரட்சக வள்ளலுமாகிய சிறுத்தொண்ட நாயனாரின் குருபூஜை மகுத்துவங் கொண்டாடி, அவர் சரித்திர பகவத் பக்த ரசபஜனை காலட்சேபம் நாடகாலங்காரமாய் நடத்துகின்ற படியால் இக்குழுவிலுள்ள பிள்ளைகளுக்கும் தலைவர்களுக்கும் சகாயர்களுக்கும் முதலிடை ஈறுவரை எவ்வித இடருமின்றிச் சம்பூர்ணமாகும்படி திருவடி கடாட்ச முண்டாகப் பிராத்திக் கின்றோம்.

கலை: சிறுவர்காள்! நீங்கள் கேட்டபடி அளித்தோம்

பா : சகன் மாதா! திவ்ய திருவடிக்கு அடியேம் வந்திக்கின்றோம். (விகடனை நோக்கி) ஹே விகட சிகாமணி! எமது மாதாவின் திருவடியைப் பிரார்த்தித்து உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக் கொள்வாய்.

விக : ஆஹா! அப்படியே செய்கிறேன்.

## பாட்டு

(சென்னை ராஜகுட்டி என்ற மெட்டு)

14. வெள்ளை மேனி யம்மா - கண்ணை
விழித்துப் பாரு சும்மா - எம்மா (வெள்ளை)

வெள்ளை கலைவாணி - சபை
வித்து வர்நா பேணி - உயர்
வெள்ளை பணி பூணி - அன்பர்
வேண்ட லளிக்கும் ராணி - வசனி (வெள்ளை)

எடுத்து வீணை மீட்டி - மேல்
  எழு சுரங்களைக் காட்டி - இசை
படுத்திடுஞ் சீமாட்டி - திருப்
  பாதப் போதில் கூட்டி - மேட்டி (வெள்ளை)

பாரதக் கவி குட்டி - சபை
  பணிந் திடுவாய் பட்டி - பெரும்
பாரினில் நான் மட்டி - நல்ல
  பக்குவம் பெற கிட்டி - குட்டி (வெள்ளை)

அங்க களப சந்தி - அழ
  காடு மறிவா ணந்தி - அருள்
உங்கை யாழின் தந்தி - கண்ட
  ஓசை விரலை முந்தி - உந்தி (14) (வெள்ளை)

உரை

விதூ : ஆ தேவி! என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். அதாவது தேடிப்போன மருந்து நேரில் கிட்டியது போலானது. என் பெண்ஜாதி கேழ்வரகு அரைக்கும் இயந்திரத்திற்கு முளைக்குச்சி இல்லாமலும், சமையல் பாகத்திற்கு அகப்பை இல்லாமலும் என்னை மிக்க கஷ்டப்படுத்துகிறாள். ஆகையால் லோக மாதா! உன் கையிலிருக்கும் வஸ்துவைக் கொடுத்தால் அவ்வகைகளுக்கு உபயோகித்துக் கொள்ளுவேன். தயவுசெய்து கொடுத்தருளல் வேண்டுகிறேன்.

சரஸ் : ஹே துஷ்டா! நீ என்றும் விகடனாகப் போக வேண்டும். கால தாமதமாகிறது. இதோ யான் சத்திய லோகஞ் செல்வேன்.

பா : விதூஷகா! இந்நாடக அலங்காரம் பூரணமாகும் வரையில் இக்கம்பேனியிலுள்ள சிவபக்திமான்களில் ஒருவராய் இருந்து சமய காலந்தொட்டு விகட வித்துவ பிரசங்கம் செய்து கொண்டிருப்பாய்.

விதூ : சந்தோஷம். அப்படியே ஆகட்டும்.

பா : இப்பகவத் பக்தசபையின்கண் வீற்றிருக்கும் சிவநேச செல்வர்களே! நாங்கள் இன்று நடத்தும் இந்தப் பக்தி ஆனந்தக் கரையில் முன் ஆரம்பமாக இச்சரித்திர கர்த்தாவாகிய

நாயனாரும் அம்மையாரும் வருவார்கள். இது சிவபக்த சரித்திரம். ஆதலால் அனாசார விசேடங்களை அங்கீகாரம் பண்ணாமல், சோம்பல் நித்திரையை மாற்றி, சிவநாமாமிர்தத்தைச் செவியின் வழியாக வாங்கி உண்டு ஆனந்திக்க வேண்டுமென்று வணங்குகின்றேன்.

## பாலர் பாட்டு

(கோருங்கள் கோருங்கள் என்ற மெட்டு)

15\. வாருங்கள் வாருங்கள் புண்ணியமே - செய்யச்
சேருங்கள் சேருங்கள் கண்ணியமே
வாழுங்குடி உம்பர்களைச் சூழும்படி நண்பர்களே (வாருங்)

பெற்ற விம்மானிடத் தேகம் நில்லாது
பேருல காசையும் என்றும் பொல்லாது
முற்றுமிவ் வாழ்வைப் பிடிக்கச் செல்லாது
முடவனிகர் நடைதவறும்
படிகுருடன் தடியதுவாம் (வாருங்)

ரத்தம் உள்ள மட்டும் ஆனந்தமே - கிழம்
நத்திடில் கட்டையில் தானந்தமே
பக்தியை நத்தில் சுகா னந்தமே
பலமிது வலுவினரே
சுலபமிது உலகினரே (வாருங்)

அன்ன மயமே உலகமட்டும் என்று
ஆரறிந்தார் ஆயுள் உள்ள மட்டும்
அன்ன தானஞ் செய்ய நன்மை கிட்டும்
அரனும் வரும் அயனும் வரும்
அரியும் வரும் கருணை தரும் (வாருங்)

பொத்த உடலை வளர்ப்பதி னாலே
போகங் கண்டவர் எவர்சொல் மண்மேலே
முத்தன் அறிவானந்தன் போதத் தாலே
மோசம் இலை ஆசை விடு
ஈசன் அடி வாசம் இது. (15) (வாருங்)

## விருத்தம்

**நாயனார்:**

16. மெய்யள் நரசிங்கபதி விடைய னாகி
 வேந்தர் பலபகை யறுத்த விஜயங்கண்டு
 துய்ய மனதுடன் பணியின்பின் தொடர்விலானாய்த்
 தோன்றல் வெகுமானங்கள் தொகைபா ராமல்
 செய்ய வகையேற்று மிருகருணை யோர்ந்து
 செப்பரிய விமலரடி சிந்தை வைத்து
 ஐயமிடுங் காரணமே மூல மாமென்று
 அறிந்தில்ல துறவடைந்து வந்தே னானே. (16)

## பாட்டு

இராகம் : சங்கராபரணம்

17. வந்தேனான் இந்த வையகம் நித்ய
 மங்கள மிகுந்த திருச்செங்காட்டின் பரஞ்சோதி (வந்)

 ஆமாத்திய குலத்தோர்ச் செய்யுந் தவத்தால்
 அருமை சந்ததிகுறை நீங்கிடும் நவத்தால்
 சோமசுந்தர னென்னு அருட்பர சிவத்தால்
 தூங்கும் ப்ரம்மகுல மோங்கத்தத் துவத்தால் (வந்)

 இலக்கண மிலக்கிய மனுகணி தாதி
 இலங்கும் புராண ப்ரசங்கங்க ளோதித்
 துலக்கிடும் நிபுணனா மென்னிட சேதி
 சொல்லக் கிடைக்குமோ வருட்பிரக் யாதி (வந்)

 மன்னர்கள் வணங்கிடும் படைக்கல தீரன்
 வடகலை தென்கலை கற்ற ஒய்யாரன்
 அன்ன தான கொடைகொண்ட சிங்காரன்
 அஷ்ட லட்சுமியும் விளங்கு மிவசீரன் (வந்)

 தரும தேவதை வலபுஜத்தில் கொண்டாடச்
 சதுர்முகன் றேவியுஞ் ஜயமென பாடக்
 கருமவினை பாவங் கலங்கி கெட்டோடக்
 கர்ப்பக காவல னென்சபை நாட (வந்)

இகபர மிரண்டின் மேலெதுவென நாடி
இல்லறம் பெரிதென சொல்லறங் கோடி
சுகமென பரங்களைத் தேடிக் கொண்டாடிச்
சோறிட வேணுமென் றருள்வழி தேடி. (17) (வந்)

## விருத்தம் (அவையடக்கம்)

**நாயனார் :**

18. காரணமாய்ப் பரமகுரு கருணை யாலும்
கலைவாணி திருவருட் கடாட்சத் தாலும்
ஏரணராங் கவிராஜ ரிரக்கத் தாலும்
இலங்குமிந்த புவியிலுள்ளோ ரிணக்கத் தாலும்
தாரணையில் லாச்சிறிய தன்மை யாலும்
சபையேற திடம்பெற்றேன் தழைந்த கல்வி
பூரணமு மறியாதான் புகலுஞ் சொல்லில்
பொரைப்லவாம் பெரியோர்கள் பொறுக்கப் போற்றி. (18)

### உரை

அதாவது 'உலகில் அரக்கர்களின் தொந்தரவைச் சகிக்க முடியாமல் தேவ அணுக்கள் வேண்டிக் கொள்ள பரமன், கருணை கொண்டு, ஆறாதார மூர்த்திகளாகி, விநாயகர் - ப்ரம்மா - விஷ்ணு - உருத்திரன் - மயேச்சுரன் - சதாசிவமென்னும் ஆறுமூர்த்தியும் ஆறுமுகத்தோடும் அவதரித்து, ராட்சத சங்காரம் பண்ணிய முருகபிரான் கருணை வரப்பிரசாதத்தாலும் ஞான மூர்த்தியாகிய சரஸ்வதி மாதா அனுக்ரக தயா பட்சத்தருட் ப்ரசாத வரத்தாலும், இலக்கண இலக்கியம் பாராயண கர்த்த வரகவி கம்பராமாயண பிரசங்க வீர சைவ கவிச்சிங்க கனகசபை கவிராஜன் பாத சேகரனாகிப் பெற்ற பூரண அன்பின் பிரசாதத்தாலும் விளக்குமுள்ள இப்புவியின்கண் கற்றுணர்ந்தோர் இலக்கணத்தின் சகவாசத்தினாலும், உறுதிச்சொல்லின் நன்மையில்லாத எனது இளமை சிறிய புத்தி திடத்தாலும், உத்தம சத்தியம் ஓங்கி விளங்கும் தெய்வீக ப்ரகாசமான பெருங்கூட்ட சபையில் திடங்கொண்டு ஏறப் பெற்றேன். ஜகம் பரவிய பெருஞ்சாகரமாகிய கல்விக்கடலின் கரை - அளவு - கனம் - உயரம் - பெருமை - ஆதரவு - நிலைமை யறியாத பேதையேன் அருமை அடக்கம் இல்லாது, சபைநேர் பார்த்து, வாய்விட்டு கைநீட்டிப் பிதற்றுவது கல்லா ஒருவன் குலநலம் பேசுதல் நெல்லினுட் பிறந்த

பதராகும்மே என்பதற்கிணங்க வாக்கியங்கள் தோறும் பல குற்றங்களை நிராகரிக்கக் கூடும். ஆனாலுஞ் செவிகேட்டு தெரிந்தோர்கள் சிறுமழலைச் சொல்லெனவே புவிநீட்ட பொறுமை தரம் போற்றுமெனவே பணிந்தேன். கர்ண உணர்ச்சியை யடைந்த தெள்ளறிஞர்கள் இது சிறுமழலைச் சொல்லெனவே பாவித்துப் பூமாதேவியின் நீண்ட பொறுமைக்கு ஒப்ப குற்றங்களைப் பொறுத்துக் காப்பார்களெனவே துணிந்து வந்திருக்கின்றேன்.

## நங்கை பாட்டு

(காவடி சிந்து வர்ண மெட்டு)

இராகம் : ஆனந்த பைரவி.

19. அன்னை குசலாம்பிகா முன்னறக் கொடியேந்தி
அன்னம் பாலித் தருளு வாயே
அண்ட பிண்டங் கண்டு கண்டு
ஆத ரித்தருள் காத லித்திரு (அன்னை)

போதகத் தணி பாத பத்மினி
தேவி எனதுடல் பொன்ஆவி யுனதானதால்
தீன ரட்சகி வரு வாயே
தேகி பாகி போகி யோகி (அன்னை)

திரிபுரை யலர் பரிபுர மலர்
உரதிர நலம் பரிவர மருள்
புவனகாரணி உந்தன் அமல வாழ்வின்
பெருமை புலவருஞ் சொலஎளி தாமோ (அன்னை)

புத்தர் முத்தர் சித்தர் பக்தர்
புடைகொடு வகம் நடமிடு சுகம்
படவிடை தகும் கொடையிட மருள்நாளும்
அன்பர்கள் செய்யும் நீளுங் கொடைமடத்தில் (அன்னை)

நல்ல றிவானந்தி நீநல் காயே
நாத வேத போத கீத
நடமிடு மன்பர் திடம்பல யின்பு
கொடுவடர் துன்பு விடுபட வருள். (அன்னை)

## சந்தனம் பாட்டு

(கானகத்திலே வன்னி என்ற மெட்டு)

20. என்னகத்தில் வாழ்சுத்த நின்மலா உனக்கபயமே
வரவென் தவமே பதத்து பயமே
தரச்சமயமே ஏ! ஏ!! ஏ!!!
சுத்த நின்மலா உனக் கபயமே (என்)

பக்த ரட்சகா பவமுற்றும் பட்சகா
பதபட்சம் வைத்த சுத்தர்கட்கு - நத்தி
சுத்த வித்தைதந்த பண்டை பூரணா
அன்பு கொண்ட காரணா - உலகுண்ட நாரணா
சுத்த நின்மலா உனக் கபயமே (என்)

கால கர்மமுஞ் செய்யும் நாளின்
தர்மமும் ஆயுள் கற்பனையும் - விற்பனயும்
ஒப்பனையும் இப்பணியுங் காணும் நாதனே
அருள்ஞான போதனே எனையாளும் பாதனே
சுத்த நின்மலா உனக் கபயமே (என்)

உன்னடிமையே எல்லாம் உன்னுடை மையேயென
உண்மை கண்ட நன்மையாளர் - தன்மனதில்
வெண்மை யாக ஓங்கும் அத்தனே
ஜகந்தாங்கும் கர்த்தனே சருவாங்கச் சித்தனே
சுத்த நின்மலா உனக் கபயமே (என்)

கிரம யோக்யமே நித்ய பரம
பாக்யமே முற்றுங் கீர்த்தி - நாத
மூர்த்த தீர்த்த க்ஷேத்ர பாத்ர
சூத்ர மறிகின்ற யோகமே - அறிவானந்த
வாகமே கருணை சிந்து மேகமே
சுத்த நின்மலா உனக் கபயமே. (என்)

## உரை

**நாயனார் :**

அன்னம் போலும் அசைந்த நடையையுடைய எனது ஆருயிர்க் காதலி! என்னால் உனக்குச் சொல்ல வேண்டிய அழகும் அருமையும் வாய்ந்த வாக்கியங் கேட்பாயாக.

## பாட்டு

இராகம்: சங்கராபரணம்

21. அன்னமே நீகேளாய் என்அருமை திருமொழியே
உன்னை மணஞ்செய்த நாள்முதலா யிந்த
மன்னனைக் கண்டெதிர் பேசறியா சந்த (அன்ன)

## உரை

நாயகி! 'உன்னைக் கல்யாணஞ் செய்த நாள் முதல் இதுவரையில் மணாளனாகிய என்முன் சாவகாசமாய்த் துணிந்து நின்று எதிர்வாக்கியந் தந்தறியாதவள் நீ யாவாய். ஆனாலும் இப்போது பேசும்வேளை வந்தது. அப்படியே பேசினாலும் அபல பேச்சுகள் கூடாது. காரியார்த்தம் வேண்டாம். காரணார்த்தமாய் இகபரார்த்த சிந்தனையாகக் காலட்சேபஞ் செய்யலாமென்ற எனது உள்ள எழுச்சியை விளக்கமாய்த் தெரிவிக்கின்றேன். கவனித்துக் கேட்டு பதிலளிப்பாய்.

## பாட்டு (முன் தொடர்)

இன்னிலந் தன்னிலே நாம்நர ஜென்ம மெடுத்ததினால்
பொன்னிலம் மாதரின்பங் கொண்டு புன்சடம்
நன்னிலங் காணா தழியுதே சங்கடம் (அன்ன)

ஏனோ பரநாதன் செயல்தானோ வலசீவச் செயல்
தானாகவே வருமண்ணியில் தீநோய் புவிநூலாம் மயல் (அன்ன)

## உரை

காதலி! இம்மண்ணுலகத்தில் அரிதாகிய ஆறாவது அறிவைத் தவத்தை முன்னிட்டு பெற்றுவந்து அவதரித்த மனித ஜென்மாக்களில் பல பிறவியுண்டு. அதுவும் அவரவர் முன்செய்த கரும தரும பலத்துக்கேற்றபடி பிரம்மனால் உயர்ந்த குலத்திலும் தாழ்ந்த குலத்திலும் செல்வபுத்திரர்களாகவும் வறுமையுள்ளவர்களாகவும் அவையவப் பழுதுள்ளவர்களாகவும் இல்லாதவர்களாகவும் விவேகம் உள்ளவர்களாகவும் இல்லாதவர்களாகவும் பிறந்திருக்க நாம் கண்ணால் பார்க்கிறோம். ஆனால் ஆறாவது தூய அறிவைப் பெற்று, அது விளங்கத் தெளிவாகக் கல்வியை உணர்ந்தும், மெய் பொய் இன்னது என உணர்ந்தும் பொய்யான பொருளிலும் பூமியிலும் பெண்கள் மேலும் இச்சை

வைத்து, அபலமான இந்தச் சடம் அழிந்தும் பகவன் திருவடி நிலத்தையடைய கருத்தில்லாமல் வீணாய்ப் பிறந்து இறந்து கஷ்டமடைவது என்ன காரணமென்றால் அதுவும் அப்படியிருக்கலாமோ வென்னில் இது கூடாது. சிவச்செயல் வேறு; சீவச்செயல் வேறாகும். இப்படி கெடுவதெல்லாஞ் சீவச்செயலைக் குறித்தது. இந்த ஜீவன் உலக பொய்க்காட்சியைக் கண்டு, ஆனந்தங் கொண்டு, இதுதான் மேலென்று நிச்சயித்து, காமம், மோகம், மதம், மாச்சரியம், குரோதம், லோபம் என்ற தனக்குச் சத்துருவான வகையைக் கைக்கொண்டு அழிகிறார்கள். அப்படிப்பட்ட இந்த உலக பொய்க்காட்சியில் ஈடுபட்டு மங்கிக் கிடப்பவர்களின் அனுபவமிப்படி. ஆகையால் புண்ணியத்தின் பலம் இவ்வளவுதான் என அறியாத தெட்சண பாகத்திலே ஒரு கருத்தைக் கொண்டேன். உனது உள்ளத் திருப்தியை எதிர்பார்க்கிறேன். பதில் சொல்வாயாக.

## விருத்தம்

**நங்கை :**

22. சொல்ல லென்பெண் களுக்குச் சுயகாவ லேது முண்டோ
    இல்லை பெற்றார் பிறந்தார் இறைமக்கள் பாங்கா காவல்
    அல்லையேல் நாளு மேச்சாம் இறையுன தடிமை நானே
    வல்லனுள் மனதை மாற்ற மார்க்கமொன் றறியேன் மன்னா.
    (22)

## உரை

நாயகா! பெண்களாய்ப் பிறந்தவர்களுக்கு என்று சுதந்திரமான அரசாட்சியும் அதிகாரமு முண்டோ? இல்லை. பெண்பாலுக்குப் பெற்றோர் ஆதரவிலும், இன்றேல் உடன்பிறந்தார் ஆதரவிலும், அதுவும் அற்றால் கொண்டவன் ஆதரவிலும், இதுவுமிழந்தால் மக்கள் ஆதரவிலும், அந்தத் தவமுமில்லையேல் பங்காளிகள் ஆதரவிலும் இருக்க வேண்டியவள். எல்லாம் நிர்மூலமான போது இரவு பகலும் உலக இழிசொல்லுக்கு உடையவளென்பதில் சந்தேகமில்லை. ஆகையால் தங்களடியிலிருந்து என் காலத்தைக் கழிக்கக் கடமைப்பட்ட வடியாள் எல்லாமறிந்த வல்லவர் மனதேர்ச்சிப் பண்ண சமர்த்துண்டா? ஆகையால் சுவாமிகள் என்ன கருத்தைக் கொண்டு என்னைச் சோதிக்கின்றது.

## பாட்டு (முன்தொடர்)

நாயனார்

மச்சம் புலிக்கொடியோன் திருக்கச்சிக் கதிபதியோன்
இச்சையோ டீந்தா னிரணிய தர்மமே
உச்சித மாக நாம்செய்திடு மர்மமே (அன்ன)

கேளா யிப்புவியிற் பலநாளாய் வாழ்ந்தோரைச்சொல
தாளா குறைபட்டார் சிலநாளும் பசிகோளற்றிலர் (அன்ன)

## உரை

குணமணி! உன்னைச் சோதிப்பது வேறொன்றுமில்லை. நாம் ப்ராமண குலத்திலே பிறந்து அற்பத்தொழிலைக் கற்றுக் கச்சி மாநகரத்துக் கதிபதியான குண. பர வர்மன் மகன் நரசிங்கவர்ம மன்னனுக்கு அடிமைப்பட்டு ஜீவிக்குங் காலம் செஞ்சோற்றின் கடன் தீர எனது உயிரை நிச்சயமா யெண்ணாமல், பல ராஜ பகைவருக்குமுன் எதிர்த்து யுத்தம் பண்ணி, ஜெயம் பெற்று, அன்னவர் அரசை நிலைக்கச் செய்ததற்காக ஆசைகொண்டு, திரவியக் குவியல்களையும் பல பண்டங்களையும் பசுக் கூட்டங்களையும் இடபக் கூட்டங்களையும் ஏவலர் பலரையும் அனுப்பி இதைப் பலமாக வைத்துக்கொண்டு சிவனடி தொண்டு சிவானுபூதி கருமங்களையும் செய்து நற்பதம் அடையக் கடவீரென அனுப்பிவிட்டது. நமக்கு அது பெரிய பாரந்தானே? அதை என்ன செய்கிறது எனுந் தெளிவில்லாமல் உன்னைக் கேட்கிறேன்.

## விருத்தம்

நங்கை :

23. கேட்டதுமேல் மலர்மணமுஞ் சொற்பொருளும் உடலுயிருங்
கிளர்பால் நீரும்
நீட்டமுங்கண் கரும்பிரதம எள்ளுமெண்ணை நேர்நிகழ்ந்த நிருபன்
இல்லத்
தாட்டுவித்தால் ஆடுவதற் கடிமைப்பட் டேன்பெண்கட் கரசு
முண்டோ
கேட்டுமன வாட்டமென்ன கலகவகை நலம்பெறுமோ
குரகமாமோ. (23)

## உரை

காதல்! தாங்கள் கேட்டது சரியான வாக்கிய மேலாகும். ஆனாலும் நான் தெரிவிக்கின்றேன். நாம் இதுவரை நடந்துவந்தது யாதெனில் மலரும் மணமும், சொல்லும் பொருளும், உடலும் உயிரும், பாலும் நீரும், கரும்பும் ரசமும், எள்ளும் எண்ணையும் போல சுத்த மன முடையவளாய் ஒருமித்து சுவாமிகளுடைய ஆக்ஞைக்குக் கட்டுபட்டு தங்களாலிட்ட தொழிலைச் செய்ய அடிமைப்பட்டிருக்கும் பெண்களுக்கு என்ன அதிகாரமுண்டு என்று கவனிக்குறீர். குடும்பத்தில் இவளால் கலகம் வந்தால் அந்தக் குடும்பம் விருத்தியாகுமோ?

## விருத்தம்

**நாயனார் :**

24. ஆமுன் னின்று அறிந்தனை சந்தனா
சாமி யம்பல சாற்றினாள் தக்கதா
தோமிலாத உன்துப் பென்ன சொல்லுகப்
பூமி மெச்சும் நற்போத புலமையோய். (24)

## உரை

சந்தனா! நீயோ கல்வியில் மிக்கத் தெளிய படித்திருக்கிறாய். கூர்மையான அறிவில் விசேடி. நீ முன்னால் கேட்டிருக்க என் வினாவுக்குப் பதில் விடை கூறிய நங்கையின் வாக்கியம் ஒப்பத்தக்கதா? குற்றமில்லாத உன் அறிவின் சமாதான மென்ன? உன் புலமைத் தரத்தைப் பார்க்கலாம். சொல்வாய்.

## பாட்டு

**சந்தனம் :**

25. புலமையீர் கேட்ட வகையில் பெண்பேதை
போற்றனு பவமும் போதாதே
தலைவிசொல் லுவமைத் திறமல ஒருகால்
தவறுண்டு தனிபிரிந் தழியும்
அலையளி கவிஞன் மறலியும் அன்னம்
ஆலையுஞ் செக்குஞ் சத்துருவாம்
நிலைதவ பகைஞ ரறுவருண் டதனுள்
நின்றவர் பலனடை யாரே. (25)

## உரை

சுவாமி! வித்துவ சிரோண்மணியாகிய தாங்கள் அடுமையைக் கேட்ட விதத்துக்குப் பதில் சொல்லப் பெண்ணிலும் பேதமையுடைய நான் ஒப்புரை கூற அனுபவம் பத்தாதவளுமாவேன். ஆனாலும் அம்மையாள் எடுத்துரைத்த உவமைக் குறிப்பு சமாதானத்துக்கு ஒத்ததல்ல. அவைகளுக்குச் சத்துரு உண்டு. அது எவ்வாறெனில் மலரின் மணத்தைப் பறிக்குஞ் சத்துரு வண்டென்றும், சொற்பொருளைப் பிரிக்குஞ் சத்துரு வித்துவானென்றும், உடலுயிரைப் பிரிக்குஞ் சத்துரு அன்னப்புள் என்றும், கரும்பின் ரசத்தைப் பிரிக்குஞ் சத்துரு செக்கு என்றும் சொல்லப்பட்டிருக் கின்றது. அதுபோல் ஒருவர் எடுத்த தவத்தைக் குலைப்பதற்கு ஆறு பேர் சத்துருக்கள் உண்டு. அதாவது காமம், மோகம், மதம், மாச்சரியம், குரோதம், லோபம் என்பதாகும். காமமென்பது தனம், தானியம், புத்திர பௌத்ராதிகளின் மேல் அதிக ப்ரீதி வைத்தல் - மோகமென்பது தனக்கு உண்டாயிருக்கும் பொருள் போதாதென்று இன்னுஞ் சம்பாதிக்க வேண்டுமென்று ஆசைவித்தல் - மதமென்பது திரவியம் அதிகரிப்பினால் இதரர்களை லட்சியம் வைக்காமல் பேசுதல் - மாச்சரிய மென்பது தன்னைப்போல் பிறருஞ் சுகம் அனுபவித்தலைச் சகியாமையை உண்டு பண்ணுதல் - குரோதமென்பது ஒருவனுக்குக் கெடுதி விளைவிக்கப் பிரயத்தனஞ் செய்தல் - லோபமென்பது தனது சொத்திலிருந்து அறமென்னுந் தருமத்தைச் சிறிதேனும் நினையாமையை உண்டு பண்ணுதல். இந்த ஆறும் பெண்களுக்குப் பூஷணமாகும். இந்தப் பூஷணத்தை அற வேண்டாமென்று நீக்கியப் பெண்களும், அவருக்கு இசையாத ஆடவர்களும் உலகிலில்லை. அல்லாமலும் - உபதேச காண்டம் - காசி காண்டம் - பிரமோத்திர காண்டத்திலும் பெண்களாலே வரும் வாழ்வு, பெண்களாலே வரும் தாழ்வு, பெண்களாலே வரும் கஷ்டம், பெண்களாலே வருங் குஷ்டம், பெண்களாலே வரும் இழிவு, பெண்களாலே வரும் அழிவு என்று சொல்லியிருப்பதால் பெண்களுள்ளம் ஒரு நிதானத்திலிராது. ஆகையால் தாங்கள் என்ன கருத்தைக் கொண்டு விசாரிக்கின்றதோ அதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

### பாட்டு (முன்தொடர்)

**நாயனார் :**

புண்ணிய மார்க்கமதை மனதெண்ணி யழைத்தேனிதை
நண்ணில் நால்வேதம் அருமறை யாகமம்
விண்ணி னருகன் சொல்லிய பாகமும் (அன்ன)

நதிகளுமாழி நீராடினும் நிதிகொடு பலதல மோடினுங்
கதியடைந் தோரிலை தேடினும் பதிபசு பாசமற்றா டினும்
(அன்ன)

### உரை

காதலி! நம்மிடம் வந்த பொருளை நம்மதல்லவென அளித்தவரையே சேரும்படி புண்ணியத்தைச் செய்து விடுவோமே என்னில் அதை விசாரிக்குமிடத்து - நான்கு வேதம், ஆறு சாத்திரம், பதினெண் புராணம், பதினெண் உப புராணங்களிலும் சொல்லியிருக்கும் சைவசித்தாந்த துவிதாத்துவித கரும தரும மார்க்கங்களைத் தெரிந்து, முயன்று, திரவியப் பொதிகளைச் சுமந்து, பல மூர்த்திதலம் தீர்த்தங்களுக்குச் சென்று, தங்களிஷ்ட காமியங்களைப் பொறுத்து தீர்த்த ஸ்நானஞ் செய்து, தல பிரதட்சணம் வந்து, தேவ தரிசனஞ் செய்தாலும் பக்தி பதவிக்குக் காரணமான பதி பசு பாசம் என்னும் மூவகை சித்தாந்த விசாரணை செய்து, அதன்படி மன ஒருவழிப்படுத்திப் பூசியாதவர்களுக்கு எத்தனை பாடுபட்டாலும் உண்மை பயன் சித்திக்காது என சொல்லப்பட்டிருக்கிறது. அல்லாமலும்.

### பாட்டு (முன்தொடர்)

தான தருமங்களிலே அன்னதான பெருமை போலே
மோன போகத்திலு முண்டோ சிலாக்கியம் - வானகம் (அன்ன)

பெற்றவ ரிப்புவி யொன்றிலை சித்தரு முண்ண வெறுத்திலை
அத்தனும் நீக்கி யொழித்திலை பத்திய மருந்திடப் பெருமலை
(21) (அன்ன)

### உரை

நாயகி! கற்றோர்கள் அத்வைத சாத்திரங்களை முற்றும் உணர்ந்து அதில் சொல்லியபடி நிட்டானுபூதி யோக சமாதியிலிருந்தாலும், தேகம் அழியாமலிருக்கக் கற்பங்களைச் சாப்பிட்டு சித்திபண்ணி நீடியகாலம் இருக்கலாம் என்று முயன்றாலும் அது சித்திக்க வெகுகாலஞ் செல்லும். அப்படி சித்தித்து மௌனானந்தத்தை யடைந்தாலும் பிதுர்லோக பதம், சுவர்க்கலோக பதம், இகலோக பதந்தான் அடைந்து பார்க்கலாம். நின்மலானந்த யோக்கிய சிலாக்கியத்தைப் பெற்றவர்கள் இவ்வுலகத்தி லெவருமில்லை. இதற்குள் பசியற்று, உண்ணா விரதம் பெற்று, தேகமழியாதிருக்க சித்தர்,

யோகர், ஈச்சுரனாலுமாயுள்ளது அன்னமாகும். அதிலும் தருமம் -32 - தானம் - 25 - பெரும்புண்ணியம் 10 என சொல்லியிருக்கும் வகையில் முக்கியம் உலகங் காப்பது அன்னதான மல்லாது வேறில்லை. இதைத்தான் முக்கியமாகச் சிந்திக்கிறேன்.

சந்தனா! இப்போது நான் சொல்லிய பெரும் புண்ணியத்தை யார் யாருக்குச் செய்யலாம்? அது செய்யுங் காலமெப்போது? உலகில் பெரியோர் சொன்னதுக்கு ஒப்பாக வீண்வார்த்தைகள் பேசாமல் என் இச்சைமுடிய முற்றுங் கற்றவளாக எண்ணிக் கேட்கும் எனக்கு விடையளிப்பாய்.

## விருத்தம்

**சந்தனம் :**

26. முனம்பாக்கி வினைபேதம் அறபேதம் நினைவு
முதிர்பேதம் நிலபேதம் விதைபேதம் உணவு
தனில்பேதம் சேர்க்கைபே தந்தெய்வ பேதம்
--------- --------- -------- --------
இன்பேதம் அறநீக்கித் தமக்கடிமை எளிமை
என்னிலுமிக் கடிமையடிக் கேழையரு மாகிச்
சினங்காமம் நானெனதென் பதுவும்அற்றால் சகல
சித்தியுங்கை கூடிபர முத்தியின்வாழ் வாமே. (26)

## உரை

சுவாமி! நாம் முன்னஞ்செய்த வினைபாக்கித் தொடர்பிருந்தால் விடாது. அதிலுஞ் செய்கிரியையில் பேதமும், முதிர்ந்த நினைவின் பேதம், பிறவி நிலத்தின் பேதம், விதையின் பேதம், அளிக்கும் உணவின் பேதம் அன்பில் பேதம், குரு பேதம், கல்விதரத்தின் பேதம், சேர்க்கை பேதம், தெய்வ பேதம், ஜாதி பேதம் இவ்வகைகளை முற்றும் அறவொழித்து தங்களுக்கும் தங்கள் பத்தினியாகிய எமது அம்மையாருக்கும் அடிமைத் தொழிலுக்குள்ளாகியிருக்கும் எளியவளாகிய என்னிலும் மிக்க அடிமைகளுக்கும் அடிமையாய், அடக்கம், பொறுமை, அன்பை சாதித்துக்கொண்டு, கோபம், காமம், அகங்காரம் இத்தருமத்தை நான்தான் செய்கிறேனென்ற எண்ணமும் விட்டால் சகல சித்திகளும் கைக்கூடுவதல்லாமல் பரமுத்தியுங் கிடைக்குமென்பது அடிமையின் உள்ளத்துணிபு. மேலும் வர்த்தமான

மூன்று காலத்துள்ளாயிருக்கும் எல்லாவுயிரும் தன்னுயிருறெனக் கருதிச் சத்திய புத்தியோடு இருப்பவனும், உலகு அரசுக்கு ஆண் சிங்கமானவனும், பொதுவிடமான பெருஞ்சபையில் தனது முடிதாழ்த்தி வணங்குவானாயின் அதை விடப் புண்ணியம் வேண்டுமோ? அந்தப் புண்ணியமே அவையில் வணங்கிய மன்னவனை மூவுலகுந் துதிக்கச் செய்யும். அல்லாமலும் தனித்த யிடத்திலிருந்து தத்துவாதிகளை விசாரணைபடி நேதிபண்ணி, சொரூபமே தானாகி, தூலம் சூக்குமம், காரணமென்னும் மூன்று சடப்பற்றை விட்டு அப்பாலிருக்கின்ற பரமான் மாக்களுக்கு மட்டுஞ் செய்வது என்ற உயர்வு தாழ்வு பார்க்கும் பேத எண்ணம் தருமாதிபதிகளுக்கு முற்றுங் கூடாது. ஆகையால் மேல் அம்மையாள் உத்தரவை அனுசரித்துச் செய்யட்டும். நமஸ்காரம்.

## உரை

**நாயனார் :**

நங்காய்! அருமைத்தரத்திலிருக்கும் ஏவல் காரியம் விசாரணை எதற்காகவெனுஞ் சலிப்பு உன் உள்ளத்திலுண்டோ? நாம் செய்யப் போகும் புண்ணியக் கிரியையில் மூவரும் ஒருமைப்பாடாகவே இருக்க வேண்டும் என எண்ணம். அது உனக்குச் சம்மதந்தானே?

**நங்கை :**

சுவாமி! சந்தனத்தாளைக் கேட்டதில் எனக்கு வருத்தமில்லை. அவள் சொல்லி வந்ததும் நல்வழிதான். மேலும் படித்தவளல்லவா? நல்ல புத்திசாலி. எனக்கு மிகவும் சந்தோஷந்தான்.

**நாயனார் :**

காதலி! சந்தனத்தாள் இதுவரை சொல்லி வந்தது உனக்குத் எதார்த்த ஒப்பமானால் அவளுக்கு நல்ல பெயரிட்டு இந்த ரத்தினாபரணத்தை அவள் கழுத்தில் மாலையாகப் போடுவாய். சேதனாமிர்த மென்று பெயரிடுவாய்.

**நங்கை :**

காந்தா! அப்படியே தங்கள் சம்மதப்படி ரத்தின ஆபரண அலங்காரஞ் செய்தேன். சேதனாமிர்தமென்று பெயரிட்டேன்.

## பாட்டு

இராகம்: அடாணா

**நாயனார் :**

27. ஜென்மமென்ன ஜென்மமடி எந்தன் மானே - அருள்
ஜீவ காருண்ய மெய்ஞ்ஞானமு மில்லாத (ஜென்ம)

தன்ம தானந்தயை சற்று மில்லாமலே - தனமலை
தனிலடைந் தனுதினம் மனமயலுடன் புரள்வேசரி (ஜென்ம)

நீண்ட நாளாய் அரும்பாடு பட்டு தேடி
நீள்பண்ட முண்ணாத பாவி - என
தாண்டவனே யிந்த வேளை யுதவு என்றோர்
ஆபத்துக் காகாத லோபி - குழி
தோண்டிப் புதைத்துச் சாங்காலம் மனைமக்கள்
துணைவர் களிடம் மொழியாமலே
பணமது காத்திடும் அலகையாம் (ஜென்ம)

பெற்றார் பிறந்தாரை வஞ்சித்துப் பெண்டு
பிள்ளைக் கென்றொளித்திடு மூடர் - எழில்
வற்றாத செல்வ மிருந்தும் ஏழைபோல
வாங்கி யுண்ணு மதிகேடர் - காம
நற்றாசை கொண்டு புன்வேசிக் கழித்துடல்
நைந்து புன்னோயி லழுந்திபின்
நிந்தை யிலாடிடு புல்லரின் (ஜென்ம)

சங்கை யில்லாமல் கண்காமம் புலாலுண்ணத்
தந்து வீணிற்சில விடுவார் - மன
வங்கையால் வம்பு வழக்கி லருங்கொலை
வன்களவு விட்டு கெடுவார் - இரு
செங்கையி னாலிடு வாரைக் கெடுத்திடும்
தீயர் கள்ளகுவேன் என்று
உபாய மொழித்திலை யென்றிடு (ஜென்ம)

தாய்மனை துணைவியைக் கூட்டிக் கொடுத்துத்
தனவானைத் தன்வசஞ் செய்தும் - தினம்
ஒய்வற லாகிரி வஸ்தைக் கொடுத்துத்
தியோகம் பெறநினை வெய்தும் - வெறி

நாய்போல் ஒருசந்தி பானை யறியாமல்
நஞ்செனும் வஞ்ச தனங்கொள்ள
நெஞ்சு துணிந்த சழக்கரின் (ஜென்ம)

## மேற்படி விருத்தம்

28. ஆக்கைநிலை. எனமகிழும் அங்கண் போலும்
அந்தியத்தி லறம்புரியும் அசத்தன் போலும்
மோக்கபகை காமாதி முரண்பட் டோங்கும்
முனிவகந்தை பொய்வஞ்சம் பொறாமை யற்று
காக்குமறை பரசிவனார் கழலன் பார்ந்த
கற்றாரில் அற்றாரின் களைகண் டேந்தி
ஏக்கமற வன்னமிட எண்ணமுற் றேற்கு
இதங்கூட்டுந் தேவியுன் சம்மதங் கேட்டேனே. (28)

## மேற்படி உரை

காதலி! இப்படி நீதி நூல்கள் உரைத்திருப்பதால் ஜீவகாருண்யத்தை முன்னடைவதோடும் உத்தம சத்திய தத்துவ ஞானிகளுக்கு அன்பு பாராட்டித் திருவடியணிந்து திருவமுதூட்டிக் களையாற்றுவதுமேல் என சம்மதங் கொண்டேன். உன் சம்மதமென்ன? தெரிவிப்பாய்.

## பாட்டு

(செந்தூர் வேலாண்டி என்ற மெட்டு)

**நங்கை :**

29. கேட்டதும் சம்மதமே எனைக்
கேட்டதுஞ் சம்மதமே - வேண்டியெனைக்
கேட்டதுஞ் சம்மதமே வேதம்
உரைத்ததும் நற்பமே. (கேட்ட)

தாண்டி ஆணை கடந்தாள்
சதியெனும் பேரு முண்டோ - ஜகமுழுதும்
பணிய மிகமதியில் சிறந்த
மகிபனே உமதடிகெதி யடைந்தவள் முனே (கேட்ட)

சத்தியமும் எவர்க்கும் நித்திய வஸ்துவெனில்
முத்தர்கள் திருவடி பெற்றிட மகிழ்ந்தெனை (கேட்ட)

பாக்கியத்தில் அஷ்டாங்க மார்க்கத்தில் நாளுமோங்கக்
காக்குங் காதலன் தாங்க ஏற்குமன மெய்வாங்க (கேட்ட)

வாசாம கோசரமாய் மாசறக் கற்றக்
குணமறை முறை வழுவிலா பரை
திருவடி பணிஇறை யருள்பெற வென்றும்
நிறை யறிவா னந்தன் முன். (29) (கேட்ட)

## உரை

நாயகா! குன்று போன்ற புயத்தில் நிமிர்ந்து ஏறிய ஊறலைப் பகைவர்களிடத்தில் ஒழிக்கும் பராக்கிரமத்தையுடைய காதலா! சிந்தித்து அடியாளை வருவித்து இருமனமும் ஒருமைப்படப் பல உதாரணங்கள் காட்டி வினாவும் வாக்கியத்திற்குப் பதில் விடை கூறப் பேதையாள் எத்தரத்தைப் பெற்றேன். தங்கள் உத்தரவிற்குத் தடுத்த வார்த்தை இது வரையிலும் உண்டோ? தேவரீர் திருப்திக்கு மாறாத அடியாளுக்குச் சம்மதத்திலும் சம்மத சம்பூரணமும்!

**நாயனார் :**

சத்தியமே பூரணமாய் நிறைந்துள்ள அரிய திருச்சமூகத்தின்கண் வரும் வினாவிற்கு எதிர் நோக்கிட்டிருக்குங் காவலா! நாம் இனி ஆத்ம சொரூப பரமானந்த அருண்ஞான தேசிக சுசீலர்களாய் வசிக்கும் சத்துவகுண சங்கமாதிகள் முதலாகத் துறவுபூண்ட பலரும், மிக்கயேழைகளும் இனிதினம் நமது மடத்தில் வந்து, திருவமுது அருந்தி, பசியின் பிணி தீர்ந்து களைப்பாறும்படி எங்கும் தண்டோரா மூலம் தெரிவிப்பாய்.

(வெட்டியான் வருதல் பரங்கள்வரவு)

## பாட்டு உடற்கூற்று

30. சிவா சிவா சிவா சிவா சிவா சிவா சிவாயமே
யவா யவா யவா யவா யவா யவா யவாயமே (சிவா)

நெஞ்சமே நீகொஞ்சமும் நினைந்து வுன்னுடற்குளே
விஞ்சையான தின்னதென் றறிந்திடாய் வீணாண்மையேன்
மிஞ்சியோடி யுன்சமர்த்தை மேலென விரித்திடில்
வஞ்சகன்மா பாம்புகொத்தி மாளுவா யறிந்திடாய் (சிவா)

சாக்கடை குழியிலே தகைமையா யெடுத்தமண்
தீக்கலந்த ரத்தநீரைச் சேர்த்து வுண்டையானமண்

பூக்கும் உந்திநாட்டில் வான்புகழ வந்தகுயவனார்
சூக்குமத் திகிரியில் கைதொட்டுப் பண்ணும் பாண்டமே (சிவா)

நாத்தமுற்ற மண்ணிலே வனேகனேக ரூபமாய்
ஏத்திடச்செய் தானதே எடுத்தடிக்கிச் சூளையில்
நேத்தியாகச் சுட்டதே நெறிந்த பாண்டமெத்தனை
பாத்திரத்தில் வெந்திடாதெடுத்த பாண்ட மெத்தனை (சிவா)

வாணிபத்திலிருந்த பாண்டம் வையகத் தெடுத்தபேர்
வேணபேரிதிற் சலத்தை விட்டெடுத்து ஆளையில்
தாணுவில்லா பாண்டமே ஜலத்தினாலே ஊறிமண்
வீணிலே கணத்திலே விரிந்துடைந்து போகுமே. (30) (சிவா)

## பாட்டு

இராகம் : இந்துஸ்தான் தோடி

**நங்கை :**

31. சரண மையா சங்கமரே
        சரண மையனே
    சித்தி தரும் ஞான மூர்த்தி
        திருவடிக் கடியேம் போற்றி (சரண)

    மாதவமே மெய் துணிந்தோம்
        மாசிலாப் பதம் பணிந்தோம்
    தூய ஞான நேயர்களே
        தொண்டரின் சகாயர்களே (சரண)

    மின்னொளி போல் ஆமிக்காயம்
        மேதினியின் அருள் செய் நீசரே
    தேவர் தயைசெய்து காரும்
        திருவமுது உண்ண வாரும். (31) (சரண)

## பாட்டு

இராகம் : தேசிக தோடி

**நாயனார் :**

32. மாமறைசொல் மௌனயோக மகம்புரி மெய்ஞ்ஞானிகளே
    தாமதஞ் செய்யாமல் பூசை தட்டிலிரும் மானிகளே

எங்கள்முன் ஜென்மவினை இன்றுடன் தீரவெண்ணிச்
சங்கமர்களின் திருத்தாள் வழிபாட்டை நண்ணி

அருமை பொற்றாள்குளிர அபிஷேகம் செய்துவைத்தோம்
முருமலர்கள் கொண்டு முண்டகத்தா ளர்ச்சித்தோம்

அட்டாங்க பஞ்சங்கமாய் அரும்பதமே வந்தித்தோம்
தட்டாம லமுதுண்ண தயவுண்டாகச் சிந்தித்தோம். (32)

## மேற்படி பாட்டு

33. அன்னம் படைத்திடுவாய் பெண்ணே வந்த
சன்யாசி மார்க ளுக்கே

பொன்னா சனத்தைப் புகழப் பொருத்தி
முன்னிள வாழையிலையைத் திருத்தி
இளவா ழையிலை தன்னைச் சுற்றிப்
பிரிவாக மணம் ஏற்ற அறுசுவை (அன்)

பச்சடிகள் கறிபாகம் பரிமள மீறத்
தேன்குழம்பு வகைவிரி வாகச்செய்
வருக்கற்று வட்டற் பொரியற்
கறிசரி யாக. (33) (அன்)

## ஞானசம்மந்தர் வரவு

சம்மந்த சுவாமிகள் - திருநாவுக்கரசு - திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருநீலநக்கர் - கணநாதர் - முருகநாயனார் வருகை. இதில் சம்மந்தர் கையில் பொற்றாளம் - திருநாவுக்குக் கையில் உழவாரம் - திருநீல கண்டருக்குக் கையில் வீணை - திருநீல நக்கருக்குக் கையில் விபூதி. சோளி - கணநாதர் கையில் திருமுறை புஸ்தகம் - முருகருக்குக் கையில் புஷ்ப குடலையுடன் வருதல்.

## பாட்டு

(சத்யமெங்குமே தளரா என்ற மெட்டு)

**சம்மந்தர் :**

34. சாட்சி சைதன்யமே என்றுஞ் சத்யம் - இதை
தவறா திருத்தல் எந்தன் பத்யம்

பெருங்காட்சி சாது சங்கமமே நித்யம்
நன்மை கடைப்பிடித் தேடுவதே மத்யம் (சாட்சி)

சர்வமத பேதமற ஒன்றே காட்ட
சம்பந்த னெனவே வந்தே னின்றே - சென்ம
தர்ம புருஷார்த்த மெதுவென்றே பார்க்கச்
சைவ சித்தசுத்த சைவம் ஒன்றே (சாட்சி)

மாசில் சிவபாத சித்தன் தந்தையாக
மாது பகவதி கற்பம் வந்தேன் - உமை
ஆசில் முலைப்பா லுண்டு மகிழ்ந்தேன் - முன்னம்
ஆறுமுக சாமி யிச்சம் பந்தன் (சாட்சி)

சகஜம் ப்ரபஞ்ச மாதை நீட்டும் - இடையில்
சதிசெய் வாழ்வி லானந்தங் கூட்டும் - கூட்டில்
யிகபரசுக மெண்ப தோட்டும் - ஓட்டில்
எமன் அதிகா ரகளங் கூட்டும் (சாட்சி)

கால நேமி மோசகூத்தில் சூழ்த்தும் - கூத்தால்
கண்மறைத்து பாழ்குழியில் வீழ்த்தும் - உந்தன்
ஜால தக்ர கோலமெல்லாந் தாழ்த்தும். - வெகு
சாக்கிரதை மோசம் போகேல் வாழ்த்தும் (சாட்சி)

அகண்டலை கோர்கிட்டி நானும் - வந்து
அறிவானந்தன் சொல்வதைக் கேளும் - பந்த
ஜகமுடல் வாழ்வு பொய்நூல் கேளும் - என்சொல்
சதியம் புண்ணியங் கைகொண் டாலும். (34) (சாட்சி)

## விருத்தம்

35. சீர்காழி சிவபாத விருதை யர்க்கும்
தேவியார் பகவதிக்கு மகவாய் வந்தேன்
மாகௌரி அமுதமுண்டேன் ஞான வள்ளல்
மாசிலிறை சம்மந்த னெனப்பேர் பெற்றேன்
சாகைபொற் கைதாளம் சிவிகை முத்து
தவிசுகுடை சின்னங்கள் தருகப் பெற்றேன்
யோகிதிரு நாவரசின் நண்பும் பெற்றேன்
உருமடிகள் குழுவுஞ் சிவபாக்கியந் தானே. (35)

## உரை

எனக்குக் கடவுள் திருவருளால் கையில் பொற்றாளம் பெற்றேன். மேல் முத்துப்பல்லக்கும் முத்துக்குடையும் சிவச்சின்னங்களும் கொடுத்துப் புவியின் கண்ணுள்ள சிவதலங்களைச் சுற்றித் திருபதிகம் பாடி வர உத்தரவளிக்க 3 வயதில் பெற்றேன். அத்தனையும் பெற்று தனது தந்தையரான சிவபாதவிருதையர் தோளில் தூக்கிக் கொள்ள தெட்சிண பாகம் நோக்கி வந்த எனக்கு இத்தனையுங் கிடைத்தல்லாமல் பரமஞான புருடனாகிய திருநாவுக்கரசு சுவாமிகளும் மற்றும் அடியார் கூட்டங்களும் கிடைத்தது. திருத்தோணியப்பருடைய கடாட்சம். ஆதலால் சிவ திருவடியை வந்திக்கின்றோம்.

பண் : தோடுடைய செவியன் விடையேறியோர்.

திருநாவு : கொடையாமூர் வேளாளன் கொருக்கை குடி

திருநீலக்கண்டர் : திருவருக்கத்தம் புலியூர் செனித்த நாயேன்.

திருநீலநக்கர் : சீர்சோழ நகர் சாத்தமங்கை வேத

கணநாதர் : மாவளங்கொள் சீர்காழி மறைகுலத்தான்.

முருகநாய : திருப்புகலூர் மறைக்குலத் துதித்த செல்வன்.

## பாட்டு

(ஆனந்தசெகன் மோகனா என்ற மெட்டு)

**பரஞ்சோதி :**

36. தேனே சித்தாந்த தவமே - உருவாய்வந்த
ஞானசம்பந்த சிவமே - அறிவானந்த
ஆனேறும் வாகனன் சொல் மானமறை - நேரோங்கு
வானே கருணாகர கோனே யடிமை தாங்கும். (தேனே)

## தொகையறா

சிதபேத மாயுலகில் சமணரும் புத்தருஞ்
செய்யுஞ் சங்கட வல்லலால்
தெளிவிலா தேக்குற்று தோணியப்பர்க் குந்தான்
சிந்தித் தமனு வேற்றியும்

சிதைதலற் றுலகு பரமார்த்த பலமடைய
நற்ஜெய காலமெதிர் நோக்குதல்
தினதவத் துற்றாழ்ந்த சிவபாத விருதையர்
தேனே சித்தாந்த தவமே
தேனே சித்தாந்த தவமே (தேனே)

## தொகையறா

சிதறாத வித்வபதி மருணீக்கிச் சமணர்மதம்
திறமென் றடைந்து சேட்டைத்
திலகவதி யாராதி தேர்ந்தவர்க்கும் அயர்வு
செய்திலான் மறுப்பு ரைக்கத்
திதியில்லை யாயினும் விதிசு மையெனக்
கருதித் தேறினர்க ளிதையறிந்து
தீரத் தண்டித்து முன்சேரதன் றாள்காத்த
தேனே சித்தாந்த தவமே (தேனே)

சிதகாச பாத்திரச் சதைகண்டு மறைகுலச்
செல்வரு மிவ்யாழ் வலோரும்
திருநீல நக்கரும் கணநாதர் முருகரும்
திருக்கூட்டத் திரளு மாகிச்
சிதசிவிகை பொற்றாளம் தவளகுடை சின்னமும்
திரியம் பகன் கொடுத்த
செல்வமென் றேற்று புவிநல்வலம் வரத்தேர்ந்த
தேனே சித்தாந்த தவமே. (தேனே)

சிதசக்தி பாலுண்டு வயதுமூன் றளவிலே
திகழ ஓதா துணர்ந்த
செல்வமே யருளார்ந்த சித்தே பரவானந்த
தெளி வொளிறு மாணிக்கமே
சிதவமிர்த கன்னலே கண்டே யுள்ளின்பமே
தேய்ந்த முக்கனி யிரதமே
தேசிகாவடிமை சத்திரம் வருக பணியேற்கத்
தேனே சித்தாந்த தவமே. (36) (தேனே)

## பாட்டு

(அவாசங்கமகமென என்ற மெட்டு)

**நங்கை**

37. வேதகுல திலக
 சாதகுண சொரூப விம்பந்தா (வேத)

மூவுல காதிய வெங்கும் ஞான சம்பந்தா
பாவன நேயம் விளங்கும் அருள்வித் தாரச்
சிவயோக பரங்கிரி யொத்தாள - தவசாலை
பலன்றகு வில்ல கேவலநிலை சத்யோதா
தினம்சொல்ல நாவி னித்திடும் பொற்பாதா (வேத)

பேதமி நிலையி லோது மதவாதிகள் பின்பற்றோர்
காவிய தீவழி கண்டுநன்கு முன்கற்றோர்
நாவறவே வுறைகொண்டு கர்த்த பிச்சாடண
திருகிச்சா ளருளுரு இச்சா முத்தரு
மெச்சா மறைகுரு பிள்ளைபூ பவனிசெய் பண்பாளா
போத வள்ளல் தேவென திருக்கண் ணாளா
நாவறவே வுறை கொண்டு (வேத)

மாதவ தினமணி பாதமணி கொண்டேமுன் வாழ்வுற்றார்
காமிய மாவதை யோட்டி வினை உழலற்றார்
சாமிகள் நாவரு ணீட்டித் தினம்
வற்றாதப் ப்ரசாதுகளின் பணிபெற் றாளைக்
குருநாத இகம்புகழ் வாகளா (வேத)

வருடற சீர்காழி மதியூக காவல்
திருந்தாள் வாழி ஓதகு மரகுரு
நாதன் அவதாரி யென்றொப்புங் காண்
தூயயில் வாழ்வடை தொந்தம் கண்டு
செய்யுங்கால் மாய ஜெகாதிய பந்தம்
அல்லால் ஒன்றாலுங் கெதிபாக மிலைக்கடை
நின்றா ருக்குட னாகு மெனிற் பிடி
உண்மையே நிறையறி வானந்தா
குண தண்மையே பெற உரை மாமைந்தா. (37) (வேத)

## பாட்டு

(நமோநம நாம சண்முகா என்ற மெட்டு)

**நாயனார் :**

38. ஜய ஜய சுவாமி சம்மந்தா
சைவ ஞான சம்மந்தா
ஜயம்பரவு மருணி றைவனே
பயங் கெடவும் வருகுரவனே (ஜய)

சாதுப்பா மாமலரிடு பேதைக்கோ ராவியு நெடு
தடத்த மறைமுறை நிறைநிறை
கொடுத்த திடநடை பெறவரை (ஜய)

தனதகமுங் கமலங்குளிர் சுகமுந் திருமணமும் ஒளிர்
சாதுக் களபேத குணமான தவ
வேத முதிராத விதிநாத சிவ (ஜய)

சத்வசித்த வித்வ பதிமேல் நடிக்கும் முத்த
சுத்த் அத்தன் பதமே கொடுக்கும்
சிவ ஜீவ உபவாச தினங்
கொண்டாளும் அருமை பாரும் (ஜய)

தவவறி வானந்தா முன்காரும் சரணஞ்
சமயம் மடஞ் செல்வோம் வாரும் (ஜய)

நானுஞ் சாதுக்கள் பாதம் ஊணி
நாமணக்கத் துதித்த நீள் பேணிக்
கோளற வண்ணம் ஊட்டல் என்ஆணி
குமரபதம் வந்து வைத்தல் என்காணி (ஜய)

ஆளும் வேதமே கெதியென் னாதா
ஆதி சைவ குரவதற் போதா
சாதுவாங் குழாத்தின் ப்ரசாதா
சன்மார்க்க பூஷண விநோதா. (38) (ஜய)

## மேற்படி பாட்டு (நாமாவளி)

39. சாதுக்கள் திருவடிப் பணிவோமே
ஜன்ம பிணியறுக்கத் துணிவோமே

சைவ சித்தாந்த தம்பதியே
சம்பந்தன் பொன்னருட்டாள் கதியே
சிவ பாத விதைய சிரோன்மணியே
திருவடி களைக் கண்மணியே (சாது)

கோதில் பகவதியார் குண விளக்கே
குமர சிவாமணி யாமருள் விளக்கே
தெய்வீகச் சிங்கா சனாதி பதே
தினமுண்போம் தேவார திருவமுதே. (39) (சாது)

## பாட்டு

பண் - பழந்தக்காரகம்

**சம்மந்தர் :**

40. நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்
சிறைகொண்ட வண்டறையும் செங்காட்டங் குடியதனுள்
கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சுரத்தானே. (40)

41. பைங்கோட்டு மலர்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டுள் அனலேந்தி விளையாடும் பெருமானே. (41)

42. கூரார விரைதேர்ந்து குளமுலவி வயல்வாழும்
தாராவே மடநாராய் தமியேற்கொன் றுரையீரே
சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பேராளன் பெருமான்றன் அருளொருநாட் பெறலாமே. (42)

43. செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீறணி மார்பன் சிறுத்தொண்ட னவன்வேண்ட
அந்தண்பூங் கலிக்காழி அடிகளையே யடிபரவும்
சந்தங்கொள் சம்பந்தன் தமிழுரைப்போர் தக்கோரே. (43)

## நடை

இவ்வாறு திருப்பதிகம் பாடி, அரங்கேற்றி, ஆசீர்வதித்து, பாஞ்சோதியாருக்குச் சிறுத்தொண்டரெனப் பெயரளித்து,

சீராளன் என்னும் ஒரு புத்திரனைப் பெற்று, களித்துப் பெருமான் திருவடியைச் சார்வானென்றுரைத்து எழுந்து, திருக்கூட்டத்துடன் திருமருகல் சென்று, தேவதரிசனஞ் செய்து சிலநாளிலிருந்து பல தலங்களுக்குச் சென்று, பிறகு காயத்திரி அம்மையார் கற்பவதியாகிக் காலஞ்சென்று ஓர் புத்திரனைப் பெற்று சீராளன் என பெயரிட்டார்கள்; வளர்த்தார்கள்.

## விருத்தம்

**நாயனார் :**

44. எனது சேவகனே கேளாய் என்னரும் புதல்வ னுக்குக்
கனதையே ரதியாச் செல்வ கலைகள் போதிக்க வேண்டித்
தனஉப நீத ரான சாரதி யாரைக் கண்டு
எனதுமுன் காணவேநீ இக்கண மழைத்து வாராய். (44)

## பாட்டு

**வாத்தியார் :**

45. ஆத்துமன் நானே - நற்போதக
வாத்தியார் நானே (ஆத்து)

ஆத்தி சூடியோ னுக்கன்பு சாதிக்கும்
ஏத்தி ஞானநூல் பூர்த்தியாய்ப் போதிக்கும் (ஆத்து)

சாத்திர வேதக் களஞ்சிய மென்ன
தாசரெல்லா மெங்கள் தம்பிரா னென்ன
கார்த்தி கேயர்க் கிவர்பதி லென்ன
காவிய நன்னூ லிலக்கண முன்ன. (45) (ஆத்து)

## மேற்படி விருத்தம்

46. வரவெனத் தூது வனுப்பிய வேத
மறைகுலக் கொழுந்தெனு மணியே
அரனரு ளுண்டோ மறமலர்ச் செண்டாம்
அந்தகன் வாதையி னீங்கித்
துரையென வாழ்வீர் சுந்தரத் தோளாய்
சூதறி யேனிதைச் சொன்னேன்

விரைவினி லிங்கே வழைத்திட லென்ன
விளம்பிடீ ரிக்கண மின்னே. (46)

## விருத்தம்

**நாயனார் :**

47. மன்னுயி ரெல்லா மெய்க்க வாத்தியா ரெனவே தக்க
இன்னிலந் தனிலு தித்த யிறைவரே கேளீர் பெற்ற
சின்ன தோர்வய தைந்தான சீரான தேவ னுக்கு
மன்னிய வித்தை யோத அழைத்தனன் மறைவல் லோரே. (47)

## உரை

**வாத்தியார் :**

ப்ரபு! தாங்கள் விரும்பி அழைத்தது மிக்க விசேஷமே. தற்காலம் மாதம் வாரம் திதி நட்சத்திரம் கரணம் யோகம் பஞ்சகம் கௌரி இவைகளும், கால கிரகங்களும், வித்துவத்திற்கு நாம பொருத்தங்களும் குறைவின்றி விசேஷித்து யிருப்பதால் இதே வேளையில் ஆரம்பித்துச் செய்வது மிக நன்றாம். தவணையின்றிக் குழந்தைகளையும் வித்தை ஆரம்ப சாமான்களையும் வருவிக்க வேண்டும். ஆரடா சட்டாம்பிள்ளை! குழந்தையைப் பள்ளிக்கு வைக்க வேண்டிய சாமான்களுடன் குழந்தையை அழைத்து வருவாய்.

## பாட்டு

(வந்தனந் தந்தேன் என்ற மெட்டு)

**சீராளன் :**

48. சண்முகேசனே அருட்கண் விலாசனே
சந்த அறிவானந்த குகனே சாந்தனே
முடிவேந்தனே சாமியே நேமியே சாமினாத
நேமியன்பர் காமி யுபபிராமி பால (சண்)

அத்தன் பாலகா ஞான சத்தி வேலவா
அம்மை குஞ்சரி எம்மை வள்ளியின்
ஆசைகொள் மணாளனே ஐயனே மெய்யனே
அப்பனே முருகையனே அழகப்ப சுப்ரமண்ய குமர (சண்)

நீதிமான் பரஞ்சோதி காயத்ரி
நிகரில்லாத விகதவத்தின் நிலைமை
காணும் வள்ளலே நித்தனே கத்தனே நித்தனே
பரிகத்தனே குருமுத்த வித்தகர்த்த முருக (சண்)

வேத சாதகா பக்தர்க் கோதும் போதகா
விடையகோழி கொடியொடு மயில்மேல் வருக
வேல்வலா விகசிதா சுகபதா விகசிதபர
சுகபதசிவ விரத சரத சரவணபவ. (48) (சண்)

உரை

தன் மனம் போல இரு கையினாலும் இடுவதற்கு அளவுபடாத குபேர செல்வத்தை அடைந்தும் யுத்த முகத்திற்குச் சிறந்த தனுர் வித்தையில் வீரசிங்க மென்று பேர் பெற்ற பிதாவே! பிள்ளையாகிய என்னைச் சர்ச்சன சங்கமர்கள் சூழ்ந்த சிறந்த சபையின்கண் எனது செவிலித் தாயுடன் அழைத்த கருத்தைத் தெரிவிக்க வேண்டுகிறேன் பிதா.

**நாயனார் :**

ஹே பாலகா! பூர்வத்தில் நாங்கள் செய்த அரிய தவத்தினால் இந்த ஜென்மத்தில் அடைந்த காதலை அகற்ற கிடைத்த தங்கமும் ரெத்தினமும் கண்மணியுமான செல்வமே! மேலான வேதியர் குலத்துக்குச் சம்மதிக்கும் வித்தைகள் போதிக்க வேண்டி இந்த மூன்று வயதில் உன்னை இங்ஙனம் அழைத்தேன். உன் எண்ணம் யாது? தெரிவிப்பாய் கண்ணே.

**சிராளன் :**

பிதாவே! மூன்று வயதுள்ள என்னைச் சிந்தித்து சமூகம் அழைத்து எனது சம்மதம் கேட்பது மிக்க ஆச்சரியமே. அதாவது தாயாரோடு அறுசுவை போம்; தந்தையோடு கல்வி போம் என்றார் முன்னோர். அதுபோல் எனது தாயுள்ள வரையில் உணவாதிகளுக்குக் குறைவில்லை. தந்தையாகிய தாங்களுள்ளவரையில் கல்வி செல்வத்திற்குக் குறைவில்லை. இந்த இரு தவ பலனையும் பெற்ற அடியேன் செய்ய வேண்டிய கடன் ஏவாமக்கள் மூவாமருந்து என்பது போல் மாதா பிதாக்கள் மனதுக்கு யேற்ப நடப்பதே எனது புண்ணியம். ஆகையால் இக்கணமே இரண்டாவது பிதாவாகிய உபாத்தியார் கைபாத்தியத்தில் விட்டுவிடுங்கள் பிதா.

## விருத்தம்

**பள்ளிக்கூடம் :**

49. ஓமெனும் பொருளை யோதி மாமுகமனை
யுண்டுசெய் தருகினைச் சாற்றி
ஆமென வில்வம் கொன்றையுந் தும்பை
அர்ச்சனை செய்ததின் பின்னை
ஊமெனச் சுவடி பாலனுக் களித்து
உசிதமச் சுபதின மதிலே
நேமமா யிளைஞர்க் குயிரெழுத் துரைத்தார்
நிலைபெறக் கலையுளங் கரைத்தார். (49)

## பாட்டு

**வாத்தியார் :**

50. அரி ஓம் நமவென் றோதுவாய் சீராள தேவா (50) (அரி)

## உரை

குழந்தாய்! இப்படி என் வலது பக்கத்தில் வீற்றிடுவாய். இந்த யேட்டுச்சுவடியைக் கையில் பிடிப்பாய். நான் சொல்வதைப் பயப்படாமல் சொல்வாய். அரி ஓம் நன்றாக. குரு வாழ்க. குருவே துணை என்று செப்புவாய்.

## பாட்டு

**சீராளன் :**

51. அரி கி ஓம் நமவென் றோதினேன் - சத்குருநாதா
அரி கி ஓம் நமவென் றோதினேன். (51)

## உரை

சுவாமி! தாங்கள் சொல்லிக் கொடுத்தபடி அரிஓம் நன்றாக; குரு வாழ்க; குருவே துணை என்று செப்பினேன். மேல் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

## பாட்டு

**வாத்தியார் :**

52. அரி ஓம் நமவென் றோதி அறியச் சொல்லுவே னீதி
பிரியமாய்க் கேளும் பாலகா சீராள தேவா (52)

### உரை

குழந்தாய்! நான் சொல்வதைச் சொல்வாய். இந்த எழுத்தை பாரு. அரி, ந, மோ, த், து, சி, ந், த, ம். இந்த ஒன்பது எழுத்தையும் செவ்வையாய்க் கவனம் பண்ணுவாய்.

### பாட்டு

**சீராளன் :**

53. துரிதமா யானறியும் சூட்சமப் பொருளதனைத்
 தெரிய உரைத்திடும் வேதா சத்குரு நாதா. (53)

### உரை

சுவாமி! அரி, ந,மோ,த்,து, சி,ந்,த,ம் என்னும் ஒன்பது எழுத்தையும் கவனம் பண்ணிக்கொண்டேன் மேல் தெரிவிக்க வேண்டுகிறேன்.

### பாட்டு

**வாத்தியார் :**

54. அகர முதலாக ஔஎழுத்து கடையாகப்
 பகரு மீராறு பேதமாய்ச் சீராள தேவா (54)

### உரை

பாலகா! நான் சொல்வதை நன்றாய் கவனித்து சொல். அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ இந்தப் பனிரெண்டு எழுத்தும் உயிரெழுத்தென்று சொல்லப்படும். இதில் அ, இ, உ, எ, ஒ இந்த ஐந்தெழுத்துங் குறிலெழுத்தாகும், இன்னும் ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ இந்த ஏழும் நெடிலெழுத்தாகும். இவைகளை நெடில் குறில் தெரிந்து உச்சரிக்க வேண்டும்.

### பாட்டு

**சீராளன் :**

55. நிகழுமா தாரப்பொரு ளான உயிரெழுத்தைப்
 புகல்வேன் தகவல் கூறுவேன் சத்குருநாதா (55)

சுவாமி! தாங்கள் விளக்கிக் காட்டிய முதற்காரண வெழுத்தாகிய அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ இந்தப் பனிரெண்டு உயிரெழுத்தும், இதில் அ, இ, உ, எ, ஒ இந்தக் குறிலெழுத்து ஐந்தும், மேல் ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ இந்த நெடிலெழுத்து ஏழும் வகை வகை பேசப் படிக்கவும் எழுதவும் கற்றுக் கொண்டேன். மேல் சொல்லிக் கொடுக்க வேண்டும் சுவாமி.

## பாட்டு

**வாத்தியார் :**

56. மெய்ப்பொரு ளான பதினெட்டு முரைத்தேன் - இதில்
வைப்பதுன் மனதிற் பாடமே சீராள தேவா (56)

## உரை

மைந்தா! இதை உற்றுக்கேள். க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் இந்தப் பதினெட்டும் மெய். இதில் க் ச் ட் த் ப் ற் இந்த ஆறும் வல்லெழுத்தாகும். மற்றும் ங் ஞ் ண் ந் ம் ன் இந்த ஆறும் மெல்லெழுத்தாகும். மற்றும் ய் ர் ல் வ் ழ் ள் இந்த ஆறும் இடையெழுத்தாகும். இதனை முறை முறையே எழுதவும் சப்திக்கவும் தெரிந்து கொள்வாய்.

## பாட்டு

**சீராளன் :**

57. மெய்ப்பொரு ளின்னதெனச் செப்பினீ ருள்ளபடி
கைப்பொரு ளெடுத்துக் காட்டுவீர் சத்குருநாதா. (57)

## உரை

குருநாதா! க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன் இந்தப் பதினெட்டும் மெய். இதில் க் ச் ட் த் ப் ற் இந்த ஆறும் வல்லெழுத்தாகும். ங் ஞ் ண் ந் ம் ன் இந்த மெல்லெழுத்து ஆறும், மற்றும் ய் ர் ல் வ் ழ் ள் இந்த இடையெழுத்து ஆறும் தேவரீர் சொல்லிக் கொடுத்தபடி தெரிந்து கொண்டேன். மேல் தெரிவிக்க வேண்டும்.

### பாட்டு

**வாத்தியார் :**

58. இதனுட் பிறந்தவெழுத் திருநூற்று பதினாறு
    அதனோ டாயித வெழுத்தொன்றே சீராளதேவா. (58)

### உரை

குழந்தாய்! மேல்சொல்லிய உயிரெழுத்துப் பனிரெண்டும் மெய்யெழுத்தாகிய பதினெட்டினுள் புணர்ந்து சப்திக்கும் எழுத்துக்கள் 216 ஆகும். இதல்லாமல் தனியான ஆயுதவெழுத்து ஒன்றாகும். ஆகையால் உயிர்மெய் புணர்ந்து எழுந்த அட்சரங்களைச் செப்புகின்றேன். செவ்வையாகத் தெரிந்து கொள்வாயாக.

### பாட்டு

**சீராளன் :**

59. மிதமிலா திந்தவெழுத் திதமா யறிந்துகொண்டேன்
    பதமிசையும் பொருளைக் காட்டுவீர் சத்குருநாதா. (59)

### உரை

ஞான தேசிகா! விசேஷமாக உயிர்மெய்யெழுத்தின் புணர்ந்து எழுந்த 216 எழுத்தையும் தனியான ஆயிதவெழுத்து ஒன்றையும் மாசற உணர்ந்து கொண்டேன். மேல் 1 2 3 4 5 எழுத்துக்கள் ஒன்றுபட வரும் வாக்கியங்களைத் தெரிந்து கொள்ள பிரார்த்திக்கிறேன் தேசிகா.

### (வேழமுகம் பாட்டு)

இந்த இடம் சட்டாம் பிள்ளை சம்பாஷணை

**சீராளன் :**

60. ஆதி யந்த மிலானே நமோநம
    மாது சுந்தரி பாலா நமோநம (ஆதி)

ஆனையின் மத ரூபா நமோநம
        அதிமோக தானை வல்லப நாதா நமோநம
ஞான வல்லபை போதா நமோநம
        தாதை வள்ளலின் நீதா நமோநம
        தகைசூரன் காலகுஞ்சர நாசா நமோநம (ஆதி)

காத லும்பரின் நேசா நமோநம
காண எங்களின் ஈசா நமோநம - கலைபேத
பேதந் தீர்த்திட்ட நாதா நமோநம
போதந் தந்திட்ட தாதா நமோநம
பேசுசுந்தர பாதா நமோநம அருள்வாயே. (60) (ஆதி)

(கையிலை - ஷ்டோரி)

## வியாக்யானம் (காதல்)

பரமசிவன் :

61. தன்போலி கேவலன்நான் தன்மயன்நான் பூச்சியன்நான்
சருவனும்நான் சங்கத்தனும்நான் அசங்கனும்நான் சாட்சியன்நான்
என்போலு மிருக்கவென்றே எல்லாமு மீந்தவன்நான்
எனையறியார் கண்ணாடி யியல்பினன்நான் என்செயல்தான்
அன்பாலு மறிவார்க்கே அறிவாவேன் எண்மூர்த்தி
ஆதரவாய் அதுவதுவாய் ஐந்தொழிலும் ஆடிடுவேன்
மின்போலாம் நவக்கோள்கள் வினையாவும் வெம்மாயை
வேண்டுவன்யான் வேண்டேன்நான் மெய்யடிக்கே விரும்புவனே.
(61)

### உரை

இதனால் எம்மடியார்களாகிய அன்பர் யாவருக்கும் எனது உண்மை யியல்பின் செயலை அறிவிக்கின்றேன். எனக்கு என்றும் எங்கும் ஒப்பு உயர்வு இல்லாதவன், கேவலன், தன்மையன், பூச்சியன், சருவன், சங்கன், அசங்கன், சாட்சியன் என்றும் அனந்த பெயருண்டு. எனக்குப் பல கற்பாந்த யுக காலங்களுக்கு அப்பாலுக்கப்பாலும் காணப்படாத பெரியோரென்றுஞ் சொல்லுவார்கள். என் அறிவு நினைவு ஊக்கத்தால் எழுந்த சக்திகள் அனந்தங்கோடி உண்டு. உலகம் என்பதற்குப் பஞ்ச பூதங்களையும் அட்ட மூர்த்திகளையும் நவக்கிரகாதிகளையும் சகல வியல்பு வினைச் செயல்களுக்குக் காரணமாய் வைத்திருக்கிறேன். இதில் அடங்கியும் அடங்காதவர்களுக்கு இந்திரபதியும் எம்பதியும் அமைத்திருக்கிறேன். ஆனால் எல்லோரும் என்னைப் போன்றே யிருக்க வேண்டுமென்று உலகம் படைத்தேன். சகல சீவர்களும் சுகமாய் ஜீவிக்க வகைவகையே பொருள்களையும் கொடுத்தேன். நான் வேண்டுமென்று தேடிய மக்களுக்கு என்

மனசாட்சியாய் சுக ஷேமங்களுக்குப் பகுந்து கொடுத்திருக்கும் என் ஸ்தலத்தில் வஞ்சமும் பேதமும் இல்லை என்பது திண்ணம். இவ்வளவும் பெற்று எனக்குள்ளாயிருந்து சர்வதாதாவாயிருக்கின்ற என்னை யாரும் அறிந்து சிந்தித்தவர்கள் அல்லர். உலகுக்கு நான் ஒருவனாயிருப்பதால் உருவுமல்லன்; அருவுமல்லன்; அருவுருவுமல்லன். கண்ணாடியின் இயல்பு எப்படியோ அப்படி யுள்ளவன். என்னை அன்புகொண்டு சிந்தித்தார்க்கு அசரீரியாயிருந்த குறைமாற்றுவேன். அன்புள்ளார்க்கு அந்தர்முகமாய் அகத்தில் விளங்கி ஆனந்திக்கச் செய்வேன். சகலமும் என் மக்கள்தான்; என்னுடைமைதான்; என்னடிமைதான்; என் செயல்தான்; என் வியாபகந்தான்; என்னோக்கத்திற்கு உள்ளானதுதான். இவ்வளவும் வேண்டுமென்று தேடினாலும் நான் ஒன்றிலும் விருப்பமில்லாதவன். என்னிடம் சுத்தமான அன்பு வைத்து அடிமைப்பட்டவர்களுக்குத் தொண்டருக்குத் தொண்டனாக அடிமைப்பட்ட காரணபுருடன் நானென்பதில் சந்தேகமே யில்லை.

நந்தி பக்தரனுக்கிர காரண புருடேச்சுரனாய் விளங்கி வீற்றிருக்கும் முகமில் பக்தகோடிகள் அனைவரும் நம் சமூக தர்பாரில் அமர்ந்திருக்கின்றார்கள்.

## உரை

**நந்தி :**

ப்ரபு! ஸ்ரீ கயிலாயித்தில் வெள்ளிமலையில் உச்சியில் கோடி சூரிய பிரகாசமாய் ஒளிவீசும் நவரத்தின மயமான ஆயிரங்கால் மண்டபத்தில் பக்தானுக்கிரகக் காரண புருடோச்சுரனாய் வீற்றிருக்கும் முகமில் கோடி பிரமாக்கள், கோடி விஷ்ணுக்கள், பதினோருகோடி யுருத்திரர்கள், கோடி யிந்திராதிகள், திக்குப்பாலகர், அட்டவசுக்கள், முப்பத்து முக்கோடிதேவர்கள், நாற்பத்து எண்ணாயிரம் முனிவர்கள், அனந்தங்கோடி ரிஷிகள், சனிகாதிப்ர்கள், நவசித்தர்கள், கருட காந்தருவ சித்த வித்தியாதரர், யட்ச கின்னர கிம்புருடர், பதினெட்டு கோடி கணங்கள் ஒவ்வொரு பக்கத்திலும் வீற்றிருந்தும், உமா தேவி வாம பாகத்திலும், கங்கை சந்திரன் சூரியன் மகுடத்திலும், வினாயகர் முருகர் இரு துடையிலும், சண்டிகேச்சுரர் வடுகர் அட்ட வயிரவர் ஐயனார் வீரபத்திரர் அட்டபூதங்கள் குண்டோதரர் முதல் நேர்சூழ்ந்து அரஹர சிவ சிவ சம்போ சங்கரமகாதேவ வென்று துதித்து நமஸ்களிக்கவும் தும்புரு இசைபாடவும், அரம்பையர்கள் நடனஞ் செய்யவும், பதஞ்சலி

ப்ருங்கி வியாக்ரபாதர் கண்டுமகிழவும், அவரவர் இஷ்ட காமியங்களைப் பெற எண்ணிய வன்பர்கள் வரங்கேட்டு கையேந்தி நிற்கவும், ஸ்ரீ உமாதேவி சமேதரராய் ரத்தின சிங்காசனத்திலிருக்கும் நித்திய அனுபவ கொலுவின்முன் நாரதர் ஒருவர் மாத்திரம் காணவில்லை; மற்றெல்லோருஞ் சுபமே ப்ரபோ.

**பரமன் :**

நந்தி இதுவரையில் நாரதர் வராதிருக்கும் காரணம் என்னோ? துவார பாலகரைக் கவனிப்பாய்.

**நந்தி :**

ஜய விஜயபவா. இதோ கவனிக்கிறேன்.

(வெளிச்சென்று பார்க்கின்றார். நாரதர் வருகிறார்)

## பாட்டு

(செந்தூர் கெம்பீரா என்ற மெட்டு)

**நாரதர் :**

62. முக்காலங் காண்பேன் நான் முருகன்
கணபதியும் இறைவி மதிக்குங் கடைமுதல்
நக்கன் அயன்அரியின் பக்குவத்திலுந் திரிகுண (முக்)

அண்ட வகண்ட பிரமாண்ட பராண்டத்தும்
மண்டல முழுதுங் கண்டு - எண்டிசை
யின்கண் ணளவிலும் (முக்)

நித்திய உத்தம வித்தக முத்தர்கள்
பெத்தர்கள் சித்தமும் சுத்த - விதத்துவ

எம்மதமுஞ் சம்மதமாய் நிறை பிர்மமே
யானென் றறிந்ததிலை யாகுமெய் தர்மமே
மும்மையும் அந்தரமுகங் காணல் கர்மமே
முதுபர சுகவகமேக மாதியில் (முக்)

அதிசயம் பெறல் தகுமே அதீதத்தின்
நின்று மறுவ னாந்தம் பெற்றிட
நிற்புதற் பரகற்பனை யற்புத (62) (முக்)

## உரை

யானோ சத்தியலோக வாசனாகியும், சரஸ்வதி விலாசனாகியும், வேதத்துக்கிறைவனாகியுமுள்ள கமலயோனியின் புத்திரனென்றும், அந்தண அகத்து ஊழியம் புரியும் ஓர் பெண்பாலின் மகவென்றும் சொல்லப்படுபவன்.

யானோ அக்கிராகாரத்தில் அதிதிகளுக்கு அன்னமிட்டு உண்ணும் ஓர் அந்தண அறிஞனின் அகத்தில் என் தாய் ஊழியத்தால் கிடைக்கும் பிச்சையை அருந்தி வளர்ந்து வரும் இளமைப்பருவத்தில் அப்பிராமணர் அகத்தில் நித்தியம் வந்து தங்கும் சாது கூட்டங்கள் காலட்சேப வேதாந்த சாஸ்திரி விசாரணைகளில் செவியுற்று, எனது மணங்கனிந்து, நித்தியமும் அவர்கள் அமுதருந்தி, புறித்தே எறிந்த பரிகலத்திலுள்ள எச்சிலாகிய உச்சிட்டத்தை அமுதம் போல் அருந்தி ஜீவித்துவரும் பிரயோசனத்தால் எனக்குச் சுத்த தத்துவ பிர்மஞானம் பிறந்து, பெற்ற தாயையும் மறந்து, தனித்து, மத்தியில் அனேக சங்கடங்களை அனுபவித்து, இன்ப துன்பம் இரண்டும் பாராமல், சத்திய லோகம் வைகுண்டம் கையிலையுஞ் சென்று, ப்ரம்ப விஷ்ணு உருத்திரர் அனுக்கிரகம் பெற்றும், மகாதவத்திலிருந்து மெய்ஞ்ஞான சொரூபத்தை யடைந்து, சித்த ஞானத்திலே விசேஷ ஆசை கொண்டு, அதனால் ஆதிசேட உபாக்யானம் பெற்று, இந்த வீணையைக் கைக்கொண்டு சங்கீத சுரலட்சணம் பாடுங்காலம் இசை யானந்தத்தால் திரிகால லட்சணங்களும் அறிந்தும், திரிலோக சஞ்சாரம் பண்ணியும், ஓர் மகரிஷி கொடுத்த சாபத்தால் எவ்விடத்தும் நேரிட்ட சங்கதியை உண்மையாக விளக்காவிடில் என் வயிறு வெடித்துப் போகும். ஆகையால் பூலோகத்தில் நான் ஓர் அதிசயங் கண்டேன். அதைப் பரமபுருஷ சத்துவசீல மகாசபையின்கண் விளக்க வேண்டியிருப்பதால் மகாதேவர் தரிசனத்திற்கு இதோ செல்கிறேன்.

கதியென்று திருவடியை அடைந்தவர்களுக்கு அனுக்கிரக காருண்ய தேவனாகியும், எம்பிராட்டிக்குப் பாதி தேக மீய்ந்து தாம் பாதிதேக முடையவனாகியும், ஜனகாதியர்கள் வேண்டிய ஞானோபதேசத்தைச் செய்தும், மிக்க தவ ஜீலர்களுக்குக் கருணை கூர்ந்து முத்தை அளித்து விளங்குகின்ற தீனதயாளுவே! பேத மனதுடையவர்கள் காணுதற்கரிய பிரகாச உபய திருப்பாதங்களுக்கு அடியேன் வந்தனஞ் செய்கின்றேன்.

## விருத்தம்

**சுவாமி:**

63. ஞான நான்மறை யுணர்ந்த நாரத முனியே வாரும்
நானுள்ள மட்டும் நீர்செய் நற்றவ மோங்கி வாழும்
ஆனதால் சுபத்தோ டிந்த ஆசன மிருந்து சொல்லும்
வானமூ வுலகத் துள்ள வாறதை யறியத் தானே. (63)

## உரை

கல்யாண்! நான்கு வேதங்களின் மகா வாக்கியத்தில் சூக்குமந் தெரிந்தும், இசைஞானத்தால் முக்காலதன்மை யுணர்ந்தும், திரிலோக சஞ்சாரம் பண்ணும் யாழ் வல்லோரே வாரும். இந்த ஆசனத்தில் அமர்ந்தருளும். யான் உள்ளவரையில் நினது ஆயுளும் மெய்த்தவமும் சம்பூரணமாகும். முனிவரே! திரிலோக சஞ்சாரத்தில் யாதேனும் விசேடமுண்டோ? அறிவிப்பீர்.

## பாட்டு

(சென்றுகனி பறித்துக்கொண்டு என்ற மெட்டு)

**நாரதர் :**

64. வேதா வேதத்தின் முதற் போதா
பதம் விரும்பியவர்க்கு அருளும் நாதா
மாதலமுதல் மூன்று உலகம் சென்று
மருவி அறிந்ததிற் கண்ணிலகும்
கண்டதில் வருங் கலகம்
சொல்வ திங்கு சுலபம் இந்த
மாசபை யறியில் மெய்யிலரும் (வேதா)

சிறுத்தொண்ட னெனும் பரமேட்டி
ஜகம் தெரிய அறக்கொடியை நாட்டி
தவம் நிறைத்து சத்துவப்பணி நீட்டிச்
சொல்லி நிகரில் அரும்பசியை ஓட்டி
சாதுக்கள் குழுவுங் கூட்டி
நித்திய வினை யோட்டித்
தன்பேர் நிறுத்தினான் போர்டு மாட்டி (வேதா)

அவரில் திருவெண்காட் டம்மை - செகம்
அடையும் பதிவிரதச் செம்மை
உலகெ வர்க்கும் உடமையவட்கு மின்மை - ஆகும்
எனவே வருகுமேயத் தன்மை
பரமுணரும் உண்மை சபைக்குவரும் வெம்மை - கண்டு
எடுத்து ரைப்பவர்களால் நன்மை. (64) (வேதா)

## விருத்தம்

**சுவாமி :**

65. நல்லது சொன்னீ ரையா நானிலந் தனிலு தித்த
வல்லாளன் சோமன் பாண்டி மன்னன் மாபலி யென்றின்னோர்
இல்லாளுங் குழவி யோடு யிடம்பொரு ளேவ லீந்து
உல்லாச மாயென் பாதம் ஒத்துவாழ்ந் திருப்ப ராமோ. (65)

## உரை

நாரதரே ! நல்லது. மூவுலகத்தின்கண் ஏதாவது அதிசயமுண்டோ வெனகேட்டதற்கு இம்மகா சபையின்கண் வாய் கூசாமல் பூலோகத்திலே சோழமண்டலத்தில் திருச்செங்காட்டில் ஆமாத்தியர் குலத்திலே அவதரித்த சிறுத்தொண்டன் பக்தனென்றும், அன்னக்கொடி நாட்டினானென்றும், கொடைவள்ளலென்றும் துணிந்து உரைத்தீர். ஞாயம். முன்னாள் உலகில் ப்ரசித்திபெற்ற வல்லாள மகாராஜன், சோழமகராஜன், பாண்டியமகாராஜன், மகாபலி சக்ரவர்த்தி இன்னும் இவர்களைப் போன்ற பக்திமான்கள் வாழ்வு நிச்சயமில்லையென உண்மை கண்டு, தர்மத்திலே மனையாட்டியையும் பிள்ளையையும் பூமி பொருளையும் தானதர்த்தம் பண்ணி, எனது அன்பு பூண்டு இச்சபையின்கண் வீற்றிருப்பவர்களைப் பார்த்தீரா. இவர்களைப் போன்ற உத்தம மனத்தோனென்று அச்சிறுத்தொண்டனைச் சொல்லத் தகுமோ? நிற்க.

## மேற்படி விருத்தம்

66. பத்தினிதனில் சாவித்ரி பாஞ்சாலி யனுசூயாவும்
பத்தினி ப்ருந்தைரேணு பதிநளன் புரூரவன்றன்
பத்தினி யருத்ததிக்கும் பலித்ததிவ் விதமுளாரேல்
பத்தினி யெனலாமெங்கும் பத்தினி யென்னலாமோ? (66)

## உரை

ஹே மூவுலக வாசரே! உமது வார்த்தை கேட்கும் காலத்து மிக்க ஆச்சரியத்தைத் தருகின்றது. பத்தினியாகிய அத்திரு வெண்காட்டம்மைக்கு நிகராக என் வாம பாகத்தில் அமர்ந்தருளிய பார்வதியும் ஒப்பாகா ளென்றீர். நல்லது. பூலோகத்திலே சிறந்த பேர்பெற்ற சாவித்ரி அம்மையார், பாஞ்சாலி தேவியார், அனுசயா தேவியார், பிருந்தா தேவியார், நளச்சக்கரவர்த்தி மனையாள், புரூரவச்சக்கரவர்த்தி மனையாள், ஆரந்தியாள் இன்னும் இவர்களைப் போன்றவர்களைப் பத்தினி என்று திடமாய்ச் சொல்லலாம். இவர்கள் அம்பிகையின் பக்கத்திலிருக்கப் பார்த்தீரோ? கொஞ்சம் நிதானியும்.

## விருத்தம்

**நாரதர் :**

67. நாயினேன் பிழைசொன் னாலும் நாதனே யறிய வேண்டும்
தாயக மொழியுந் தர்ம சதிபதிக் கோர்கா லத்தில்
நேயமாய்க் குறையுண் டென்ன நீரூபிப்பே னிவர்பா லொன்றும்
தூயனே புரையு ணர்ந்து சொலவுந் தரமாமோ சுவாமி. (67)

## உரை

சர்வேசா! நாய்க்குட்டி தவறி உரைத்திருந்தாலும் அக்குறையைச் சமூகம் பொறுக்கவேண்டுகிறேன். ஏன் என்றால் நான் சொன்னது பொய் மெய்யென திருவடிக்கே தெரியவரும். சுவாமிகள் சொல்லிய பக்தர் பத்தினிகளில் அவரவர் கொண்ட தவத்தில் ஒவ்வொரு சமயத்திலும் தவறு இருப்பதால் எடுத்து நிலைநாட்டுவேன். நான் சொன்ன அவர்கள்பால் எச்சமயத்திலும் எக்காரணத்தாலும் குறை கூறுவாரைக் காணேன் தேவ தேவே.

## ஆசிரியப்பா

**சுவாமி :**

68. அருந்தவ முனியே யானுனை வேண்ட
வருந்திநீ ரெனக்கு வந்தனம் புரிந்து

நிர்ந்தாட் சண்யமாய் நீள்புவி தன்னில்
வர்த்தமா னத்தை வரிசையா யுரைத்தீர்

ஆகையி னாலே யான்தரை சென்று
ஈகையுங் குணமும் இரப்பவர் தனக்கு

சட்சுவை யோடு தானமமு தளித்து
ரட்சித்து வாழும் அறக்கொடை யாளனின்

அன்னக் கொடியும் அருட்பிர தாதபமும்
அன்னவன் பத்தினி யாள்விர தங்களும்

அறிகுவே னந்த அம்பலத் தானே
முறைமையுந் தொழிலினை முனைந்து செய்வீரே. (68)

## உரை

ஹே யாழ்வலா! உம்மால் சொல்லப்பட்ட சபதம் பேசிய அவ்வுத்தமர் உத்தமிகளின் நடைகளை நான் அறிந்து தெளிந்து கொள்ளுகிறேன். உமது வேலையைப் பாரும்.

## பொது விருத்தம்

69. நாரதமா முனிவருக் கிதனைச் சொல்லி
நண்ணி வைரவமூர்த்தர் தன்னைத் தாங்கிப்
பாரெழில்செங் காடுமட்டோ மற்ற வெங்கும்
பரனடிக்குப் பணிசெய்வார் யாவ ரேனும்
காரணராம் சிறுத்தொண் டர்க்ககப் படாமல்
கண்மறையச் செய்துமிகு கவலை யோடு
சீருலவு பரமபதி விட்டு வுள்ளுஞ்
சிறப்பிட்டா ராதிசிவம் புறங்கொண் டாரே. (69)

## விருத்தம்

**நாயனார் :**

70. புறங்கொண்ட போதி லீசன் புண்ணியன் றொண்ட னாரும்
அறங்கண்ட மான தின்ன வகையென்ப தறியா தேங்கித்
திறங்கொண் டுதின மிகுந்த தியாகிக ளகல்வ தென்ன?
மறங்குண் டியம்பெ ருக்க வந்ததென் செய்வே னானே? (70)

## பாட்டு

இராகம்: பியாக்கு

71. ஆயிதென்ன காரணமோ அன்னமே வாராய்
சொல்வேன் இன்னங்கேள் நேராய்
நாயகி யிந்நாள் வரையில் நாமிருபேரும்
நேயமாயொரு தாட்சி யில்லாமல்
நிறம தொத்தி ருந்தோம்
நல்ல அறமிது புரிந்தோம் (ஆயி)

சிவனைக் கோரி அன்பு மீறித்
துவசம் நாட்டினேன் - யாதுந்
தவணை யில்லாதது முதலாய்த்
தருமம் நீட்டினேன் தினகருமம் ஓட்டினேன் (ஆயி)

ஏதோயிது சூது மார்க்கம்
யான றிகிலேன் - பர
நாத னடியார்க ளெண்ணந்
தான றிகிலேன் அவக்ஞான மறிகிலேன் (ஆயி)

நேற்றயை மட்டும் தருமம்
நிறைவேறிப் போச்சுதே - யின்றிச்
சேற்றில் நட்ட கம்பம்போல
யாரும் நகைக்க லாச்சுதே (ஆயி)

என்ன தீதோ எவரின் சூதோ
யார் செய்த சதியோ - செய்யும்
அன்ன தானத்தில் பின்னம் வந்தது
அயனாரின் விதியோவல்ல இதுவென்ன கெதியோ!
(71) (ஆயி)

## விருத்தம்

72. பூர்வத்தில் யான்செய் திட்ட புன்மை தீங்கெதுவு முண்டோ
ஆர்விட்ட சாபம் வந்து வணுகிற்றோ வறியேன் சிற்பி
தேர்பூட்டி அடியி லிட்ட தீயது போலே தர்மம்
கோர்வையாய் வந்த தின்ற குலைந்தது மாயந் தானே. (72)

## உரை

எனதாருயிர்க் காதலி! முன் ஜன்மத்தில் வேதத்துக்கும் மனுநீதிக்கும் உலகிற்கும் சாட்சிக்கும் சம்மதமில்லாத கொடிய என்ன தீங்கை செய்திருக்கக்கூடும்? இந்தத் தர்மத்தைப் பார்த்துத் தாளாமை கொண்டு தடுத்து அதனால் இந்தத் தவறுதல் வந்திருக்கலாமோ? ஆஹா, தெளிந்த சிற்பிகளால் பிரயாசைபட்டு ஒரு சித்திரத் தேரைச் சிங்காரித்து வைக்க, அதனடியில் அன்னியனால் தீயிட்டு அடியோடு பற்றியெரிந்து அழிந்தது போல் நாம் தொன்றுதொட்டு செய்துவந்த தர்மத்தில் இந்த கோலாகலம் யேற்பட்டது மிக்க சூதாயிருக்கின்றதே.

## பாட்டு

இராகம்: தோடி

73. அன்னமே ஒருவார்த்தைச் சொல்ல
அறிவுடன் கேளடி
என்னவோ யிந்த பாவத்துக் கெல்லாம்
யானுடம் பெடுத்தேனடீ (அன்னமே)

இத்தனை நேரம் பார்த்தும் - யாதொரு
சித்தரும் வரக் காணேனே
பத்தி குலைந்து சித்தங் கலங்கிப்
பட்ட மரப்போ லானேனே (அன்னமே)

ஆனா லிந்த தேசந் தன்னில்
அடியார் வந்து இருப்பாரோ
தானாய் வந்து அன்ன முண்ண
சந்தேக மென்ன பொறுப்பாரோ (அன்னமே)

இங்கிருந்தா லவர்களைக் கண்டு
இணையடி தொழ லாகுமோ
மங்கை யேயவர்க் கங்கங் குளிர
வன்னங் கொடுக்க போகுமோ (அன்னமே)

பூதலத் துள்ள தலங்க ளெல்லாம்
புகுந்து தேடியான் பார்க்கிறேன்
ஆதுலரைக் கண்டணி பணிந்து
அழைத்து வந்து சேர்க்கிறேன் (அன்னமே)

வந்தவர்க் குபசாரத் தோடு
வடிபணிந் தன்னங் கொடுப்பாயே
எந்த வேலை யெப்படி யிருக்கினு
மென்போல் விரதமெடுப் பாயே (அன்னமே)

ஆண்டி சன்யாசி யோகிகளைத் தேடி
அழைத்து வரயான் போகிறேன்
வேண்டியவரைக் காணா விடிலோ
வீட்டில் வந்து சாகிறேன். (73) (அன்னமே)

### உரை

வாசம் பொருந்திய மலர்களையணிந்த கூந்தலை யுடையவளே! நான் சொல்வதைக் கேள். எத்தனைதான் நாம் வருந்தி வருந்தித் துக்கித்தாலும் நம்மால் இனி செய்வது ஒன்றுமில்லை. போனது போச்சுது. உலகின்கண் எத்தனை வருந்தி பாடுபட்டாலும் வருவதுதான் வரும். வரப்படாததை வருந்தியழைத்தால் வருமா? இதற்காகச் சஞ்சலிப்பதில் பிரயோசனமில்லை. ஆயினும் ஒரு ஆசை இருக்கிறது. அதையும் பார்ப்போம். மானைத் திருக்கரத்திலேந்திய மயேச்சுரன் திருவடிக்கடியார்கள் இருக்குமிடஞ் சென்று பார்த்து வருகிறேன். நாம் இதுவரையில் எடுத்துவந்த தவத்துக்கு விக்கினமில்லாமல் நான் போன பிறகு இவ்விடம் வழக்கம்போல் யாராவது பரங்கள் வந்தால் அவர்கள் மனதுக்கு ஏற்றபடி உபசரித்து திருப்திசெய்து கொண்டிருப்பாய். காப்பது விரதமென்பதைக் கவனி. போய் வருகிறேன்.

### விருத்தம்

**நங்கை :**

74. மூவுல கெங்கும் போற்றும் முதுதவத் தருவே போற்றி
மாவளம் பொழியு நோன்பில் வந்திடா தென்றுங் குற்றம்
தீவர மெய்யர் தம்மை தேடி யிங்க ழைத்துவரும்
ஆவலாய் வருவோர்க் கென்னா லட்டி யில்லாமற் காப்போம். (74)

### உரை

கற்பக தருவுக்கு ஒப்ப நீண்ட தவத்தைச் செய்து மூவுலகுந் துதிக்கப் பெற்ற நாயகா! கவலை வேண்டாம். மிகுந்த வளப்பம் பொருந்திய நமது தவத்தில் ஒரு குறையும் வாராது. சாதுக்களைத்

தேடிப்பார்த்து அழைத்து வாருங்கள். இவ்விடத் தங்கள் உத்தரவின் படி நடந்து கொள்கிறேன். சென்று வாருங்கள்.

## விருத்தம்

**நாயனார் :**

75. மனோன்மணி சோட சத்தால் வாழ்த்தியுன் னருளை யுன்னி
தினாதினஞ் சேவிப் போர்கள் திருவடி களைவந் தித்து
மனோமய லொழிவ தென்றோ மாதவர் தம்மைத் தேடி
அனாதியாய் போறே னையோ வடியேனை ரட்சிப் பாயே. (75)

## பாட்டு

இராகம்: காப்பி

76. சகலாண்ட புவன சத்காரண லோலா
புகழறிஞரை தேடியே போறேன் சுசீலா (சக)

அகவிரு ளாலே யெண்ணாத தெண்ணு றேனே
ஆதியே உன்சிந்தை யதிலறிந் திலையோ
பகவன் இங்கெழு உந்தன் பதியென்ன தொலையோ (சக)

## உரை

ஹே அகண்டா! அகண்ட சகல புவனங்களையும் சுத்த சத்துவ காரணராய் நிறைந்து பரிபாலித்து வந்த ஹே சர்வப்பரகாசமே! சிறப்போங்கிய நினது திருவடிகளைத் தேடிப் போகிறேன். ஏ ஆண்டவா! அவ்வாறு செல்லும் அடியேனுக்கு இந்தச் சிந்தாகூலம் வருவது ஏன்? இருட்டிலே தவறி வீழ்ந்த சிறுபணத்தைத் தேடியெடுக்கக் காணாமல் தவிக்கின்ற அந்தகனைப் போல தவிக்கின்றேனே. ஓ முதற்கடவுளே! இது நின் திருவுள்ளத்துக் கெழவில்லையோ. ஆஹா சர்வாத்தும காரணனாகிய நீயிருக்கும் வீட்டிற்கும் அஞ்ஞானியாகிய நான் இருக்கும் இடத்திற்கும் உடன் ஓடிவந்து அஞ்சேலென ஆதரிக்க வெகுதூரமோ!

## பாட்டு

மாதவ சம்மந்தர்க்கும் சமணர்க்கும் வழக்கோ
மங்கையர்க் கரசியார் உபசார முழுக்கோ
ஏதேனும் என்றிருந் தொண்டினி லிழுக்கோ (சக)

உரை

ஆ சிவமே! நான் முன்செய்த கர்மாவசம் மேலிருக்கும்போது பரம்பொருளால் வந்த குறையென்ன? ஒன்றுமில்லை. ஆயினும் யாம் செய்த தர்மத்திற்குத் தடைவந்தது எதனாலென யோசிப்போம். திருவாலவாய் கூன்பாண்டியனும் குடிகளும் ஒருமையாகச் சமணர்களுக்கு அடிமையாகிய குற்றம் நீங்க மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் வேண்டுகோளின்படி சம்பந்த சுவாமிகளால் ஏற்பட்ட சைவசமய விவகாரத்தைப் பற்றி உலகிலுள்ள சன்மார்க்க சங்க சாதுக்கள் சென்றிருந்தார்கள். அதேபோல் இப்பவும் எந்த மேலோரும் இரு சமய தர்க்க சங்கங்கூடி யிருக்கப்படுமோ! இருந்தால் விசாரணையில் தெரியுமே. இல்லை அல்லது மங்கையர்க்கரசியார் அன்பின் உபசார போஷகத்தி லிருக்கலாமோ. அதுவுஞ் சென்று போச்சுதே. இன்னம் யோசிப்போம்.

பாட்டு

இசைவிலாத மனத்தார்க் கென்ன சம்பாடமோ
எழில் நாவுக்கரசு சுவாமிகள் விசேடமோ
நிசமறியே னந்தோ என்விதி வசமோ (சக)

உரை

ஆ சிவமே! பந்த தொந்த யிணக்கமற்ற மனமுடையவர்க்கு என்ன சுத்த பாராயண சிந்தையில் தனித்திருக்கிறார்களோ. அல்ல பின் எதுவாயிருக்கலாம். கருணை தேவாரக் கடலைக் களையாற அருந்தி ஆனந்தித்து சப்தித்துக் கொண்டு இருந்த திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பணிக் காலமோ! இதுவுஞ் சென்று ஐந்து நாளாகி விட்டதே. உண்மையின்ன தென்று விளங்கவில்லையே. இதுவும் என் விதிவசமோ.

பாட்டு

எங்கே குருபூசையோ யெவ்விடஞ் சென்றாரோ
நான்பாவி என்றறிந்து வாராமல் நின்றாரோ
பொங்குமருள் மிகுந்து புதர்காட்டிற் புகுந்தாரோ (சக)

உரை

எந்த சிவ ஞானியார்கள் அடங்கிய தினம் இந்நா ளென்று போய்விட்டீர்களோ! அல்லது எனது திருப்பணியில் நீண்டநாளாய் அனுபவம் பார்த்து இவன் பெரும்பாவியென நினைந்து வாராமல்

நின்று விட்டார்களோ! ஒருவன் குணானுபவம் பார்க்க நீண்ட நாள் வேணுமோ! கண்ட நாழியில் தெரிந்து கொள்ளலாமே. அறிஞர்கள் குணலட்சணம் அறிய வேண்டுமானால் நெடுநாள் பழகவேண்டும். அதுவுமல்ல. ஓ சிவமே! இந்த சந்தேகம் தெளிவது எப்படி?

### பாட்டு

சிவனே எனக்கொரு திடஞ்சொல் லொணாதா?
திருவடி யார்க ளிங்கடைய லாகாதா
பவனிதனி லென்முன் பார்க்கச்செய் நாதா. (76) (சக)

### உரை

ஹே பரம புருஷா! இப்படி முன்னும் பின்னும் அறியாமல் துக்க சாகரத்தில் மூழ்கித் திகைத்துப் பிதற்றி அழும் அடியேனுக்கு ஒரு தைரியஞ் சொல்லப்படாதா. பல நாளும் பாடுபட்டு யாதொரு பலனும் அனுபவியாமல் பரிதவிக்கும் பேதையேற்கு முன் உன் அடியார்கள் தீடீலென வந்து முன்னே தோன்றப்படாதா? ஐயோ பாவம். உலகின்கண் தேடிப் போறேன். உன் கருணைக் கண்ணோக்கி மெய்ஞ்ஞானிகள் என் முன் வரச்செய்வாய் அண்ணலே!

### பாட்டு

இராகம்: பைரவி

77. ஆராகி லுமிந்த நேரான வீதியில்
அடியார் வரகண்ட துண்டோ
போரான பேர்பெற்ற ப்ரம்யகுலத்தி லோங்கும்
சீரான தாய்தந்தைச் செல்வரே வருள்தாங்கும் (ஆராகி)

சரமாரியாக நீண்டு சரிந்த சடைகளும்
தழுவிக் கோலிதிரண்ட தாங்கொணா முடிகளும்
சிரமறையவே கோரமல் காவி குடைகளும்
சித்ர பாதகுறடு நத்தசை நடைகளும் (ஆராகி)

திகுந்த திரிதகு தகுர்த தரிதகு
ஜெணுத ஜெணுதகிங் கணத குணபரம்
சுகுந்த சுகுர்த மென்றாடு மாடகர்
சிவய நமவென பாடும் பாடகர் (ஆராகி)

காதிற் குண்டலமின்ன கழுத்திற் கண்டிகைதுன்ன
கனமது ருத்திராக்கந் தாங்க முடியாதென்ன
சாதிசந்தனப் பொட்டு தளதளதள வென்ன
சரியும் விபூதியின் மேற்றிலத சிந்தூரமின்ன (ஆராகி)

சன்ன குரலெழு சங்க ராகர
சர்வ சாட்சி யிரட்சி யென்றிட
மன்னவர் குலராஜ வீதியில்
அரகரா வெனுங் கருணை யொன்றிட (ஆராகி)

தாயத்து கெடுவுகள் ஜபமாலை நீண்டவர்
சர்வமுந் தேகத்தில் விபூதி பூண்டவர்
சாய உடையணிந்து சஞ்சல மீண்டவர்
சந்தகம் லங்கோடு கௌபீன மாண்டவர் (ஆராகி)

தாமிச குண மீண்ட னாதியில்
தணிப வர்களிவ் வணிக வீதியில்
சேம கலமொடு சங்க மூதுவர்
தினமென் மடந்த னிலுறையும் மாதவர் (ஆராகி)

மான்புலித் தோலினைத் தாங்கிய தோளினர்
மகிமை மிகுந்த விபூதிகொள் சோளினர்
கூன்மதி போல்நகம் வளர்கைப் பொற்றாளினர்
குவலயந் தனிலருட் கொடுக்குந் தயாளினர் (ஆராகி)

கலவு மாத்திரை கோலுடன் திருவோடு
கொண்டு எழுந்தி ருந்தவர்
சுலப மாகவி சூத்திரபதி
சூழ்வரே சிலதுற வறவதி. (77) (ஆராகி)

## உரை

ஜெகதீசா! வீதிவீதியாய்த் திரிந்து கண்முன் கண்டவர்களைப் பார்த்துப் பைத்தியங் கொண்டவனைப் போல் உளறிக் கேட்டாலும், மற்றும் பல தலங்கள் புகுந்து பார்த்தாலும் ஜீவன் முத்தர்களைக் கண்டு களிக்கக் கிடைத்திலாதது என்ன அந்யாயம். தேசிகா. உன் திருவடியைக் காண நினைந்து உருகி இத்தனை நாளும் செய்த தவம் வீணாய்ப் போகலாமா. இன்று என் அகத்தில் விருந்து

உண்ணாதிருக்கலாகுமா. ஹே தேவ தேவா! உன் அடியார்களை இன்னுங் காணப்படாதா? என் நேரில் வரச் செய்வாய். எனக் கேற்பட்டிருக்கும் இடுக்கண்களை நீக்கியருள்வாய் யீசனே.

## விருத்தம்

78. கணப்பொழுது முமதடியை மறவா துள்ளங்
கனிந்துருகப் பார்த்திருப்ப தழகோ உன்னை
வணக்கமுறு மடியவர்க்குத் துயரு மேச்சும்
வறுமைபகை பிணியிழுக்கு மடைவ துண்டோ
பணச்செருக்கு ளானிதயம் போலே நீயும்
பரிந்தடை வதனுபோக முண்டோ வெய்ய
குணக்கறுத்து எனையாளுந் தேவா நெஞ்சங்
கொதித்திட்டே னுனைபல வுந்துதித் திட்டேனே. (78)

## பாட்டு

(பித்தா பிறைசூடி என்ற மெட்டு)

இராகம்: நாதநாமக்கிரியை

79. தேவியிட மாகாஜெக நாதா தியாகர்ராஜா
மூவரருந் தேவரக மோன நடராஜா
ஆவியுட லாதியுள தாகும் பரமேசா
தேவே யுறிபோத்தி யன்பர் தியானபிரகாசா (தேவி)

அண்டாண்டமு மைந்தொழிலால் ஆளுமானு பாவா
கண்டார்க்கறி வானந்தமெய்க் கமலாசன னாவா
பண்டோர்திருத் தொண்டர்பதம் பாராக்குறை தேவா
உண்டார்மடம் கண்டேகளிப் போங்கமுனங் காவா (தேவி)

ஆமோபரன் சத்துஞ் சித்தும் ஆனந்தமுங் காண
ஆமோகொடுந் தீயேனறி வாலாயுனைப் பேண
தாமோதர சீநாரணா சாமிசெயல் வேண
நாமரூபன் கோக்காவிடில் நலிவேனகம் நாண (தேவி)

சாதுபணி இன்றோய்ந்து சகதூடண சதியே
பாததுகட் கேமாறிய பாவியானேன் பதியே
நீதிபதி மெய்யடிகள் நேர்வரச்செய் நிதியே
காதல் ஜனகாதியர்க்குப் போதபதங் கதியே. (79) (தேவி)

## விருத்தம்

80. தாரணியுஞ் சடையானே வாம தேவா
சார்த்தூல உடையானே பரசு பாணி
ஏரணியும் விடையானே தருமன் யேமா
எழிற்காம தகனனே வால முண்ட
சீரணியும் நீலகண்டா நடன பாதா
சிவசிவா சிம்ம சங்கார னேநின்
பேரணியு மெனதாவிப் பொருந்தி லேன்மேல்
பிழையனைத்து மெனதலவாம் பழியு னக்கே. (80)

## உரை

ஓம். கங்கையைத் தரித்த சடாதரா. எம்பிராட்டியை அணைந்த வாமதேவா. புலித்தோலுடையானே. பரசு ஆயுதம் பிடித்த கையனே. அழகிய ரிஷப வாகனனே. நஞ்சையுண்டு கருத்த நீலகண்டனே. நடனமாடிய பாதனே. நரசிம்மத்தை சிகிச்சை செய்து காத்த சர்மூர்த்தியே. சிவசிவா. உனது பெருந்தொண்டின் பேரானந்தா. எனது பிராணன் இனி இச்சரீரத்தில் குடியிராமல் பிரயாணமாய் விடும் போலிருக்கிறது. உன்க்கு அபையம் அபையம்.

## பாட்டு

(ஞான பண்டித மோதிலால் என்ற மெட்டு)

**நங்கை :**

81. இந்த சோதனை யாகுமா கணப தீசா
இதில் எங்கள் பாகம் போதுமா
கும்பிட்டார் கையை ஈண்டும்
வெட்டலோர் பாகமா சந்தேகமா (இந்த)

விந்தை யிக்காலம் வந்த திக்கோலம்
மேலதிதிகள் நின்றதும் புறம் பேதடி
வெயியில் என் நாதன்
சென்றதும் உந்தன் சம்மதம். (81) (இந்த)

## தொகையறா

82. அருளிறை பொருளடிக் கிச்சித்த யாங்களே அறுதின மதிதிகட்கு
மருள்டசியும் ஆற்றிட றைக்கொடியு மேற்றிமேல் மாவருட்டே வமணியும்

தெருளுற வமைத்திட்ட சீரும்அத் தெய்வீகத் திரள்மணியி
னோசையின்றிப்
பரிவுளோர்விசா ரிக்கநாங்க ளின்றடைவமேல் பரிதாபம் பார்த்தல்
தவமோ. (82)

## பாட்டு

இரப்பாரை இகழந் தோமோ
பொருட்பாலில் மகிழ்ந் தோமோ
இறைவ னுன்தாள் மறந்தோமோ
எதனாலிந்த குறைபுண்ணியங் கறந்தோமோ - தயவில்லாமல்
(இந்த)

## தொகையறா

83. தினமுஞ் சத்சங்கமர்க் கடிதொழுது இட்டுண்ணத்
தேர்ந்திட்ட தெங்கள் விரதம்
பினமாகிச் சன்மார்க்க மவமாகி இந்நாள்
பிதற்றியுண் பக்தர் மனமும்
கனவா குலக்கடல் மூழ்கித் தாமரை
ஜலக்க தியாகி காற்றாடிபோல்
வனமாதி நாடெலா மலைதலு முனன்புக்கு
மார்க்கமினி தான தவமோ. (83)

## பாட்டு

வெய்யல் படாத உடல் ஐயோ கெடாத உடல்
வீணே தவித்து விடுவார் தேடி
யழைத்து விரும்பி மடத்தைக்
கூடுவார் என்ப தில்லையே. (இந்த)

## தொகையறா

84. பட்டார்க்குப் பழிநினைத் தோமோ விளக்கெரியும்
பக்றகோயி லழிவேற் றோமோ
கெட்டார்க்குக் கேடு செய்தோமோ புணர்ச்சியில்
கெடகலகஞ் செய்திட் டோமோ
எட்டாது பாதியிற் கருவழித் தோமோ
வியாங்கள் செய்ததவம் பாதியிற்
றட்டான தென்னவோ நின்னன்பர் சேவைக்குத்
தாட்சி யானதுவுந் தவமோ. (84)

## பாட்டு

எதனா லிந்த குறையோ
யிதுவும் வேத முறையோ
இருடிகள் சம்மதம் மீதோ
அறிவானந்த கருணைக்கும் யார்செய்த சூதோ - ஏழைகள் மீது
(81) (இந்த)

## உரை

ஹே உமைபங்கா! உனது திருவடிக் கருணையைப் பெறவேண்டிக் குற்றமற்று இவ்வளவு நாளும் நின் திருவடிகளுக்கு இகதர்மத்தைச் செய்து வந்தோம். ஓ மாசில்லாமணியே! அப்படி செய்துவந்த தர்மத்தில் உன்னை யறியாமல் உன் அடியார்களுக்கு நாங்கள் என்ன குற்றத்தைச் செய்தோமென்று என் ஆசைக்கிசைந்த நாயகனை இவ்வித கஷ்டத்தில் விட்டீர். எங்களால் நீரடைந்த நினைவென்ன? அடிமைகளாகிய நாங்கள் படுங்கஷ்டத்தைக் கண்ட உமக்குக் காட்சியும் ஆனந்தமு மென்னவோ! ப்ரபு. உன்னைச் சதமென்று அடைந்தவர்கள் இந்தக் கஷ்டத்தை அடையலாமோ? இரவு பகல் என் புருஷன் முகம் பார்த்து இன்ப துன்பம் இரண்டிற்கும் பாத்தியப்பட்டு நடந்து வந்தவள்தானே நான். இப்போது கிரகத்தை விட்டு போன என் நாயகன் சாதுக்களைக் கண்டாரோ காணவில்லையோ தெரியவில்லையே. அரிய திருமேனியை உடையர் வெயிலால் மெலிய இந்தக் கொடிய பாவிக்கு என்ன சந்தோஷம் வேண்டியிருக்கிறது. சந்தனா இனி நாம் என்ன செய்யலாம்?

## பாட்டு

(மேரேமைலபுலா என்ற மெட்டு)

**சந்தனம் :**

85. தாயே சொல்வதைகேள் சுகந்தான் பெறுவாய்
ஆயம்பெற வாண்டாட் காகுலம் வேண்டாம்
தேயமீதினில் கோடிகோடி சிறந்த பக்தியில்தேர்ந்தவர்
வாயுமுண்டோ சொல்எவர்க்கும் வாழுநீடுபாடு பட்டவர் (தாயே)

நாம்தாம் அதிசயமோ நூல்பார்த் திலையோ
சான்றோ ரடைந்ததுவுங் கேட்டுந் தேர்ந்திலையோ (தாயே)

சாவித்திரியார் சந்தரமதியார் தக்கநளனார் தேவியார்
காவலரொடு பூவில்பட்டதின் கதைகளால் வழிகண்டும்நீ (தாயே)

தாளா துயரடைந்தாய் தர்ம வர்த்தினிமனம்
மீளா குறையடைந்தாய் அடைவாய் நீகனம் (தாயே)

தான்பரிந்து செய்நோன்பினிற் குறைசார்ந்த தாலதுஜயம்பெற
தான்முயன்று செய்யாமலிதனைத் தாங்கிக் காப்பவராருளார் (தாயே)

நற்பேர் பெற்றவர்பார் நளா யினியார்
தப்பாதுன் தவமே அறிவா னந்தமே (தாயே)

பாமரச் சகம்பதியதின் காவலிற்பற்றி மெய்ப்பொருட் கடிமையே
க்ஷேம முற்றிடில் பாவமற்றிடும் தெளிதிதிருவுள சாட்சியே (தாயே)

கண்ணேர் வந்திடுமே கஷ்டந் தீர்ந்திடுமே
மன்னர் வந்திடுமே மகிழ் வோங்கிடுமே. (85) (தாயே)

## உரை

அம்மணி! வீணாய் விசனப்பட்டு அழுவதில் என்ன பிரயோசனம்? நெல்லுக்கிறைத்த நீர் பலன்தராமல் போகுமா? போகாது. அதுபோல் நல்லார்க்குச் செய்த நன்றியும் வீணாகாது தாயே. நான் சொல்வதைக் கவனிக்க வேண்டும். பல நாள் செய்து வந்த தர்மம் அதர்மமாகுமா? நாமே ஒன்றைத் தேடி அழிக்கலாகுமோ? முன்செய்த வினைப்பயன் தலைச்சுமையா யிருக்கத் தெய்வத்தை வேண்டுவதினால் என்ன பயன்? நாம் இதுவரையில் செய்துவந்த தர்மத்தில் உண்மை என்றும் பொய் என்றும் உன்பாலும் உன் புருஷன்பாலும் என்பாலும் நன்றாய் விளங்குமே. நெய் வார்த்துத் தின்றது நெஞ்சுக்குத்தான் தெரியும் என்பது போல அவரவர் எண்ணம் அவரவருக்குத்தான் தெரியும். ஆகையால் உன்னுடைய செயல்முறையிலும் தவத்தின் அன்பிலும் கற்பின் நிலைமையிலும் லவலேசமும் வழுவாதிருந்து வருவையானால் பக்திக்கிரங்கிக் கயிலைநாதன் உடன் வருவார். நிச்சயம் இது. அழாதே.

**நங்கை :**

சேதனா! உன் பூரிப்புகொண்ட வார்த்தையை என்னிடங் காட்டாதே. என்னைக் கஷ்டப்படுத்தாதே. இத்தனை நேரங் காணாதிருக்கும் என் நாயகனுக்கு என்ன விபத்தோ தெரியவில்லையடி.

## பாட்டு

**நங்கை :**

86. நாதன் வரக்காணேனே நங்கை என்செய்வேனே
வாதனை செய்யாதேயம்மா வந்தது என்னவோ மோசம் (நாதன்)

நிஷ்டைகள் புரிந்து எங்குநின்றாரோ வெதிர்கண்ட
சிஷ்டர்களு டனேகூடிச் சென்றாரோ என்னைக்கொண்ட (நாதன்)

அடியார்கள் தம்மைத்தேடி அலைந்தாரோ வினிகாண
முடியாதெனவே மனங் குலைந்தாரோ என்னைப்பேண (நாதன்)

பசியால் மெலிந்துஎங்கு படுத்தாரோ தொல்லைஎன்னும்
விஷயாதி போகங்களை விடுத்தகன்றாரோ வின்னம். (86) (நாதன்)

## விருத்தம்

**சுவாமி :**

87. சீர்கொண்ட பரஞ்சோதி தினமும் வந்த
திருவடி யாரன்று வராதிருக்குங் காலை
நேர்கண்டு வருந்திப் புறந்தேடிச் சென்றார்
நீடுமனை பத்தினியாள் நெஞ்சம் நொந்தாள்
ஏர்கொண்ட பரமி யுந்தன் உளங்களிக்க
எழிற்கமல வடிசிவக்க நடைதள் ளாட
ஆர்கொண்ட கணபசி கொண்டவர் போலன்புக்கு
ஆபதோத் தாரணனிங் கடைந்திட் டேனே. (87)

## பாட்டு

(காந்திரிஷி என்ற மெட்டு)

88. சிவயநம என்றால் சென்ம சாபல்ய மாமே
சிவயநம இந்த புவன ரட்சகநம
சிவயநம என்னுந் தவமளித்திடும் ப்ரம்மம் (சிவய)

மூலபிர கிருதியாலே வந்த உலகம்
மூர்த்திகள் எண்மர்களால் ஆண்டதுவு மூவுலகம்
சீலஐம் பூதத்தினால் செனித்ததுவு மிவ்வுலகம்
திகழ்மாயை கற்பனையே பொய்யா மனைத்துலகம் (சிவய)

சிந்திப்பதேன் இதைச் சிந்திப்பதேன் மனமே ஓம்
மெய்யை மெய்யென்றவர்க்கு எடுத்ததுவு மிவ்வுருவம்
விரிந்த அண்டாண்டங்களைப் பார்ப்பதுவு மிவ்வுருவம்
பொய்யைமெய் என்றவரைப் புகழ்வதுவு மிவ்வுருவம் (சிவய)

புகழும்நால் வேதபொருள் விரிவதுவு மிவ்வுருவம்
புண்ணியமே அதுவும்தான்செய் புண்ணியமே ஓம்
உம்பர் இருடிகளைக் காத்ததுவு மிவ்வுருவம்
ஒழிவிலா தன்பருளம் உறங்குவதும் இவ்வுருவம் (சிவய)

நம்பினார்க்குப் பணிகள் நடத்துவதும் இவ்வுருவம்
நாஸ்திகர் வாயில்மண்ணைப் போட்டதுவு மிவ்வுருவம்
நச்சை உண்டேன் அன்புக் சிசைந்து
நச்சை உண்டேன் ஓம் (சிவய)

அனுதினமுந் தத்துவ ஆன்ம விசாரஞ்செய்து
அறுபகை புலன்களை அன்றன் றெனவேகொய்து
கனமினஞ் சினமதைக் கனவிலெழா மற்செய்து
காக்கும் அறிவானந்தன் வாக்கின் பலனைஉய்து
கண்டு வந்தேன் விச்சாடனன்
பண்டு வந்தேன் ஓம். (88) (சிவய)

## உரை

யானோ நித்தியானந்த பரிபூரண ப்ரம்ம சொரூப லட்சண மடைந்த வெள்ளிமலை விஞ்ஞான மேடையில் அமர்ந்திருக்குங்கால் சகலரிஷி முனிதேவக்கூட்டங்களுடன் தர்பார் சம்போகத்தில் மகிழ்வடைந்த அம்பிகாபதியாய் இருக்கும் போது அறிஞர்களில் மிக்கோனாகிய யாழ்வல்லோன் சிறப்பித்துச் சொல்லிய பக்தியானந்த வாக்கியத்தைக் கேட்டு, எனது கருணைக்கடல் பொங்கி, மோதி அலைத்தெழுந்த நினைவினால் உத்தேசிக்குங் காலத்து உள்நிறைந்த அறிவானந்த சமாதான சாட்சி ஞானத்தை ஏற்று, வாம பாகத்துள்ள கௌரியையும் நழுகவிட்டு, மறந்து எழுந்து, சமாதி நிஷ்டை சகிதத்திலிருக்கும் சித்தர்முத்தர்கள் தன்னிலை தவறி முன்னிலை சார்ந்து வேண்டிக் கொண்டதற்கும் சமாதான விஞ்ஞானம் பண்ணி நிறுத்தி, என்றுமில்லாத வைரவமூர்த்தத்தைத் தாங்கி, இத்திருச் செங்காட்டாங்குடியில் வாழும் பக்த முக்த சிரோன்மணியின் நித்திய அரிய தரிசனத்திலிருந்த ஸன்மார்க்க ஸாதுக்களையெல்லாம் மறையச்

செய்து, அன்பர் அம்மையாள் அனந்தங் குலையச் செய்து, பிரித்துவிட்டு என் கண்மணியாகிய நாயனாரைக் கைவல்ய பதியிலமர்த்த வேண்டி விருப்புற்று இத்தலத்தில் இறங்கி பிர்ம கபாலம் ஏந்தி வந்தவன் நானாகும். அன்பர்க ளமர்ந்தருளிய வீதிகளில் இதோ பிச்சைக்குக் கையேந்தினேன். பிச்சாந்தேகி.

## பாட்டு

இராகம்: சாவேரி

89. பிச்சாந்தேகி தர்ம வர்த்தனியே
அச்சன் அசலன் அர்த்தன்
அகண்ட னறிவா னந்தன்
மிச்சன் விசாலன் விர்த்தன்
விமலனார்தாள் சுமந்த (பிச்சா)

சாட்சி உலக வரசாட்சி மனுவிசைந்த
சூட்சிக் கிரவுபகல் சாட்சி யடிசுமந்த (பிச்சா)

அகமாய கத்துதைய வகமாகி
யவ்வகத் தகமுகமுந் தகைவு மாகி
அப்பாலுமா யணுவு ளணுவு மாயதனுள்
அருவுருவு முருவ ருவமாய்
சகனாகி சகமாகி சகத்திலைம் மூர்த்தியுந்
தானாகி யெண் மூர்த்தியாய்
சகலனாய் சராசரத் துடலு யிருமுணர் வுணவு
சத்து சிவபோக னான (பிச்சா)

யுகமாகி யுகத்தளவு காலநிர்ணய மாகிப்
போது வேதப்பொ ருளுமாய்
உரியமறை யங்கமாய் அந்த மாயனுபவத்
துள்ள பலசாத் திமுமாய்
நிகழெவரி னினைவுக்கு ணினைவுதைய மாகியும்
நிருவி யிருவினையு ளாகி
நேசமாய்ப் பாசமாய் உணர்வற்ற வுயிர்க்குதன்
நெஞ்சினு ளெழுந் தாட்டுவான் (பிச்சா)

அணுவை மலையாக்குவான் மலையைப் பந்தாடுவான்
அல்லைபகல் பகலிரவுமாய் ஆக்குவான்
அறிவிலாற் கறிவேற்று வான் பிணம்
ஆனதற்கு உயிர் கொடுத்துத்
துணிவுடன் உலகாள செய்வன் வித்தின்றியே
தோற்ற பல்லு யிராக்குவான்
சொல்லரிய யேற்பானு மிடுவானுந் தானாகித்
தூய சித்தாடும் வல்லன் (பிச்சா)

ஆணைப் பெண்ணாக்குவான் பெண்ணை யாணாக்குவான்
அலிமலடி இருசி பேடி
ஆகவுங் காண்ப னிவர் சம்போக
லட்சுமியாய் விளங்கிடவுஞ் செய்வான்
வீணருக்கரசு பதியேற்றி வைப்பான் நாளும்
மேம்பாடு வாழ்வி டையரில்
வெய்யகலி தூண்டியும் வெறும்பாழு மாக்கியே
மேலுலகம் அடக்கிக் காணும். (89) (பிச்சா)

## வேறு பாட்டு

(நாவேறு பாமணந்த என்ற மெட்டு)

90. தாய்மார்களே பசியால் பாதாதி கேசம்வரை
தாளாத நோய்மலிந்து தனியாகத்
தாதாடி வாய்வறண்டு காதே யடைத்து - மிக
தள்ளாடிக் கண்ணிருண்டு தடமேவி (தாய்)

வாயாற கூவியிரு கையேந்தினே னெனது
மாறாத தீபசியால் மடியாமல்
மாசாறவே யமுது கூசாமலே - யிடுக
மாவேகமாய் நொடியில் வருவீரே (தாய்)

கூழேனும் நீர்மனதோ டாசாரமே மிகுந்து
கோணாமலே விரைந்து கொடுப்பீரேல்
கோமானும் நீரும் நெடுநா ளாயுளோடு - உலகில்
கோவேறு வானவரின் குலமாகத் (தாய்)

தாழாமல் எண்ணிரண்டு பூவேறு பேறடைந்து
தாதாவு மாவதொரு ஜனகாதி
தானோடு வாழ்வி ரறிவானந்த மேலடைவீர்
தப்பாது அன்னமிட ததி யீதே. (90) (தாய்)

பாட்டு

(சுந்தரம் நிறைந்த திருச்செந்தில் என்ற மெட்டு)

**சுவாமி :**

91. விந்தை அழகு நிறைந்த இந்ததெரு
ஆடுகின்ற மைந்தர்களே நின்று
சொல்லைக் கேட்பீர்காள் தவசுந்தரமே நின்று
சொல்லைக் கேட்பீர்கள் (விந்தை)

**பிள்ளைகள் :**

பந்தயம் வைத்தாடுகின்ற தொந்த விளையாட்டில்
வந்து சந்தி செய்யாதே - எட்டி
போம் போம் போம் உமக்குத் தொந்தரை வருமே
எட்டி போம் போம் போம் (பந்தயம்)

**சுவாமி :**

அருமை மக்களே யிந்தசிரம விளையாட்டில்
அறிவானந்தம் பெறநின்று கேட்பீர்காண்
இதனால் ஞானந் தருமா
நின்று கேட்பீர்காண் (விந்தை)

**பிள்ளைகள் :**

பெருமை மிகுந்த சுவாமிதருணம் உங்களிடத்தில்
பேச நேரமே தெட்டி போம் போம் போம்
பரிகாசஞ் செய்யாதே எட்டி
போம் போம் போம் (பந்தயம்)

**சுவாமி :**

இந்நகரில் ஒருவன் அன்னக் கொடியுங் கட்டி
இருந்தவம் பெற்ற தெங்கு
சொல்வீர்காண் அவன் நடைகுணம்
எப்படியோ சொல்வீர் காண் (விந்தை)

**பிள்ளைகள் :**

என்ன காரணமிவர் முன்னவரோ பசியால்
இதுவென்ன பரிதாபம் ஆஹாஹா
நீரும் முது கிழமாம்
பெரியோர் ஆஹாஹா (பந்தயம்)

**சுவாமி :**

சிந்தை மயக்கும் பசிவந் தடைந்தேன்
அவ்வன்பா சொல்வீர் காண்
மிக்ககணம் அடைந்து
வாழ்வீர்கள் சொல்வீர்காண் (விந்தை)

**பிள்ளைகள் :**

அந்தோ தெரியுது நேர்தந்திடும்
அன்னக் கொடி அறிஞரே சமையந்தான்
போம் போம் போம் தவக்குரவரே
சமயந்தான் போம் போம் போம். (91) (பந்தயம்)

## விருத்தம்

92. இப்படி வீதி யுள்ளோர் இளைஞரும் வினாவக் கேட்டும்
செப்பவும் பினாக பாணி தெரிந்தி லாதவர்போல் தொண்டர்
ஒப்பிலா மனையிற் சென்று ஓங்கியே பெருமூச் சிட்டு
அப்பணி சிவ சிவா யிவ்வகத் துக்குள் ஆரென் றாரே. (92)

### உரை

ஆகா! மிக்க செம்மை பக்திமான் யூகித்துக் கட்டிய ஆச்சிரமம் வெகுசிறப்பு நன்றாயிருக்கிறது. இதுதான் அன்னக்கொடியோ? ஆம் ஆம். அதில் தர்ம ரிஷபமோ? சரி சரி சரி. மேலே அடையாள காவி செண்டாவோ? இருக்க வேண்டியதுதான். கீழே தெய்வீக துஜமணியோ? வேண்டும் வேண்டும் வேண்டும். நல்லது இதைப் பார்த்துக் கொண்டிருந்தால் காலதாமதம் ஆகிறது. ஜே சங்கர் ஜே. சங்கர் ஜே. சங்கர் பிச்சாந்தேகி.

## பாட்டு

(வாலசித்தயிற்த என்ற மெட்டு)

**சந்தனம் :**

93. ஆண்டவரே வாரும்
திருவடியார் துயரந் தீரும் (ஆண்ட)

காண்ட மணிந்த கையா
கதிரோன் சலிக்கு மெய்யா
ஈண்டு செய்த தவமே பொய்யா
இதுவே சமைய மையா (ஆண்ட)

தீயோர் கண்கிட்டா பாதஞ்
சேவை செய்வதே போதும்
தாயார் வெண் காட்டு மாதுந்
தரிசித்தாள் எப்போதும் (ஆண்ட)

பரமாத்துமா பரமே
பண்ணிய வருக்கே பெருமை
தரமோ எங்க ளருமை
சரணஞ் செய்தே னருமை (ஆண்ட)

மாது மன மெலிந்தோம்
வரும் வழி பார்த்திருந்தோம்
சாது இங்கெழத் தெரிந்தோம்
சஞ்சல மெலாந் துறந்தோம். (93) (ஆண்ட)

## உரை

சுவாமி! தங்கள் திருமேனியைப் பார்க்குங்கால் சூரிய பிரகாசமோ பரமான்ம சொரூபமோ என மதியை மயக்குகின்றது. அரிய மாத்திரை கோல் பிடித்த கையனே! அஞ்ஞானிகளுக்குக் கிட்டாத பாதனே! தேவர்கள் துதிக்கத்தக்க சத்துவ குணசீலரோ! தங்களுடைய திருவடிக்கடுமை செய்ய தரமுடையோர் நாங்கள் அல்லோமாகும். நாங்கள் முன்செய்த அரிய தவத்தின் பெருமைதானோ பரம சாதுவின் தரிசனங்கிடைத்தது. சுவாமி என் தாயாகிய திருவெண்காட்டம்மையும் அடிமையும் அடைந்திருந்த சஞ்சலத்தை நீக்க வந்த ஆண்டவரே!

திருவடிக்கு வந்தனஞ் செய்கின்றேன். அடிமைகள் உள்ளத்தில் கொண்டிருக்கும் அருந்துயரைத் தீர்த்து மனையுள் எழுந்தருள வேண்டும் ஆண்டவரே.

**சுவாமி :**

கல்யாண் அற்புத அருமை. நல்ல உள்ளம் தாயே. மிக மகிழ்ச்சியோடு என்முன் ஓடி வந்து பாதத்தில் வீழ்ந்து மனமிளகி வஞ்சகமில்லாமல் மனைக்குள் மெல்ல வருக வென்று அழைக்கின்றனை. சந்தோஷம் அம்மா. இம்மடாதிபதி எங்கே?

**சந்தனம் :**

மேலான தத்துவ ஞானமுணர்ந்த ஜீவன் முத்த தேசிகா! இந்தச் சத்திரத்தில் தினமும் ஆயிரம் திருக்கூட்டங்கள் நண்போடு அமுது அருந்தி வந்தார்கள். அம்மெய்யடியார்களை இன்று எங்கள் விருப்பத்திற்கு ஏற்க வரக்காணாத படியால் சித்த சந்தேகடைந்த இச்சத்திராலயபதி சாதுக்களைத் தேடிச் சென்றிருக்கின்றார் சுவாமி. மடத்துள் எழுந்து திருவமுது எடுத்துக் கொள்ள வேண்டும். ஆண்டவரே.

### பாட்டு

(சுகுந்த சுந்தரனே என்ற மெட்டு)

இராகம்: காப்பி

**சுவாமி :**

94. நல்ல வார்த்தைச் சொல்ல முன்னே வந்தாய் வந்தாய்
நலமாய்ப் பயின்றெடுத்த எந்தாய் எந்தாய் - என்று
சொல்ல உன்னைத் தப்பாது சுகமா யிருப்பாயேது
வல்லா னில்லாதபோது வரமாட்டேன் போயிப்போது (நல்ல)

### உரை

அம்மணி! முன்னாகவே உண்மை மொழியை விளக்கித் தெரிவித்த உன்னை யோசிக்குங்கால் அருமை வாய்ந்த என்னைப் பெற்றெடுத்த தாய் என்று சொல்லப்படாதோ? சொல்லலாம். இதுவும் நான் செய்த தவமேயாகும். தாயே அம்மனைக்கு அதிகாரியில்லாத காலம். இப்போது உள்ளே வரமாட்டேன் போ.

## பாட்டு

**சந்தனம் :**

என்ன சந்தேகத்தை நீர் கொண்டீர் கொண்டீர்
எத்தால் வரமாட்டே னென்று விண்டீர் விண்டீர்
சொன்ன நன்மொழியாலே சூதறியே னிக்காலே
கன்னிசந் தேகத்தாலே காரணஞ் சொல்வீர் மேலே (நல்ல)

## உரை

ஹே தீனதயாளவே! தங்களுக்கு யேற்பட்ட சந்தேகமென்ன? எதனால் வர மாட்டேனென்று சொல்லிற்று? தேவரீர். சொன்ன அரிய வாக்கியத்தின் சூட்சமந் தெரிந்து கொள்ள அனுபவம் பத்தாத இளமைப் பருவத்தை யுடையவள் நான். ஆகையால் அவ்வாக்கியத்தில் சந்தேகமடைகின்றது. உண்மையைத் தெரிவிக்க வேண்டும் சுவாமி.

## பாட்டு

**சுவாமி :**

புருஷ ரில்லா மற்றனி யாகயேக
பெண்கள் தனிவாழ்க்கை செய்வார் போகமாகப்
பரபுருஷர் சுத்தம் பாராமலவர் முத்தம்
வரவென்ன திடம்பெற்றோம் வரமாட்டேன் வருங்குற்றம் (நல்ல)

## உரை

தாயே கவனித்துக் கேள். கிரகாச்சிரமத்தின் தன்மை யாதெனில் எக்காலமும் இல்லத்தில் ஆண் மக்கள் வசித்துக் கொண்டிருப்பதென்பது நிச்சயமல்ல. ஒவ்வொரு சமயம் பெண்கள் மட்டும் தனித்துக் குடிவாழ்க்கை செய்வதும் உண்டு. அவர்களுக்குத் தனிச்சிறை மாதர்களென்றும் பேர் வழங்கப்படும். அல்லாமலும் ஆண்பாலுள்ளயிடம் சுத்தமென்றும், தனித்த பெண்பாலுள்ளயிடம் அசுத்தமென்றும் மனுநீதியில் வரையப்பட்டிருக்கிறது. ஆகையால் அசுத்த சந்தேக முள்ளவர்கள் தலைவாசலில் அன்னிய புருஷர்கள் அடிவைக்கத் தகுமோ? தகாது. நானோ துறவி. நீங்களோ யிப்போது தனிச்சிறை பெண்கள். அவ்விடம் யான் வர என்ன திடமிருக்கிறது. குற்றம். வரம் வரமாட்டேன் போ.

## பாட்டு

**சந்தனம் :**

தாயேயினி வந்ததடி மோசம் மோசம்
சுவாமி யிங்கெழுந்தருள பேசும் பேசும்
மாயமென்னமோ கேளு வரமாட்டேனென்றார் கேளு
தூயமிகும் பொற்றாளில் சூடிக்கண்ணீரை யாளு. (94) (நல்ல)

## உரை

தாயே! நான் என்ன சொல்வேன். சுவாமிகளை வருந்தி அழைத்தாலும் அது சொல்வது பெரிய பிரமாதமாக இருக்கிறது. நீ இப்படி யிருப்பது தக்கதல்ல. வேகமாய்ச் சென்று சுவாமிகள் பாதத்தைப் பிடித்துக்கொண்டு உனது கண்ணீராலே அபிஷேகித்து எந்த விதத்திலாவது அமுதுண்ணும் மார்க்கத்தைத் தேடுவாய் தர்மவர்த்தனி.

## விருத்தம் (தேவாரம்)

**நங்கை :**

95. காணாமற் கண்ட தெய்வங் கடிகியே வந்து மென்ன
கோணலோ நினைந்து வன்னங் கொள்ளாமற் போறே னென்றீர்
பூணாரம் பூண்ட நெஞ்சம் பொருந்திய கவலை நீங்கத்
தாணுவே தொண்டு செய்வேன் சரணமே யாட்கொள் வீரே. (95)

## பாட்டு

96. சுவாமி எங்களை ரட்சிக்க
சமய மிதுவே அய்யா
பூமலரடி பணிந்தேன்
பொறுத்தருள் செய்யந் துய்யா (சுவாமி)

அருங்கலி நீக்க வந்த
அகண்ட பரி பூரணா
சரணஞ் சரண மெங்கள்
சர்வாத்தும காரணா (சுவாமி)

கொடியாள் முன்னடி தொழா
குறையோ குரு நாதனே

அடியாள் மேல்கோபம் ஏதோ
ஆதரித் தருள் வேதனே (சுவாமி)

நாங்கள் செய்யுந் தர்மத்தில்
நஷ்ட மென்னவோ காணேன்
பாங்காய் நீரமு துண்ண
பட்சம் வை பெருமானே. (96) (சுவாமி)

## உரை

மகான்மா! இன்றைய பொழுதிற்கு எங்கள் கண்ணுக்கு அருமருந்தாய் யிருந்து, தெய்வம் போல் தெரிசனங்கொடுத்து, அன்னம் அருந்தாமல் போறேன் என்பது தர்மமாகுமா மகான். இச்சமயம் அம்மொழி வரத் தகாது. ஹே காரண சொரூபா! கொடிய பாவியாகிய யான் முன்னாகவே வந்து கண்டு கொள்ளாத குற்றமா? மகாத்துமாக்கள் கோபச்சுமையை அஞ்ஞானிகள் சுமக்க சக்தியல்லோமாகும். இது சுவாமிகள் திருவடி பூஜை செய்ய எதிர்பார்க்கிறேன். அதையேற்றுக் கொள்ள வேண்டும்.

## பாட்டு

(சோம சேகரன் அருளும் வருளவனேன் பரா என்ற மெட்டு)

**சுவாமி :**

97. ராம வான்ம ராமலிங்க சீதா மாதா - வேத
நாமகள் நீயாமென தகாதா சூதா
சூமிதாரும் பேசொணாது யாதா யாதா - பிச்சை
ஆண்டி யாமுன் வேண்ட மாயை வாதா வாதா (ராம)

## உரை

ஜே.... ராம் ஸ்ரீ... ராம்....ஆன்ம....ராம் சீவராம் ஜே.... சங்கர் சுஜீபவா தாயே! உன்னை லட்சுமியாள் சௌரியாள் சரஸ்வதியாள் இவர்களுக்குச் சமானமாகச் சொல்ல என்ன சந்தேகம் சொல்லலாம். ஆனாலும் எவருஞ் சம்மதிக்கத் தகாத இந்த வழிபாடு நீ செய்வது யாதுக்கு? நானோ பிச்சையேற்று உண்ணும் சன்னியாசி. என்முன் இப்படி பிரார்த்தித்துக் கொள்வது எதார்த்தமா? அல்லது மாயா வழக்கா? நின்று பதில் சொல்லம்மணி.

பாட்டு

நங்கை :

மாயைகோல நாளுமேக வைத்தே நித்தம் - நாதனி
வாழ்விலாள யேனழயேம் பிடித்த தத்தம்
தூயபாத பேதையோநல் சுத்தம் சுத்தம் - இற்றைத்
தோமற தாடதெழில்தம் சித்தம் சித்தம் (ராம)

பாட்டு

சுவாமி :

சித்தபேத பக்தர்சேதி கேட்டேன்கேட்டேன் - அவர்
சேதிகண்டி லாதுன்சொல்லில் நாட்டேன் நாட்டேன்
சுத்தங்கோடி யீந்தை கையை நீட்டேன் நீட்டேன் - உன்
துணைவனின்றி மாளிகையெழ மாட்டேன் மாட்டேன் (ராம)

உரை

ஹே தர்மவர்த்தனி! நீ சொல்லுவது சரி. செய்யுந் தர்மத்தின் குறையால் சிந்தாகூலமடைந்த தர்மாதிபதி புறத்தே சென்ற சங்கதியனைத்தும் முன்பு ஒரு அம்மையாரால் தெரிவிக்க உணர்ந்து கொண்டேன். ஆகையால் சோகமடைந்து சென்றிருக்கும் அந்தப் புண்ணிய புருஷனை என் கண்ணில் கண்டு அன்னவர் துக்கம் ஆறாத வரையில் நீ என்ன கோடி கோடியாகத் திரவியத்தைக் கொடுத்தாலும் இம்மடாதிபதியாகிய உன் காதலனன்றி மாளிகைக்குள் வரமாட்டேன். இது உண்மை. செல்லுவாய்.

பாட்டு

நங்கை :

மாடிவந்தால் சேடமென்ன வாரும் வாரும் - நாதன்
வாதுகாணில் போகுமிந்த பேரும் பேரும்
காடிநீரும் பேசவேண்டாங் காரும் காரும் காரும் - தவங்
காணவறி வானந்தாகண் பாரும் பாரும். (97) (ராம)

உரை

மகான்மா! மாளிகைக்குள் வந்தால் என்ன குற்றம் உண்டாகுமோ தெரியவில்லையே. வரலாம் வரட்டும். ஹே பரமான்மா! துணிந்து

இப்படி கடுந்த வேகமாய்ப் பேச வேண்டாம். எங்களைக் காக்கும் பொருட்டு நாங்கள் எடுத்த தவம் நிறைவேறவும் தயைசெய்து தங்கள் கிருபைக் கண்ணால் கவனித்துப் பார்க்க வேண்டும் சுவாமி.

## விருத்தம்

**சுவாமி :**

98. நேர்த்தி நீசெய்வ தெல்லாம் நெறியிலா சடங்கு உன்போல்
பார்த்திலேன் பெண்கட் கிந்த பதட்டமு முதவா தம்மா
பூர்த்தி யுன்சந் தனத்தாள் பொறுமை தானென்ன சொல்வேன்
நிறுத்தி டாய்உன் குணத்தை நீணிலம் பழிக்குந் தாயே. (98)

## உரை

தாயே! நீ செய்யும் உபசாரங்களும் வார்த்தைகளும் அபிநய குறிப்புகளும் வெகு ஆச்சரியமாய் இருக்கிறது உன்னைபோல வாக்குவிலாசனியும் ஜாலமனோசனியும் அஞ்சாத திட வார்த்தனியும் எவ்வுலகத்துங் கண்டதில்லை.

தர்மவர்த்தனி முன்னார் ஒரு பெண்பால் வந்ததே அது உனக்கு என்ன வேண்டும்? (சுவாமி: தாதிப்பெண்) ஆஹா தாதியா. அப்பெண்ணின் பெயரென்ன? (சுவாமி: சந்தனத்தாள்) சந்தோஷம் அப்படியா! அடே அப்பப்பா பெண்பாலுக்கு இந்தப் படபடப்பு உதவாது. உன் தாதியாகிய சந்தனத்தாள் அறிவும் வாக்கும் குணமும் ஒடுக்கமும் மகா அற்புதம். அற்புத சிந்தாமணி என்றே சொல்ல வேண்டும். உன் குணத்தை உன் மட்டுக்குத்தான் சொல்லலாம். நாடு சிரிக்கும். இதோ நெஞ்சுதட்டி சொல்லுகிறேன். பெண்பாலாகிய நீ கூப்பிட்டு வருவேனா? வரமாட்டேன் போ.

## விருத்தம்

**நங்கை :**

99. தயையிலா துரத்திற் றட்டி சாதனை புரிந்தீர் சுவாமி
வயவனா மெனது மன்னர் மாதவர்க் கெங்குந் தேடிப்
பயனிலா தணுகிக் கேட்டு பகைத்துடன் விடைத்தால் பாவி
நயமொழி யென்ன சொல்வேன்? நாதனே வகைசொல் வீரே?. (99)

## உரை

ஹே ஞான தேசிகா! அடிமைகளிடத்தில் அணுவுந் தயை பாராமல் நெஞ்சத்தில் தட்டி வாத சாதனை புரிகின்றதே தர்மமா சுவாமி? விவேகத்தில் நழுவாத வலிமையைப் பெற்ற எனது உயிர்க்காதலன் தற்காலம் சஞ்சலக்கடலில் ஆழ்ந்தவராய் மாதவ மகத்துக்களைத் தேடிப் பயன் பெறாதவராய் இங்கு வந்து கேட்டால் என்ன உண்மை மொழியைச் சொல்வேன். நடந்ததைச் சொல்லினும் தாங்கள் இல்லாமல் போனால் மிக்க கோபத்தை யடைந்து இவன்பால் மிக்க துவேஷம் பண்ணுமே. அதனைத் தடுக்கத் தந்திரம் வேண்டுமே சுவாமி.

## விருத்தம்

**சுவாமி :**

100. உனக்குள்ள கவலை சொல்லி உருகினாய் ஒன்று கேளு
எனக்குள்ள விரதங் கெட்டால் ஈசனும் பொறுக்கா னம்மா
மனக்குறை வேண்டாங் குற்றம் மன்னிப்பாய் நீதி யான்உன்
தனக்கென்ன சொல்வேன் பாரில் தான்சாக மருந்துண் பாரோ. (100)

## உரை

ஹே பதிவிரதா! தர்மத்தில் விசேஷித்த பாக்யவதியே! என்பேரில் கோபங்கொள்ளாமல் பொறுத்துக்கேட்பாய். உன் பதியின் கோபங் கூடாதென்று உனக்கு விரதம்; என் பதி கோபங் கொள்ளாமல் இருக்கவேணுமென்று எனக்கு விரதம். ஆகையால் உலகில் எவரும் சாக மருந்துண்பாரோ; நோய்க்கு மருந்துண்பாரோ; நான் வரமாட்டேன் போ.

## பாட்டு

இராகம் : தோடி தாளம்: ஏகம்

**சுவாமி :**

101. அன்னையே கேள் இன்னமும் நீ
பன்னி பன்னியே பேச வேண்டாம்
என்னடி பணியி லென்ன நன்மையே - சும்மா
உன்னகந் துணிவாய் சொன்னே னுண்மையே (அன்)

கன்னல் மொழி பெண்ண ணங்கே
என்ன சொன்ன போது மிங்கு
முன்னடி யார்க்கு உபவாசமே - தனி
கன்னியர் மனை புகுதல் தோஷமே (அன்)

உரை

ஹே தர்மசிகாமனி! சற்று எட்டிநின்று நான் சொல்வதைக் கேள். விடாத வம்பு கொண்டு பன்னிபன்னிப் பேசாதே. நான் வந்த நேரத்திலிருந்து இந்தப் பிச்சைக்காரன் காலைப் பிடிக்கிறதும் தலையை மோதுகிறதும் அடியிலுள்ள தூசிகளை முந்தானையினால் ஒத்தி உன் மேலெல்லாந் தடவிக் கொள்கிறதும் அடிக்கடி செய்கிறாயே, இதனால் உனக்கு என்ன பிரயோசனம்? அடைவாய் சொல்லம்மணி.

பாட்டு

நங்கை :

ஆதி யோனடி வருடித் தீதுறும்
ஐம்பொறி நீத்த நாதனே
யிம்மங்கை யுற்ற ஆசையே தினம்
ஆதுலர் பொற்றாள் பணிசெய் பூசையே (அன்)

ஈதினால் பூதலத் துள்ளோர்
ஏது குற்றஞ் சொல்லு வாரென் றோதினீர்?
எவருஞ் சொல்லகாணுமே அந்த
சூதெனக் கெடுத்து ரைக்க வேணுமே (அன்)

உரை

தேசிகா! அடியாள் அடைந்திருக்கும் ஆசையானது அனுதினமும் சத்குரு மூர்த்தங்கொண்ட தத்துவஞானிகளுக்கே திருப்பணிகள் செய்வது உத்தமமென்ற விரதம். ஆகையால் இதனாலே உலகத்தவரால் என்ன குற்றம் சாட்டப்படும் என்று சுவாமிகள் சொல்லிற்று? எந்த தர்ம்ம தத்துவ சாத்திரத்திலும் எந்த ஜீவன் முத்தர்களாலும் எடுத்துரைக்கப் படவில்லையே. அதன் கருத்து விளங்க எடுத்துரைக்க வேண்டும் அண்ணலே.

உரை

சுவாமி :

அம்மணி, நீ சொல்வது ஞாயமே. பதிவிரதைகளுக்கு இவைகளெல்லாந் தன்னைக்கொண்ட புருஷனிடத்தில் இருக்க வேண்டுமே யல்லாமல் அன்னியரிடத்தில் இந்தச் செய்கை காட்டுதற்குச் சட்டமல்லவே இது பேதைகுணம். லட்சுமி நீயே யோசித்துப்பார்.

பாட்டு

சுவாமி :

கூறுதிரி மூர்த்திகளு மாறு வேடமிட் டிழிவாய்
தாருகர் மனையிற் றனுக்குள் ஏகினா ரம்மா
அவர் நாரிகள் கற்பினை யழித்தா ரம்மா (அன்)

உரை

ஹே மாதர் சிரோன்மணியே! அதன் விபரம் சொல்லுவேன். கேட்பாயாக. முன்னால் தாருகாவனத்தின் ரிஷிகளின் கெர்வ பங்கம் பண்ணவேணுமென்ற எண்ணத்தைக் கொண்டு திரிமூர்த்திகளும் சன்யாசி வேடம் பூண்டு அவர்கள் ஆச்சிரமத்தில் பிச்சை சென்று அவர்கள் பத்தினிகளாகிய அறுபதினாயிரம் பேர்களுக்கும் சயன கூடத்தில் தம்பதிகளாகி இருக்கக் கண்ட மகரிஷிகளுக்குக் கோபம் வந்து யேற்பட்ட பகை அன்றுமுதல் இன்றளவும் தீரவில்லை என்றும் காந்த புராணத்தில் வரையப்பட்டிருக்கிறது. இன்னுங் கேள்.

பாட்டு

வீரிய பொன்சீதை தன்னை ராவணன் பொய்வேட மிட்டு
தேரினி லெடுத்துச் சென்றான் லங்கை யேஅப்
பேரி லெம்மை தூற்றி னார்கள் மங்கையே (அன்)

உரை

வனவாசஞ் சென்றிருந்த ராமபிரானுடைய பத்தினியாகிய சீதையின் அழகை சூர்ப்பநகையால் விளங்கத் தெரிந்து ஆவல்கொண்ட தசக்கிரீவன் சன்யாசி வேடந்தரித்து சீதா முன்னில் பிச்சைகேட்டு அவள் பிச்சையிட வர, அவளை வாரியெடுத்துத் தேரினில் வைத்து சென்றானென்றும்

பாகவதத்தில் விளங்கத் தெரிகின்றது. இவையெல்லாம் மாய சன்யாசி வேடமே. அப்படி இப்பவும் உலகெங்கும் வயிற்று காலட்சேப மூட சன்யாசிகள் பரவிக்கிடப்பதால் பக்தி வைராக்கிய ஜீவன் முக்தர்களிடத்திலும் உலகம் சந்தேகமும் இகழ்வுஞ் சொல்லுகிற படியால் இத்னைச் சொன்னேன்.

## பாட்டு

**நங்கை :**

இப்படி சொல்வ தழகோ
வைப்பூரின் வணிகப் பெண்ணாள்
ஒப்பிலா மன்னன் றுயரை வூக்கினார் - அதைக்
குப்பென ஞான சம்மந்தர் நீக்கினார் (அன்)

## உரை

மாதவா! தாங்களே இப்படி மொழிந்தால் அஞ்ஞானக் கடலில் மூழ்கிக் கிடக்கும் உலகம் பேசுதற்குச் சந்தேகம் என்ன? அடிமையாள் வாக்கியத்தைக் கவனிக்க வேண்டும். வைப்பூர் என்னும் ஊரிலே ஓர் வணிகன் தான் பெற்ற ஏழு பெண்களில் ஆதி தொட்டு ஆறு பெண்கள் வரையில் தன் மைத்துனனுக்கு வதுவை செய்து கொடுப்பதாய்ச் சொல்லித் தவறிப்போக, இதையறிந்து ஏழாவது பெண் மதுரையில் வீற்றிருக்கும் தன் தாய்மாமனுக்கு அறியப்படுத்தி வருவிக்க, அவருடன் இரவில் தனிச்சென்று திருமகள் ஆலயத்தில் தங்கி நித்திரை செய்யுங்காலத்து அம்மானை பாம்பு கடித்து இறந்துபோக, அதையறிந்த பெண்பால் அழுதுகொண்டிருக்க அக்காலம் அந்நகரில் வந்திருந்த பிர்மசார சன்யாசியாகிய திருஞானசம்மந்த சுவாமிகள் தெரிந்துவந்த அக்கடிவிஷத்தை பஸ்பஞ்செய்து வணிகனை எழுப்பி அப்பெண்ணின் சம்மதப்படி இருவரையுங் கல்யாணஞ் செய்து அனுப்பியது சன்யாசி மூர்த்தந்தானே! நிற்க.

## பாட்டு

செப்பருங் கடல் நகரத் தப்பன் வேதகுல கௌரி
ஒப்பவிர்த்த குமார பாலரா யினார் - அதில்
தப்பிதம் வந்ததோ சொல்லும் நாவினால் (அன்)

### உரை

திருவாலவாய் நகரத்தில் வசித்த விருபாக்கன் என்னும் பிராமணன் தவத்தால் பிறந்த கௌரி யென்னும் பெண்ணை வைணவ தியாகுக்கு வதுவை செய்துகொடுத்தனுப்ப, அவள் குடும்பத்துள்ள முன்னோர் மதபேதங்கண்டு அவளைத் தனியே வைத்தும் ஒரு நாள் அந்த கௌரி தனித்திருந்த நாள் தனக்கு வந்த குறையை நினைந்து சிவபிரானைச் சிந்திக்கச் சௌந்திர பாண்டியனாயிருந்த பெருமான் தயவு கொண்டு அத்திவேடம் பூண்டு அம்மையாள் பிச்சையேற்று அவள் மாமி மாமனார்கள் வெட்கும்படி விருத்த பரதேசி யாயிருந்தவர் குமார பருவம் அடைந்தும், பின் பாலராகியும் அவ்வம்மையார் காண இடபாரூபராய் வந்து தன்பாலுள்ள தடாதகை அமிசமாய் அயிக்கியஞ் செய்யவில்லையா? இதில் என்ன குற்றம் வந்ததோ தெரியவில்லையே சுவாமி?

### பாட்டு

**சுவாமி :**

நல்லது நேரஞ் செல்வது - நீ
நில்லு நில்லு சொல்லு வாய்வுன்
மன்ன னுக்கென் சேதியை வினை
சொல்லுவாய் கொள்ளுவா யருணீ தியை. (101) (அன்)

### உரை

தாயே! மிக்க நன்றாயிருக்கிறது. உன்னிடம் வாய்கொடுத்து என்னால் மீளமுடியாது. நீ பெரும் வம்பி. எனக்கு நேரமாகிறது. நான் போறேன். உன் நாயகன் வந்தால் நான் வந்தேனென்று மாத்திரம் ஒரு வார்த்தை சொல்லு. கடவுள் உனக்கு நல்ல அனுக்ரகஞ் செய்வார். நான் வாறேன்.

**நங்கை :**

சுவாமி! அடியாள் எந்தத் திட நிச்சயத்தைக் கொண்டு வந்தாய் சொல்கின்றது?

**சுவாமி**

ஹே உத்தமியே! அப்படிக் கேள். இந்த வாக்கியம் அருமையான வாக்கியம். உலகின்கண் பொய்வேடதாரிகள் அனந்தம் உண்டு. அவர்களைப் போல என்னையும் எண்ணாதே. உண்மையைக் கேள் நானோ வடதேசம். நெடுநாளாய் உன் குணத்தையும் உன் புருஷன் குணத்தையும் பலர்களால் சொல்லக்கேட்டு உங்களிருவரையும் பார்க்கவேணுமென்றே இவ்விடம் வந்தேன். வந்ததில் என் அதிர்ஷ்டவசம் உன் தரிசனம் மட்டும் ஆச்சுதே ஒழிய உன் கணவனுடைய தரிசனங் கிட்டவில்லை. ஆனாலும் அவரைக் காணாமல் போகமாட்டேன். காணும் வரையில் கீழ்த் திசையிலிருக்கிற கணபதி வனத்தில் தங்கியிருக்கிறேன். ஐயர் வந்தவுடன் வரச் சொல்வாய் அம்மணி.

## விருத்தம்

**நங்கை :**

102. தேவரீர் மனையி ருந்து திருவமு துண்ணே னென்றீர்
காவலன் வந்தா லித்தை கதைத்தங்கே வரச்சொல் லென்றீர்
மாவிரு ளடர்வ னத்தின் அடையாள மகிமை யெல்லாம்
பூவையா ளறியும் வண்ணம் புகலுவீர் தவசி யாரே. (102)

## உரை

ஹே தேசிகா! மடாலயத்தில் திருவமு துண்ணவுஞ் சம்மதமில்லை; தங்கியிருக்கவுஞ் சம்மதமில்லை. கணபதி வனத்திலிருக்கிறேன்; வரச் சொல்லென்றால் அந்த அடர்ந்த இருள் வனத்தில் எந்த யிடத்தை நிச்சயித்து வரலாம். பேதையாளுக்கு விளங்க இருக்குமிடத்தின் அடையாளஞ் சொல்லிப்போனால் அவ்வாறே வரச் சொல்கிறேன். தயவு கூர்ந்து உண்மையைத் தெரிவிக்க வேண்டுஞ். சுவாமி.

## பாட்டு

**சுவாமி :**

103. நெல்லொடு தென்கதலி கன்னல்
நல்ல சங்கு வாளை யூறும்
பள்ளவயல் சூழ்செங்காடு தன்னிலே - தேவர்

சொல்லுங் கணபதிவனம் முன்னிலே
நேத்தி பாரி ஜாதஞ் சந்தி
பாத்திர யிலஞ்சி கோங்கு

தீர்த்தமுஞ் சிறந்தி ருக்குந் திண்ணமே - அதில்
ஆத்தி யொன்று பட்டிருக்கு முன்னமே
ஆத்தியடி வீற்றி ருப்பேன் போற்றியுன் - புருஷனுக்கு
சாற்றிவரச் சொல்லுவாய் நீஅங்கனே - ஒரு
தோத்தி ரத்தில்யான் வருவே னிங்கனே. (103)

## உரை

பெண்கள் நாயகமே! வளம் பெற்ற தென்னந் தோப்புகளும் கரும்பு விளையும் தோட்டங் கால்களும் அழகிய சடங்குகளும் வாளைகளும் விளையாடும் நெல்லு விளையும் படியாகிய குளிர்ஜலந் தங்கும் பள்ள வயல்களும் அழகிய பாரிஜாதம் சந்தனம் பாதிரி இலந்தை கோங்கு வில்வம் நிறைந்த பூஞ்சோலைகளும், அதில் சிறப்போங்கிய ஓர் தடாகமும் சூழ்ந்திருக்கும். இந்தத் திருச்செங்காட்டில் கீழ்பாகத்தில் கணபதிவனத்தில் பட்ட திருவாத்தியின் கீழ் வீற்றிருக்கிறேன். அவ்விடம் வரச் சொல்வாய்.

**நங்கை :**

சுவாமி! அப்படியே வரச் சொல்கிறேன். சுவாமிகள் இருந்து கண்டு வருவது நிச்சயமாயிருக்குமா? நான் வரச் சொல்கிறேன். நிச்சயந்தான் எங்களின் தவக்குறை நீக்குங்கடனே தங்களுடையதாகும் நமஸ்கரிக்கின்றேன்.

**சுவாமி :**

ஆஹா தாயே! அவர் வந்து என்னைக் கண்டும் கணந்தங்குவேனோ. ஒரு சத்தங் கூப்பிடுகிறதற்கு முன்னே வந்துவிடுகிறேன். போய் வாறேன் தாயே. உனக்கெனது பூரண ஆசீர்வாதம்.

## பாட்டு

(பட்டாபிஷேகத்தை என்ற மெட்டு)

**நங்கை :**

104. பாவி பலபல பாடுபட்டு எந்தன்
பரிதாபம் பாராம லறிவானந்தப் பரம்மம்

பணிந்தோடிப் போனதினால் நான்சரியென் றிருந்ததினால்
பழியாமோ பிழையாமோ வழிகாணேன் ஆ (பாவி)

பாங்கியென் செய்வேனடி அவரவர் சொல்லுக்குந்
தவறின்றி நடந்ததால் அனுபவத்தில் வரும்வினை
வழிதுன்பங்கள் யாதாகுமோ காலம் கெதியேதாகுமோ
கோலம் களைத்தேனே இளைத்தேனே பிழைத்தேனே
(பாவி)

நம்பி கண்டதுமிது தானாயான் கெட்ட பேருக்கு
ஆளா ஆளாயினும் எந்தன் இறைவன்
தவமோங்கக் கண்டே னானாலன்று என்னுயிர்
நிச்சயமே அல்லால் எல்லாம் அனுச்சயமே (பாவி)

உலகிலெவர் பாலுரைக்கினுந் தான்பட்ட உற்றகுறை
யெடுத்தோ துவரல்லால் உள்ளதுயர் போமோ
மேல்தெள்ளும் புகழாமோ உத்தமிநான் பெற்றதவம்
சுத்தமெனில் தெய்வ உண்மையே காக்கணுமே (104) (பாவி)

## உரை

**சந்தனம் :**

தாயே நமக்கு வந்த குறையை நினைத்து நினைத்து அழுத போதிலும் ஆறப் போவதிலை. தனக்கு வந்த வினைப்பயனைப் பிறரிடங் கொடுக்க வேண்டுமென்றாலும் இடுவாரும் ஏற்பாருமில்லை. அவரவர் செய்த இருவினைப்பயனை அவரவர் அனுபவித்தே தீர வேண்டும். அழாதே. வந்த பெரியோர் சங்கதியெல்லாம் உண்மையாகச் சொல்லிப் பார்ப்போம். பொய்யென வெறுத்தால் வந்ததை அனுபவிப்போம்.

## பாட்டு

**சுவாமி :**

105. வந்தார் வைரவ ப்ரகாச மூர்த்தி
அன்பர்க ளென்றும் போற்றி
கண்டருள் செய்யுங் கீர்த்தி - நாதன்
மாமு கவனத்தில் பட்டதிரு வாத்தி (வந்தார்)

உல்லாச மாகப் பெருநடை கூட
உலகெங்கு மாட தேவர்கள் கொண்டாட
இந்த உண்மை யறியாத
சிறுத் தொண்டர் வாட (வந்தார்)

களையால் படுத்துறங்கன் பறைவேண்டிப் - பொய்வேடங்
கொள்ளாண்டி மந்ர கோலால் தீண்டி
அவர்கண்ணி லகப்படா மலவ்வழி தாண்டிக்
காராணர் வனத்திலிவர் மேவ வனந்தளிர்
(வந்தார்)

பாவ வாசமலர் தூவ - நாவணங்
கார்குயில் மயில்கிளிகள் கூடிக் கூவ
பட்ட திருவாத்தியைக் கண்ணால் பார்க்கத்
துளித்துப் பூக்க நிழலைத் தாக்க (வந்தார்)

வண்டுகள் பாடிமது உண்டிட பனிகால்
பூக்க வாத ஊரார்காய் பெருந்துறையில்
வந்தார் ஞானங் கண்மொழிந்தார் - அதுபோல
மாந்தார் வனம்நண்ணிய தேவதைக ளிவரைப் பணிந்தார்
(105) (வந்தார்)

## விருத்தம்

(சாலைமர நிழலில் சொர்ப்பனாவஸ்தை என்ற மெட்டு)

**நாயனார் :**

106. அரகரா கொடிய பாவி அயர்ந்து சற்றுறங் கலானேன்
தரமுறும் பெரியோ ரென்னைத் தட்டியே எழுப்பக் கண்டேன்
புரமெரி யீசா என்ன புதுமையோ காணேன் வந்த
உரவரைக் கண்டி லீரோ உரைத்திட ரடவி யோரே. (106)

## உரை

அரகரமகா தேவா! பெரும் பாவியாகிய நான் இன்று வந்திருக்கும் தவக்குறையையும் மறக்கும்படி யேற்பட்ட தேக வுபாதையினால் இந்தப் பாதையின் மர நிழலில் படுத்து சொர்ப்பனாவஸ்த்தையை அடைந்தேன். அக்காலம் ஓர் பரிபக்குவமுடைய மகான்மா ஒருவர்

கிட்டி, கை கோலால் அன்பனே என்ன நித்திரையோ என தட்டி எழுப்பக் கண்டேன். கனவுமாறி உடன் பதைத்தெழுந்து அப்பெரியோரைப் பார்க்குங் காலத்து நேரில் காணேன். ஹே திரிபுராந்தகா! இதுவென்ன அதிசமோ கனவோ நினைவோ அல்லது உனது சிற்றின்ப விளையாட்டின் சோதனையோ! இவ்வகை என்று அறியப்படவில்லையே. கண்காணாமல் மறைந்த பெரியோரை என் சந்தேகம் அற இப்பாட்டைசாரிகளையாவது கேட்டுப் பார்க்கிறேன்.

## பாட்டு

107. கண்டீர்களோ காணீர்களோ கனதன வான்களே
கையில் ஓடும் மெய்யில் நீருளாரை நீங்களே

## உரை

ஓ இப்பாதையில் போகின்ற நண்பர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். பதில் சொல்லிச் செல்லுங்கள். அதாவது அழகிய கையினிற் பிடித்த திருவோடும் திருமேனியில் வெண்ணீற்று உத்தூளனத்துடன் வந்த ஒரு பெரியோரை இப்பாதையில் உங்கள் கண்ணில் கண்டீர்களோ. தயவுசெய்து சொல்லுங்கள்.

**பாதைசாரி :**

எங்கள் முன்னிலையில் பெரியோருஞ் சிறியோரும் வரக் கண்டிலோம். நாங்கள் குறுக்குப் பாதையாய் வருகின்றோம். அதோ பின்னால் வருபவர்களைக் கேட்டுப் பாருங்கள் சுவாமி.

## பாட்டு

**நாயனார் :**

கண்ட வேந்தன் கனவிலாடை வொன்று போத்தியே
கொண்டு கோல்நேர் தூண்டின கௌபீன மூர்த்தியை (கண்டீ)

ஹே பாதைசாரிகளே! நீங்கள் மேல்திசை வெகுதூரத்திலிருந்து வருகிறீர்களோ. உங்கள் முன்னில் என் கனவில் கண்டு தூண்டி எழுப்பிய ஓர் பெரியார் ஒரே காவிவஸ்திரம் போர்த்தியுள்ளார். கையில் ஒரு கம்பையுடையார். வரக்கண்டிருக்கலாமா. தெரிந்திருந்தால் சொல்லுங்கள்.

### உரை

**பாதைசாரி :**

அய்யா! அந்த அடையாளத்தோடு வரும் பெரியவரை நாங்கள் நெடுந்தூரத்திலிருந்து வருகிறோம். இதுவரையில் எங்கள் கண்ணில் காணோம். நாங்கள் வந்த பாதையிலில்லை. இதோ அந்தக் கிளைப் பாதையில் வருகிறார்களே அவர்களைக் கேட்டுப் பாருங்கள். நாங்கள் போகிறோம்.

### பாட்டு

**நாயனார் :**

இக்கணத்தில் சொல்வீரானால் இதயம் மூரியே
இருகையினால் செம்பொன்வாரி யிடுவேன் பூரியே (கண்ட)

### உரை

ஓ தெற்கேயிருந்து இந்தக் கிளைவழியே வருகின்ற பிரயாணிகளே! உங்களைப் பார்த்தால் மிக்க வறுமையாளர்களாய்த் தெரிகிறது. இருக்கட்டும் எனக்கோர் தெளிவு சொல்வீர்களானால் இம்மனம் வலிய திருப்தி கொண்டு இரண்டு கையினாலும் பசும்பொன்களை வாரித் தானமாகக் கொடுத்து உங்கள் தரித்திரத்தை நீக்கி விடுகிறேன். உங்கள் முன்னிலையில் அக்கமாலை தரித்த ஓர் சன்யாசியார் போக உங்கள் முன்னால் பார்த்திருக்கக் கூடுமோ? உண்டானால் என் அகந்தெளிய அறைகுவீர்.

**பாதைசாரிகள் :**

சுவாமி! தங்களைப் பார்த்தால் புண்ணிய சீலராகவும் பெருந்தனக் காரராகவும் இரக்க மனதுடையவராகவும் தெரிகிறது. நீங்கள் கேட்ட கேள்விக்குப் பதில் சொன்னால் எங்கள் தரித்திரம் நீங்கிப்போகுந்தான். இதற்காகப் பொய்யைச் சொல்லலாமா? நாங்கள் காணோம். அதோ ஓரடி பாதையில் வருகிறார்களே அவர்களைக் கேட்டுப் பாருங்கள். நாங்கள் போகிறோம்.

### பாட்டு

**நாயனார் :**

நிற்கவும் ஓர்வார்த்தைச் சொல்லவில்லை கூவியே
நேசரே உங்கட்கு நான் ஆகாத பாவியே (கண்டீ)

### உரை

ஆ. இந்த வடதிக்கில் ஒரடிப் பாதையாய்க் கால்நடை துரிதமாய் வருகின்ற அப்பா! சற்று நில்லு. ஐயா, அவசரப்பட வேண்டாம். பொறுத்துக் கேளுங்கள். ஹா கிலாச்சாரமே. இப்பாதையில் போகின்றவர்கள் என்ன அவசரமனதுடையவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் கையைப் பிடித்தாலும் தாழ்வாயைப் பிடித்தாலும் கும்பிட்டாலும் நின்று பதில் சொல்லவில்லையே. அம்மா, அக்கா, தாயே, தாடிசடையுடன் ஒரு பெரியவரைக் கண்டது உண்டா? சொல்லுங்கள்.

**பாதைசாரிகள் :**

அய்யா நீர் யார்? அய்யரைப்போல தெரிகிறதே. நாங்கள் குடியானவர்கள். எங்களைத் தீண்டாதீர்கள். இந்தப் பாதையில் நீங்கள் சொன்ன அடையாளப்படி காணோம். நாங்கள் ஒரு சாவு இழவுக்குப் போகிறோம். வெகு அவசரம். மறிக்காதீர். அதோ ராசபாதையில் வருகிறார்களே அவர்களைக் கேளும். நாங்கள் போகிறோம்.

### பாட்டு

**நாயனார்:**

உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றுறவு பூணேனே
உலகோப காரஞ்செய் உண்மை காணேனே (கண்டீ)

### உரை

இந்தக் கீழ்பால் ராஜபாதையில் வருகின்ற அன்பர்காள்! உங்கள் தலைச்சுமையை இந்தச் சுமைதாங்கியில் இறக்குங்கள். சற்று இந்த மரத்தடியில் இளைப்பாறுங்கள். இதோ உங்கள் காலைப் பிடிக்கிறேன். என் மனந்தெளிய ஓர் பதில் சொல்லுங்கள். ஐயோ திருவுளமே உடன் பிறந்தார்களென்றும் சுற்றத்தார்களென்றும் சொந்த உறவு பாராட்டாமல் பொதுவில் உலகோபகார புண்ணியனாக இருந்தும் அந்த நன்றிக்கு அனுபவத்தில் எள்ளத்தனைக் கூட சுபப்பிரயோசனத்தைக் காணோம். இதற்கென்ன செய்யலாம்?

**பாதைசாரிகள் :**

அடா அண்ணேன், தம்பி, மாமா, அத்தான், அப்பா, அய்யா, இவன் என்ன பைத்தியம் பிடித்தவனா அல்லது திருடனோ அல்லது நயவஞ்சக் கொள்ளைக்காரனோ? முன்னால் இத்தனைப் பேரையும் வழிமறிக்கிறான். மூட்டையை இறக்கென்கிறான். களைப்பாறுங் களென்கிறான். பிரயாணத்தைக் கெடுக்கிறான். ஓய் நீ யாரு? பிராமணணா செட்டியா செக்கானா வள்ளுவனா சாத்தானியா? உனக்கென்ன கெறாக்கா? வழிமறிக்காதே. எட்டிப்போ. எங்களவசரமென்ன! எங்கள் பெண்டுபிள்ளைகளெல்லாம் 2, 3 நாள்களாகப் பெரும் பட்டினியாக இருக்கிறது. இந்த மூட்டை போய்தான் பசியாற வேண்டும். வழியில் வருவோரையும் போவோரையும் கண்டிருந்து கேட்பாருக்குச் சொல்லத்தானா இது நேரம். போ போ. சுத்த மடையனா யிருக்கிறாய்.

**பாட்டு**

**நாயனார் :**

மடமைகுண முள்ளோ னென்று மனிதர் உய்வாரோ
மயேச்சுரன் சோதனை யின்னம் என்ன செய்வாரோ
(107) (கண்ட)

**உரை**

ஆ விதியே! நாம் கனவில் கண்ட பெரியாரைக் காணாமல் இந் நான்கு வழிப்போக்கரை எதிர்மறித்து கேட்டாலும் அவரவரும் தங்கள் தங்கள் அவசரத்தில் என்னை யிகழ்ந்து மிக்க அறிவில்லாதவனாய் நினைந்து போகிறதாய்த் தெரிகிறது. எவ்வகையாலும் எனது சந்தேகந் தெளிந்தார் இல்லை. இனியென்ன செய்யலாம்? நமது மடாலயத்தை அடைந்திருக்கலாமோ? அல்ல ஈஸ்வரன் இன்னும் என்னதான் சோதனை செய்வாரோ? இதோ மடாலயஞ் செல்வேன்.

**பாட்டு**

பாதபூசை

(மடாலயம் வந்தபின் என்ற மெட்டு)

**நங்கை:**

108. மறையே ரரசே குறையேன் வருவீர்
பொறைதாள் பணிவேன் மறையான் துணிவேன் (மறை)

### உரை

ஹே வேதகுல சிரோ ரெத்தினமே! சீத கமல மலர் போன்ற வதனத்தில் ஏன் இவ்வளவு வாட்டத்தை யடைகிறது. போகட்டும். திருவடிக்கடியாள் தெய்வ நாயகனரு நித்திய கால திருவடி பூஜை முடிவு பெறாமலிருப்பதால் என் மனதிருப்தியடைய பூசிக்கும்படி இந்த அரிய பொற்பலகையின் மீது நிற்கவேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

### பாட்டு

சித்திரை கானலோ மெத்தவுஞ் சூடலோ
வெற்றிகொள் தாளிலோ பற்றிவே குங்கொலோ (மறை)

சந்தனா! இந்த உத்தராயன வசந்தருது சித்திரை மாத மத்தியகால சூரியோஷ்ணத்தினால் எனது ஆசைகாதலன் விஜைய பொற்கமல பாதம் அதிகச் சூடேறி யிருக்குமல்லவா. சீக்கிரஞ் சென்று பாதபூஜை வஸ்துக்களை எடுத்து வா.

### பாட்டு

குளிரும் பன்னீரே களபமும் பாரே
முளரி தாள்நேரே ஒளிசெய்தேன் நீரே (மறை)

மிக்க குளிர்ச்சி பொருந்திய களப குங்கும சுகந்தாதிகளை ஒன்று கூட்டிய பனிநீரினால் வெய்யலால் வெதுப்பேறிய கமல பாதத்திற்குக் குளிரேறும்படி இதோ அபிஷேகஞ் செய்தேன்.

### பாட்டு

நறுமலர் கொண்டு சிறுமையை விண்டு
முறைமையென் தொண்டு செலுத்தினேன் கண்டு

(மறை)

ஹே பிராணபதி! அடியாளுக்கு நித்தியகால சிறுமை எத்தனை யிருந்தாலும் அவைகளைச் சிந்தியாமல் நித்திய கிரமப்படி தங்கள் திருவடித் தொண்டுக்குக் குறைவின்றி யிதோ வாசம் பொருந்திய மல்லிகை முல்லை அரும்புகளினால் சம்பூர்ணார்ச்சனை புரிந்தேன்.

## பாட்டு

தஞ்சமென் னங்கம் பஞ்சங்க மாகப்
பஞ்சிடை நோக அஞ்சலித்தேன் போக. (108) (மறை)

எனது குண பூஷணா! எனது உள்ளத்தில் நித்திய காலட்சேப கெதிமோட்சத்துக் கேதுவான தங்கள் திருவடிகளையே நம்பியிருக்கும் அடியாள் பஞ்சினும் மெல்லிய யிடை நோவலும் பாராமல் பெண்களுக்குரிய பஞ்சங்க பணியாய் இதோ நமஸ்கரிக்கின்றேன். இதோ இந்த ரேழி மேடையில் அமரட்டும். சந்தனா! பிரபுவுக்கு மிகவும் களையா இருக்கிறது. சீக்கிரம் ஓடி விசிறி ஷாமரம் எடுத்து வா. நன்றாய் விசுறுவாய்.

## விருத்தம்

**நாயனார் :**

109. ஐயோ வயிறெரியு தென்ன செய்வே னீசா
அகத்தை விட்டப்புறம் போனோன் ஏனோ வந்தேன்
மொய்ய விங்கு துறவிகளால் நேற்றி ருந்த
முழக்கமென்ன இன்றுவந்த கலக்க மென்ன
நையுதே வாழ்வு சந்தை கூட்ட மென்ற
ஞாயமெனக் கல்லாமல் வேறே வுண்டோ
தையலே என்ன செய்வோம் பிறந்த நம்மால்
சாரமென்ன புவியில் பெரும் பாரமாமே. (109)

## பாட்டு

(தஜரதராஜ குமாரா என்ற மெட்டு)

110. சரவண பவகுரு நாதா அருள் மாதா
பிரைக்கி யாதா தருந் தாதா
பரப்பொருளே உனது பதமலர் பணிந்தேன்
பந்த உலகப் பற்றை அறுத்திட துணிந்தேன்
வருந்தினம் பரங்களால் வலிவினை தணிந்தேன்
வரிசையில் செய்த தென்ன முறையோ (சரவண)

தவக் குறையோ விளை குறையே இதுமுறையோ
பண்ணிய புண்ணியத்தின் பலன்கெடப் போமோ
பலநாளும் நம்பினோரைக் கைவிடப் போமோ
அண்ணல் கடைபிடிக்குத் தடைவரப் போமோ

அறை மறைக்குஞ் சம்மதந் தானோ
கெடுவானோ விதிதானோ விடுவேனோ (சரவண)

உத்தம தவத்தாலே ஒழிந்திடும் பாவம்
உண்மை தன்னிலை கண்டால் ஓங்கிடுந் தீபம்
தத்துவம் ஈதல்லாமல் இலைவிடு கோபம்
சன்மார்க்கஞ் சொன்னதுவும் போச்சே
உலகேச்சே சாது பேச்சே துயராச்சே
என்ன பவக்குறையால் வந்ததென் றுரைப்பேன் (சரவண)

இந்த மனத்துயரை எவ்வாளா லறுப்பேன்
அன்ன தானத்தா லகங்காரத்தை வெறுப்பேன்
அறிவானந்தஞ் சொல்வதைக் கேட்பேன் நாளுமேற்பேன்
இன்னும் பார்ப்பேன் தவங் காப்பேன். (110) (சரவண)

(நாயனார் ரேழிமேடையில் சோகம்)

## பாட்டு

(கைச ஜாத்துடலா என்ற மெட்டு)

**நங்கை:**

111. சஞ்சலப் படாதீர் சுவாமி
சஞ்சலப் படாதீர் கேளும்
சஞ்சலப் படாதீர் சும்மா
சாற்றுவே னான்மொழி யிந்நாள்
அஞ்சலிடுந் தெய்வம் போலோர்
அருந்தவப் பெரியோரும்
துஞ்சுமனை வாசல் நின்று
சோதி சத்தமிட்டார் நீரும். (111)

## உரை

பிராணேசா! மேலும் மேலும் நமக்கு வந்த யிடரை நினைத்துச் சஞ்சலிப்பதினால் ஆவதொன்றுமில்லை. அந்த நினைவை யொழித்துப் பேதையான் சொல்லும் வாக்கியத்தைப் பொறுத்துக் கவனிக்க வேண்டுகிறேன். சதாவும் நேர்தரிசனந் தந்து ஆசீர்வதிக்கும் அதிதிகளுக்கு மேலான அரிய ஓர் தவசியானவர் தாங்கள் வெளிப்பட்டு போன சற்று நேரத்திற்கெல்லாம் என்றுமிருந்த சங்கப்பரகாச சத்தம்

ஒய்ந்த முன்வாசற்படியில் வந்து நின்று தாரகப்பரம்ம நாம சத்தங்கொடுத்தார்.

அக்கணமே ஓடி நாங்கள் அரிய பொற்பாதந்தன்னைப் பக்குவமாகப் பணிந்தோம். பக்தர் எங்கே யென்றார்முன்னே சுவாமி அந்தத் திருவருட் சத்தத்தைக் கேட்டவுடன் அடிமைகள் நாங்கள் பதைத்து ஓடி அரிய திருவடிகளைப் பிடித்துக் கொண்டு கிரமமாக வணங்கி பிரார்த்தித்தோம். சிவபக்த தர்மாதிபதி எங்கே என்று வினவினார்.

## பாட்டு

சிக்கென நடந்தெல்லாஞ் செப்பியமு துண்ணவாரும்
நக்கனடி யாரேஎன்று நவின்றோமப் பெரியோரும்

## உரை

அவ்வாக்கியங் கேட்ட அக்கணமே இன்று நமக்கு யேற்பட்டிருக்கும் குறையைச் சவிஸ்தாரமாக உரைத்து பிர்ம சைதன்யமே அமுதுண்ண எழுந்தருள வேணுமென்று வேண்டினோம். அதற்கு அந்த மகாத்மா

## பாட்டு

பெண்களுள்ள வீட்டிற்றனி பெரியோர் புகவுமுண்ண
தண்கலந்த முன்னவர்க்குச் சரியல்ல வென்றார்மன்ன

## உரை

ஸ்திரிசாதிகளுக்குக் காப்பின்றித் தனிவாழ்விசைந்த கிரகத்தினுள் துறவிகள் வரவும் அப்பெண்களாலளிக்கப்பட்ட மனச்சந்தேக பிச்சையேற்று உண்ணவும் சுத்தசத்துவ குணமேலோர்களுக்கு விதி எவ்வாற்றாலுங் கிடையாது என்று ஆட்சேபித்தார். எங்களால் எம்மாட்டு தர்க்கிக்கக் கிரமமோ அம்மட்டு வேண்டி முயன்றோம். அதைக் கேட்ட பெரியோர்

## பாட்டு

பண்கொளுங் கணபதீசர் பதியாத்தி யடிசென்றார்
கண்கொளநீர் வரமட்டுங் காத்திருப்ப தாய்ப்புகன்றார்

## உரை

நாயகா! சிறப்போங்கிய கணபதீச்சுரமான இத்தலத்தின் கீழ்ப்பாலுள்ள வனத்தில் காட்டாத்தி யடியில் உன் கணவனை நேர்காணுமட்டும் தங்கி இருக்கின்றோம்; வந்தால் வரச்சொல் என்று சென்றுவிட்டார். இதுதான் தாங்கள் போன பிறகு நடந்த விசேஷம்.

**நாயனார்:**

கண்மணி என்ன சொல்கின்றாய்? ஆஹா நங்காய், பெரியவர் வந்தார். உங்கள் திருப்பணியேற்றுக் கொள்ளவில்லை. கணபதி வனஞ் சென்றார். என்னவோ அவரோ பின் எவரோ அடி கண்மணி. வந்தவாக்கு யேதேனும் அடையாள முண்டோ? என்னை வரச் சொன்ன அவர் உங்களுக்குச் செப்பியது என்ன?

**நங்கை:**

சுவாமி! அப்பெரியார் நீண்ட சடையினையும் கையிற் றிருவோடும் போத்திய ஒரே பூங்காவி ஆடையும் முற்றுந் துறந்த சுத்த சத்துவ குணத்தை யுடையவரும் ஆனவர். வடதேச வாசமென்றுஞ் செப்பினார். பொறுமையும் புண்ணியமுமுடைய தங்களின் றரிசனங் காண வந்ததாகவுஞ் சொன்னார். நிச்சயமாக இருப்பார். தங்கள் சஞ்சலமெல்லாம் ஒழித்து உடன்சென்று அழைத்து வாருங்கள் சுவாமி.

## விருத்தம்

**நாயனார்:**

112. கர்த்தனே சிவனே யெந்தன் கனவினில் வந்தோர் நீரோ
சற்று நாழிகைக்கு முன்னிச் சண்டாளன் வந்தே னானால்
வித்தக ரடியார் தம்மை விடுவேனோ மோசம் போனேனுன்

## உரை

ஹே செகதீசா! இது என்ன ஆச்சரியம். நான் சாலையில் மரத்தடியில் படுத்துறங்குங்கால் கனவில் தோன்றியவரா யிருக்கலாமோ. (நங்காய்) வந்தவர் சென்றது எவ்வளவு நேரமிருக்கலாம்.

**நங்கை:**

சுவாமி! தாங்கள் வருவதற்குச் சற்று முன்பாகத்தான் போனார்.

**நாயனார் :**

ஓ சிவமே! கனவில் கண்டவரே வந்திருப்பதாகத் தெரிகிறது. வீணில் வழியில் காலம் போக்கினேனே. இந்த மதிகேடன் சற்று முன்னாக வந்திருப்பேனானால் மெய்யடியாரைக் கண்டுமிருப்பேன்; விடவும் மாட்டேன். ஓகோ மோசம் போய் விட்டேன். தரித்திரவானுக்குப் பிரளய சிந்தை என்பது போல எனது மூடமதியினாலல்லோ கெட்டேன். ஆ!

## பாட்டு

இராகம்: தன்னியாசி

113. செகதீசா! ஓ பரமேசா!! ககனமுனிகள்
செய்யுங் கபட நாடகந் தானோ (செகதீசா)

## உரை

ஹே சர்வேசா! அன்பனாகிய என்னைக் கவனிக்கவேண்டு மென்று செய்யும் உன்னுடைய திருவிளையாட்டா? அல்லது மாயாச்சித்தர்கள் பொறாமையா? அவர்களுக்கு நான் செய்த குற்றமென்ன? அதல்ல.

## பாட்டு

உலகினி லீகையில் லான்மலச் சுரும்பு
ஒன்றுக்கு முதவாத நான்சிறு துரும்பு
குலவுமுன் குணமறிந் தவர்கட்டிக் கரும்பு
குழந்தை யறியேன் செய்வதேனிந்த குறும்பு (செகதீசா)

## உரை

ஏ தயாநிதி! உலகின்கண் மனிதனாய்ப் பிறந்து ஜீவகாருண்யமுஞ் சாந்தமும் தர்மமு மில்லாதவன் தனக்கு வேண்டுமென்று இச்சித்து மற்றவர்க்கு எதையும் வழங்காத லோபி துற்நாற்றமுடைய மலத்தை உருட்டியும் அதன் பிரயோசனத்தையும் அனுபவிக்காமல் அழியும் வண்டுக்கு ஒப்பாவானென்று வேதங்களில் முறையிடப்பட்டிருக்கிறது. ஆகவே அந்த வண்டினுக்கும் நேராகாத மற்ற எவ்வகைக்கும் பிரயோசனமில்லா துரும்பிலுங் கடையேன் யான். இவனிடத்தில் உன்னுடைய திருவிளையாட்டைக் காட்டினால் என்ன ஆகும்.

சிறப்போங்கிய உன்னுடைய குணமறிந்தவர்கள் அனந்தம் உண்டு. அவர்களல்லோ உனக்குத் தித்திக்கும் வெல்லக்கட்டி யாவார்கள். அறிவுக்கு ஏக்கமுற்றிருக்கும் சிறியேனிடத்தில் இந்தக் குறும்பு செய்து பார்ப்பதா அழகு? ஆஹா நன்றாயிருக்கிறது.

## பாட்டு

முற்று மறிந்தவர்க்குத் தெரியுமுன் கோரம்
முகமறிந் தெடுத்து சாற்றுவா ருபசாரம்
சற்று மறிவிலேனென் செய்வேன் சிங்காரம்
தாங்கொணா சோதனை செய்வதிலென்ன சாரம்? (செகதீசா)

## தேவாரம்

பரவுவார் இமையோர்கள் பாடுவன நால்வேதம்
குரவுவார் கழல்மடவார் கூறுடையா ளொருபாகம்
விரவுவார் மெய்யன்பின் அடியார்கள் மேன்மேலுன்
அரவுவார் கழலிணைகள் காண்பாரோ அறியாரே.

என்று உரைத்த திருவாசகத்தாரருள் வாக்கியப்படி எல்லாமுணர்ந்த ஜீவன் முத்தர்களுக்கல்லவோ உனது கோபந் தெரியும். தெரிந்து அதற்கேற்ற தேவாரங்களையும் தாண்டகங்களையும் கழுத்து நிறைய சூடி ஆடி நாடி பாடி ஆனந்தமடைவார்கள். லேசமும் அறிவில்லாத சிறியேன் உனக்குச் செய்யுஞ் சிங்காரமென்ன யிருக்கிறது. அந்தகார கோட்டைக்குள் நுழைந்த உனது திருச்சமுக வழியறியாமல் தவிக்கும் அடியேனிடம் சோதனை செய்வதினாலே என்ன பிரயோசனமாகும்?

## பாட்டு

ஆருக்குச் செய்தேன் செய்யாப்பொருள் பாவம்
அண்ணலே உனக்கே னடங்காத கோபம்
ஊருக் கெல்லா மிஷ்டமித்திர தீபம்
ஒன்று மறிந்திலேன் பாரெந்தன் பரிதாபம் (செகதீசா)

## உரை

ஹே வகுனவனேசா! நித்திய காலமும் வந்து கொண்டிருந்த உன் அடியார்களில் யெவருக்கு என்ன செய்யப்படாத பழியைச் செய்தேன்? ஓ முதல்வனே! அதனாலே உனக்கு அடங்காத கோபம்

வந்தது. யானோ உலகினருக்கெல்லாம் சத்துருவாகாமல் மித்திரனாக யிருந்தே னென்பது சர்வ சாட்யியா யிருக்கின்ற உனக்குத் தெரியாதா? ஒன்று மறியாத சிறியேன் படும் பரிதாபத்தை உம் கண்ணால் பாரும்.

அந்தோ யிதுவென்ன கலாச்சாரம்! மனம் போன போக்கெல்லாம் உளறுகிறேனே. செய் தீவினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால் எய்தல் வருமோ என்றபடி எனக்கு வந்த வினையொரு பாகத்திலிருக்கக் கடவுளை நினைந்து வருத்தப்படுவதினால் என்ன பயன்? அவ்வினை எவ்வாறு வந்ததெனில்

## பாட்டு

படித்து படித்துபல பகர்ந்தேனே கிட்டி
பாழுக்கி றைத்தஜலம் எனக்கொண்டாள் மட்டி
துடித்து வந்தவர்க்கென்ன செய்தாளோ அட்டி
துளிர்க்கசெய் தருமத்தில் வந்ததே அட்டி (செகதீசா)

## உரை

ஆஹா, நான் இம்மனையை விட்டு வெளியே போகும்போது மேலும் மேலும் எடுத்துரைத்து வந்தவர்களுக்கு யாதுந் தாட்சியின்றித் தக்க உபசாரத்தைச் செய்து உபசரிப்பாயென்று சொல்லிய வாக்கியத்தை வெறுவெளியில் இறைத்துவிட்ட சலத்தைப்போல் நழுகவிட்டவள் எனக்கு வந்தவளாகிய மட்டியேயாகும். ஆஹா, கிரகத்தை நாடி வந்தவர்களுக்கு என்ன செய்துயிருப்பாளோ? அந்தக் குறையினால் வளம்பெற நடத்திவந்த தர்மத்திற்கு குறைவு வந்ததோ? இதுவென்ன ஆகாத காலம்.

## பாட்டு

என்றுங் கணவன் சொல்தடாதவன் வாக்கியம்
ஏற்ப வளிகபர மிரண்டுக்கும் யோக்கியம்
நன்றுடன் நீதறிந்த வளல்லோ பாக்கியம்
லட்சுமி யெனபெயரெடுத் தென்னசி லாக்கியம். (113) (செகதீசா)

## உரை

ஹே பிர்ம்ம பூரீசா! இக தர்மத்திலே புருஷனுக்கு மனைவி கிடைத்தால் எப்படி யிருக்க வேண்டும்? அவ்விருவர் ஆயுளுள்ள

வரையில் பதியின் வாக்கியத்திற்குப் பதிலில்லாமல் அவன் வாக்கியத்தைச் சிரமேற்கொண்டு அவ்வாறு நடப்பவளே இகத்துக்கும் பரத்துக்கும் யோக்கியமாவாள். அல்லாமலும் புருஷனுக்கு வரும் நலந்தீங்கை அறிந்து நடப்பவளே லட்சுமியென அழைக்கத் தக்கவள். வீணே சென்மமெடுத்தவர்களுக்கு தனலட்சுமி, தைரியலட்சுமி, வீரலட்சுமி, ஜயலட்சுமி, சந்தானலட்சுமி, சௌந்தர்யலட்சுமி, ராஜலட்சுமி, சம்போகலட்சுமி, அனந்தலட்சுமி, ஆனந்தலட்சுமி, மகாலட்சுமி, பாக்கியம், ஸௌபாக்கியம், தன்பாக்கியம், ராஜபாக்கியம் இப்படி யெல்லாம் பெயரிட்டு அழைப்பது எதற்காக? அவரவர் பேராசையைப் பொறுத்தா? அழகைப் பொறுத்தா? அல்லது நல்லொழுக்கத்தைப் பொறுத்தா? எதற்காகப் பெயரிட்டழைப்பதோ தெரியவில்லையே?

## முன்பாக்கி விருத்தம்

சித்தமுங் குளிர்ந்ததோடித் செம்மையா யிருப்பாயல்லோ. (112)

## உரை

அடியே! இனி உனது மனக்குறை யெல்லாந் தீர்ந்து விட்டதல்லவா.

## உரை

**நங்கை :**

சுவாமி! அடியாள் என்ன குற்றத்தைச் செய்தேனென்று இப்படியெல்லாம் விசனமடைகின்றது.

## விருத்தம்

**நாயனார்:**

114. மேலதாந் தலங்க ளெல்லாம் வெய்யிலால் கல்லு முள்ளால்
காலெலாம் நொந்தி ளைத்துக் கண்பூத்துக் காத டைத்துச்
சீலமாம் பரத்தை காணாத் தீயனாய் வந்தேன் வந்தும்
ஞாலமீ தில்ல தர்ம ஞாயமே மறந்து முன்னாய். (114)

## பாட்டு

(ஆரடி உன் ஊர்பேர் என்ற மெட்டு)

இராகம் : காம்போதி

115. சாட்டுதல் என்னென்னோ சொல்குறாய் வெகுதந்திர
இந்திர ஜால மந்திரம் படித்தவன்போல்
கேட்டதே ததற்கு பதில்நாட்டுவாய் வீணே விற்பன
நீட்டமும் ஆட்டமேன் தவவாட்ட மறிந்துங் கற்பனை (சாட்டு)

## உரை

சீ பேதாய்! என்ன வசனிக்கின்றாய். மணாளனுக்கு வந்த சுக, துக்கங்களை அறியாது சர்வாங்கமும் அனுபவங் கொண்டவளா நீ. ஹே அறிவில்லாத பேதாய்! உன்னை எப்படி மதித்தேன்?

## பாட்டு

தேவியன்று அன்னைஉடல் ஆவியாய்ச் சிந்தித்தேன் உன்னைப்
பாவிநீ மறந்து பட்சபாதகம் பண்ணினாய் என்னைக்
கூவிநற் குலத்துக்கொரு கோடரிக் காம்பானாய் பின்னை
தாவி சாதகம் பண்ணுஞ் சாமார்த்தியக்காரி முன்னை (சாட்டு)

## உரை

அடியே! என் குடும்பத்திற்குப் பட்ட பூதேவி யென்றும், என் உயிர்க்காதலி என்றும் உன்னை நானும் நம்பி இருந்தேன். நீ அதை வைத்து நிர்வகிக்காமல் குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பு போல் இருந்து, இப்போ எனக்கு முன்னே ஜால தந்திர வார்த்தைகளை உபாயமாய்ப் பேச வந்தனை. சபாஷ் உன் பேச்சு வெகு சட்டத்திட்டமாய் இருக்கிறது.

## பாட்டு

இத்தனை நாளுஞ்செய்த மெய்த்தவத்தி லன்னதானஞ்
சித்தத்தில் வருத்தமுண்டோ செப்பிடுவாய் பூத்தானம்
மெத்தவே படித்தறிந்த முத்தர்களைப் போலஞானங்
கத்தவித்தை யோதவந்த காதகியில்லை நிதானம் (சாட்டு)

### உரை

ஏண்டி! இவ்வளவு நாளுஞ் செய்துவந்த மெய்மையான அன்னதான தருமத்தில் உன் மனதில் வீணான காரியத்தில் நஷ்டப்படுத்துகிறேனா, உள்ளவரையுந் தின்று மீதியிருக்க நாம் அனுபவிக்கக் கூடாதா என்று உன் மனதில் வருத்தம் உண்டோ? அல்லது இவ்வளவு நாளாய் செய்து வந்த தர்மத்தில் நம்மைப் போலும் இடுவாரும் உண்டோ? என பூத்தானமும் உண்டாயிருக்கக் கூடுமோ? இருக்கலாம். மிக்க படித்தறிந்த விவேகிகளைப் போல் கற்பனையாக எனக்கு உபாயதந்திரம் பேச வந்த மோசக்காரி, மெய்யான மார்க்கத்தில் எள்ளத்தனை நிதானம் இருக்கிறதா? சபாஷ்.

### பாட்டு

தையலே உன்னை மடத்தில் மெய்யாக வைத்துபோகப்
பைய வைத்திருந்தா யோடி யென்றலைக்குக் கொள்ளியே
செய்யுந் தொழிற்காரி யென்றறியேன் பச்சை நாவியாகச்
சீச்சீ போப்போ எதிரில் நிற்காதே என்மனம் நோக (சாட்டு)

### உரை

ஹே துஷ்டி! ஆதி மத்யாந்தமும் மிக்க அனுபவமுள்ள நீ என் மனதுக்குப் பேதமாய் நடக்கமாட்டாய் என உண்மையாக நம்பி ஆச்சரமத்தில் வைத்துப் போனேன். தலைமாட்டுக்குக் கொள்ளி வைத்துப் கொளுத்த வேணுமென்று மறைவாக வைத்து யிருக்கும் வேலைக்காரி யென்று எண்ணாமல் போனேன். நினைக்குங்கால் உன்னைப்பார்க்க என் மனம் அச்சப்படுகின்றது. உண்மையாய் என்னைக் கொல்லும் பச்சைநாவி நீயே யானாய்.

**நங்கை :**

சுவாமி! இதுகாலம் தங்களுக்கு மெய்மையுள்ளவளாயிருந்து இன்றுதானா தலைமாட்டுக்குக் கொள்ளியும் கொல்லும் பச்சைநாவியும் ஆனேன். இது என்ன பேதமோ தெரியவில்லையே.

### பாட்டு

**நாயனார் :**

சீச்சீபோ போ என் எதிரில் நிற்காதே
வஞ்சகம் பொய்வாது சூதுவங்கைகொள் பரநாரியோ

சஞ்சலங் கொலைகளவு காமுறும் விபசாரியோ
மிஞ்சிடும் பொறாமைக்கொரு பெட்டிசாவி காரியோ
நஞ்சளித்துக் கொல்ல எனக்கு உபகாரியோ. (115) (சாட்டு)

(சபாஷ் ஹே மட்டி உலகின்கண் தாசியர்களுடைய அனுபவம் எப்படி எனில்)

## வெண்பா

116. அஞ்சாக் கொலையும் ஆங்களவும் பொய்யுரையும்
வஞ்சம் பொறாமை வயவசியம் பொன்றாசி
நோக்கு மதுவாக்கும் நூலோ ருரைத்தவகந்
தேக்குந் திகழ்ந்த பெட்டி. (116)

என்று அறிஞர்களால் சொல்லப்பட்ட அழகிய தாசிகள் இதயமானது அஞ்சாத கொலை களவு பொய்யுரை வஞ்சம் பொறாமை இவ்வைந்தையும், வலிமை பெற்ற வசியஞ்செய்யும் பார்வையும் மதுரமாகிய வாக்கையும் அமைத்து வைத்து இருக்கும் விளக்கமான பெட்டியாகும். என்றும் இன்றும் உலகில் வேசியர்கள் குணானுபவம் எப்படி எனில்

## வெண்பா

117. ஜாதி வரம்பற்று தம்மின் குணமற்று
சூது கொலைகளவுந் தூக்கிமத - மேதியென
கள்ளே தினமலை காலம்பொய் வேசியற்கு
உள்ளத் திறக்குங்கோல் ஒப்பு. (117)

### உரை

பூர்வ ஜாதி மாணமிழந்து, பெண்பாலுக்குரிய நாணம் அச்சம் மடம் பயிர்ப்பு இந் நான்கையுமிழந்து, தினகாலம் மதங்கொண்ட எருமைக்கு ஒப்பாக அலையச் செய்யும் வஞ்சகம் கொலை களவு பொய் கள்ளு அவைகளே தள்ளாமல் வேசியர் மனப் பெட்டியைத் திறக்குஞ் சாவியாகும் என்று எனது சத்குரு மூர்த்தியாகிய அறிவானந்த சுவாமிகளின் வாக்கியப்படி நீ யென்ன தாசியா வேசியா வெள்ளாட்டியா. உன் இதயமும் யிப்படி யானதே! ஆஹா இனி பிறர்பால் ஒன்றுந் தேட வேண்டியதில்லை. காட்டயம் விஷத்தை ஊட்டி கொல்லும் பழிகாரி நீயே யாம். எனக்கு உபகாரி நீயல்ல. போ போ பயித்தியக்காரி.

## விருத்தம்

**நங்கை :**

118. ஐயோ யீதென்ன பாவம் அண்ணலே கணப தீசா
தையல் நின்னடி யாருக்குத் தவறியே தேனுங் குற்றம்
பையவே செய்த துண்டோ பதிமொழி தவறி னேனோ
வையகம் நகைக்க வாது வழக்காடி நிற்கின் றாரே. (118)

## பாட்டு

(பண்டித மோதிலால் நேரை என்ற மெட்டு)

119. இப்படிக்கி வருமின்றிந்நாள் எண்ணிலேன் பாவி
எண்ணிலேன் பாவிகுறை பண்ணிலேன் மேவி (இப்ப)

தப்பிதங்கள் சொல்லி தர்மதாதா தன்மனம் மெலிந்து
துப்புரபரமன் பார்க்குஞ் சோதனை யாலே
சோதனையாலே அந்த வாதனை யாலே (இப்ப)

உடலுமுயிர் போலவும் பாலுநீர் போலவும்
உயரெள்ளு நெய்போலவும் அடல்கன்னல் ரஜமென
இருந்திட்ட பாவிஎனை அந்தகன் அன்னக்கொடி
உடையிரும் பாலையென பிரித்துக் கசந்து
மெய்உள்ளன்பு மில்லாமலே விடைத்து வெஞ்சினமேறி
வேசி போதாசிபோ வெள்ளாட்டிபோ வென்கிறார்
இதுவுமென் சென்ம வினையாலே யிசைந்ததுவோ
விதிவழி காலபலன் மேலடைந் ததுவோ (இப்ப)

மேலடைந் ததுவோ ருதுகோள் விளைந்ததுவோ
கணிதமுறையே ருதுகால சக்கரம் ஓரை கண்டசரம்
உபையராசி அணைகோளு மொன்று பைம்நான்
கைந்து மேழொன் பதாம்பத்து பதின்னொன்றிலே
துணைமாறிப் பாவிகள் பகைநீச வக்கிரத்த
துடியேறி அவமிருத்து சனிவெள்ளி சேயாதி
வாரமும மாவாசை தான்சேர்ந்த விடகாலமோ
எதுவோ அலாதுமறை இகழ்காலமோ யினமும்
பொதுவாம் உலகவசை புகலவும் நாளோ
புகலவும் நாளோ சுரர் இகழவும் நாளோ. (119) (இப்ப)

## விருத்தம்

**நாயனார்:**

120. சண்டாளி பாவி நீதான் சதிசெய் வதறியே னோரில்
கண்டதா பதரை விட்டு கர்த்தனே சிவனே என்று
அண்டொனா கண்ணீர் கொட்டி அருஞ்சாலக் காரி எற்கு
பெண்டல்ல பிணக்கா டாளும் பிசாசியாய் வந்த துரோகி. (120)

## உரை

ஆஹா சபாஷ் ஏண்டி, இங்கே வா. இது என்ன கோலம்? இப்பொது நீ செய்தது என்ன? மிக்க நன்றாயிருக்கிறது.

## பாட்டு

இராகம்: ஆனந்த பைரவி

121. ஆரடி உனக்கு யிந்த அறிவைப் - போதித்து
வைத்த தறிய சொல்லடி நீலி
காரடி பெண்ணீதி நூலைப் பாரடி - மிஞ்சவுங்
கற்றாய்ச் சீரடி யாருந்து திக்கும்
பேரடி வஞ்சக முற்றும். (ஆரடி)

## உரை

அடியே இந்த யோசனை உனக்குச் சொல்லிக் கொடுத்தது யார்? நீலிக்கு நினமையில் தண்ணி என்பது போல கண்ணில் தண்ணீர் வர அழ வேண்டியது என்ன? இதோ இங்கு என்னைப் பார். எந்த சாதியிலும் முதன்மையான அந்தண குலத்தில் அவதரித்த நீ மிக்க படித்தவளாகும். ஆகையால் மாதர் நீதி என்னுங் கற்புநூலைப் படித்தவள்தானே? (ஆம் படித்தவள்தான்). அதில் என்ன சொல்லியிருக்கிறது. சொல்லு. உத்தம ஸ்திரிகள் நிலமை என்ன? அவள் தினகாலஞ் செய்ய வேண்டியது என்ன? அவள் யார் ஆதரவிலிருக்க வேண்டியது? யாருடைய சொல்லை எதிர்பார்க்க வேண்டியது? எதைக் காக்க வேண்டியது? யாதைத் தொழ வேண்டியது? இதெல்லாம் நீ தெரிந்தவள்தானே! (ஆம் நாதா. மாதர் நீதி யென்னுங் கற்புநூலைப் படித்தவள்தான்). அதில் என்ன தெரிவிக்கின்றது?

**நங்கை :**

தெய்வந் தொழாள் கொழுநனைத் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை என்றும், கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை, காவல் தானே பாவையர்க்கழகு, செய் தவமறந்தால் கை தவமாளும், துடியாப் பெண்டீர் மடியின் நெருப்பு, தூற்றும் பெண்டீர் கூற்றெனத் தகும், நல்லிணக்கமல்லது அல்லற்படுத்தும், நேராநோன்பு சீராகாது என்றும், இல்லாளகத்திருக்க இல்லாததொன்றில்லை, இல்லாளும் யில்லானே யாமாயின் நில்லாள் வலிகிடந்த மாற்றம் உரைக்குமே, அவ்வில்லம் புலி கிடந்த தூராய் விடும் என்றும் பிராட்டியாராலும் நாயனாராலும் போதிக்கப்பட்டிருக்கிறது.

**நாயனார்:**

இதை அறிந்த உனக்கு இந்த நினைப்பு வரலாமா? இப்படி வரலாமா? இப்படி அழலாமா?

**நங்கை :**

சுவாமி! எனக்கு ஒருவர் சொல்லிக் கொடுப்பாருமில்லை. அதைக் கோட்கப்பட்டவளுமில்லை. பல நூல்களைப் படிக்காதவளுமில்லை. தாழ்ந்த குலத்தாளுமில்லை. என்னவோ மனம் தற்காலம் பேதப்பட்டு அலைகிறது.

**நாயனார் :**

முன்னும் பின்னும் அறியா கன்னியோ
உனக்கிந்த மூடப்புத்தி வந்ததென்ன வேடஜென்மமோ
அன்னவட்கும் தன்னறிவை ஆண்டவன் அமைத்திருப்பான்
என்னவோ உன்னைப்போலானால் யாவனோ பொறுத்திருப்பான்
(ஆரடி)

## உரை

மனம் பேதித்தலைகுற தென்குறாயே. இருவினைப் பயனறியப் படாத மிக்க இளமைப்பெண்ணா நீ? விளக்கமாகிய அறிவு பேதப்படுவதற்குக் காட்டில் வசிக்குங் கிறாதகச்சியா நீ? அவ்வேடு வச்சியாளுக்கும் அவள் குடும்பத்திற்கேற்ற சாதி சமய புத்தியை பிர்மாவால் கொடுக்கப்பட்டிருக்குமே? என்ன ஆச்சரியம் பார். இப்படி உன்னைப் போலானால் எவன்தான் வைத்து குடும்பம் பண்ணுவான்?

**நங்கை :**

சுவாமி இளமை பெண்ணும் நானல்ல. வேடுவச்சியும் நானல்ல. நான் ப்ராமணத்திதான். இதுவரையில் தங்களுக்கு விரோதமாகவும் குடும்பநிலை யறியாமலும் நடந்தவளல்லவென்று சுவாமிகளுக்குத் தெரியாதா?

பாட்டு

**நாயனார் :**

வந்தவரைப் போகச்சொல்லி அந்தகனா என்முன்நின்று
வாசமுள்ள ஆசைவார்த்தை பேசவந்தவள்
எந்தவிதமும் அவரை சிந்தைநோகப் பேசியிருப்பாய்
அவ்விதம் இல்லாவிட்டால் அட்சதை அணிந்திருப்பாய்
(ஆரடி)

குடிகேடீ! குருடரைப் போல எனக்கு முன்நின்று நயவஞ்சகப் பேச்சு பேசுவதனால் பயனென்ன? வந்த பெரியவரைப் போகச் சொன்னவள் நீதானே!

**நங்கை :**

சுவாமி நான்தான் போகச் சொன்னேன்.

**நாயனார் :**

உன் தவத்துக்கு விரோதமாக ஏன் போகச் சொன்னாய்?

**நங்கை :**

சுவாமி அவர் விரதபாங்கை எடுத்துக்கூறியும், தங்களைக் காணாமல் போகமாட்டேனென்றும், தாங்கள் வருமட்டும் வனத்தில் ஆத்தியடியில் இருப்பதாகவும் உண்மையாகச் செப்பியதால் போகச் சொன்னேன். என் தவத்தில் நான் குறைதேடிக் கொள்ளவில்லை.

**நாயனார் :**

அடியே! அப்படி அல்ல. எவ்விதத்தாலோ அவர் மனதுக்கு திருப்தியில்லாத மரியாதைக்குறைவாய்ப் பேசியிருக்கலாம். அதனால் சென்றிருக்கக்கூடும் என்று நினைக்கின்றேன்.

**நங்கை :**

நாதா! அவ்வாறு அவருக்குச் சம்மதமில்லாத மரியாதை குறைவாய் பேசியிருப்பேனென்று எப்படி பட்டது?

**நாயனார் :**

அவ்வாறு இல்லாவிடில் அவரால் ஆசீர்வதிக்கப்பட்டு அட்சதைக் கொடுக்கப்படுமே. அந்த அடையாளம் இருக்கிறதா? கொடுத்தாரா? எங்கே கொடு பார்க்கலாம்.

**நங்கை :**

சுவாமி! தாங்கள் சொல்லுவது வாஸ்துவமே. அவரால் ஆசிர்வதிக்கப் பெற்றேனேயொழிய அட்சதை கொடுக்கப்படவில்லை. கொடாததை அடியாளுங் கவனிக்கவில்லை. உண்மை.

**பாட்டு**

**நாயனார் :**

கொண்டவன் மொழியிகல்செய் முண்டமே எனக்குநீல
கண்டனாரும் உன்னையும் படைத்திருந் தாரோ
பண்டுசெய் வினைப்பயனோ லண்டியே உனையடுக்க
உண்டுசெய் தெனையளித்தா னாயினுங் குடிகெடுக்க (ஆரடி)

**உரை**

ஹே பேதாய்! அப்படியிருக்க புருஷன் சொல்லுக்குப் பேதமாய் நடந்தவளென்று ஏன் சொல்லப்படாது? ஏண்டி, அறிவாகிய தலையில்லாத முண்டமே! எனக்காக வென்று உன் தகப்பனாகிய நீலகண்டதேசிகர் அரிய தவஞ்செய்து உன்னைப் பெற்று வளர்த்து வைத்திருந்ததும் ஆச்சரியமே. அவர்பாலுங் குற்றமில்லை. நான் முன்செய்த வினைப்பயனே எனக்குப் பெண்டாக வந்து அவதரித்திருந்தாய் போலும்! அடி லண்டியே, நான்முகனால் என்னைப் படைத்து உன்பால் கொடுத்தானென்றாலும் இப்படி குடிகெடுக்கும் புத்தி கூடாது. உன்னைப் போலும் உலகில் பெண்களிருக்க மாட்டார்கள்.

**நங்கை :**

சுவாமி! இப்படி யெல்லாம் இல்லாத மொழிகளைச் சொல்லி அடியாள் மனதைப் புண்ணாக்குவது தர்மமாகுமா.

**பாட்டு**

**நாயனார் :**

பின்பயிருக் கண்டையிட்டு தர்மநீரிறைக்கப் போனேன்
முன்பயி ரழிக்கவந்த மிருக ஜென்மமே
தர்மமும் அதர்மமாச்சு உன்மனஞ் சந்தோஷமாச்சு
என்மனங் கலங்கலாச்சு உன்மனங் கருங்கல்லாச்சு. (121) (ஆரடி)

**உரை**

அடி அறிவுகெட்டவளே! நாம் இந்த மனித ஜென்மத்தைப் பெற்றோம்; பகுத்தறிவை அடைந்தோம். இந்த ஜென்மத்திலேயே நாம் அடைய வேண்டிய மோட்ச சாதனத்துக்கு யேதுவாக வேண்டுமே என்று வைராக்கியமான கொல்லையில் காப்பாகிய அணைகட்டி, அறிவாகிய விதையைத் தெளித்து, தர்மமாகிய நீரைப் பாய்ச்சி, நிதானமாகிய வேலிகட்டி வெகுதந்திரமாய்ப் பயிரேற பார்த்திருந்தேன். அப்பயிருக்கு அழிவுவராமல் ஈடுபட்டு வரவேண்டு மென்று பெருத்த கலியடைந்தவனாய் ஒரு துணைக்காவலனைத் தேடி வரப்போனேன். அதற்குள் வஞ்சமாகிய மிருகத்தை ஆசையாகிய பசாசு பிடித்துக் கரைதுறையில்லாமல் உள்நுழைந்து பயிரை அழித்ததுபோல அழித்த மிருகஜென்மம் நீயே யல்லாமல் வேறல்ல. அதனால் அப்போது எனக்கு என்னவாயிற்று. கவனித்துப் பார் எத்துக்கள்ளி.

**விருத்தம்**

**நங்கை :**

122. கள்ளியான் பாவி சொன்ன கருத்தெலாம் வீணாய்ப் போச்சே
துள்ளியே தேனுங் குற்றம் தோகையான் செய்தி ருந்தால்
கொள்ளிவாய் பேயு மாவேன் கொடியபாத கத்திற் சேர்வேன்
புள்ளிமா னேந்துங் கையன் புராந்த ரனறியத் தானே. (122)

### உரை

சுவாமி! எத்துக்கள்ளியாகிய கொடியாள் உண்மை யின்னதென பலவாறு சொல்லியும் தங்களுக்கு நிச்சயப்படவில்லை. அப்படியேதேனும் பெரியவருக்கு ஞாயந் தவறிக் குற்றத்தைச் செய்திருந்தேனானால் கொள்ளிவாய் பைசாசாக ஆவதோடுங் கொடிய நரகத்தையும் சேர்வேன். இதற்கு மானேந்திய கரத்தையுடைய புராந்தகன் சாட்சி. சுவாமி, தாமதமில்லாமல் பெரியோரைப் போய் பார்த்தும் அவரைக் காணாவிடில் பின்பு அடியாளுக்கு என்ன குற்றத்தை விதிக்கிறதோ அதற்குப் பாத்தியப்படுகிறேன். என்னைக் கேட்ட சங்கதிகள் யாவும் சந்தனத்தாளை விசாரித்து பார்க்கட்டும். உண்மை விளங்கும்.

### பாட்டு

(சிவவாக்கியர் வர்ணம்)

**நாயனார்:**

123. சந்திநா னகன்றபின்னர் சத்திரத்தில் வந்தார்
வந்தவர்க்குச் செய்ததென் வகுத்தரைப்பாய் வள்ளல்நேர். (123)

### உரை

சேதனா! இப்படி வா. சத்திரத்தைவிட்டு நான் வெளியே போன பிறகு இங்கு நடந்த விசேஷமென்ன? யார் வந்தது? வந்தவர்க்கு நீங்கள் செய்தது என்ன? அதை விபரமாக என் முன் தெரிவிப்பாய்.

### பாட்டு

(என்னை மணம்புரிந்து என்ற மெட்டு)

**சந்தனம் :**

124. வள்ளல் புறத்தடைந்த பின்னால் ஓர்மகானும்
வரக்கண்டடைந்த வென்னால் மாபதம் போற்றி
ஆபதஞ் சாற்றி மார்க்கம்பல புகன்றேனானே
சொல்ஏற்கக் காணா தவத்தி னோனே. (124)

### உரை

தர்மாதிபதி! தாங்கள் வெளியே போன பிறகு சற்றுநேரத்திற் கெல்லாம் ஒரு பெரியவர் இங்கு வந்தார். வரக்கண்டு நான் அருகில்

சென்று திருவடியை வந்தித்து நமக்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்தைச் சொல்லியும் பலவழியும் பிரார்த்தித்து கேட்டுக்கொண்டேன். அவர் என்றுங் காணாத தவசியானதால் அடியாள் சொல்லை யேற்கவில்லை.

## பாட்டு

**நாயனார் :**

125. காணுறுந் தவத்தினார் கழல்பணிந்த ஆவிவலி
வீணுரைகொளேல் பிழைப்பு வீணதாகும் ஏவலி. (125)

**சந்தனம் :**

126. ஏவல் சிலதி யாருங் கூடி
முன்காவலர்கள் பலரும் நாடி
ஏற்றினார் மேலும் போற்றி
பல்காலும் இகமெழுந் தெம்பணிகள் தாங்கிப்
பிச்சை ஏற்பீரெனப் பணிந்தேன் பாங்கி. (126)

## உரை

தயாநிதி இதைக் கண்ட சமையற்கூடத்துள்ளவரும் மற்றும் அடுமையர்களும் முன்வார்க்குஞ் சேவகர்களும் கூடி வந்து சுவாமிகளைப் பலவாறு துதித்து வணங்கி வேண்டிக்கொண்டார்கள். பாங்கியாகிய அடியாள் மனைக்குள் எழுந்தருளி ஏழைகள் திருப்பணியையேற்று பிச்சையேற்றுக் கொள்ளவேணு மென்று பணிந்தேன்.

**நாயனார் :**

127. பணிந்த சொல்லறிந்தவர் பகர்ந்ததென்ன ஒப்பவாய்
துணிந்த சாந்தருன் பணிசுகித்த வாறுஞ்செப்புவாய்
செப்ப ஒப்பாமல் புனித நீற்றார்
தர்மசீமான் எங்கே எனவுங் கேட்டார்
திறம்பல புகன்றேன் புறம்போன தெங்கென்றேன். (127)

## உரை

செல்வி! நீ யார் உரைப்பாய் என்றார். அறத்தேவியாட்கு நான் பணிப்பெண்ணென்றேன். நீதிபதி! நான் சொல்வதெல்லாம்

அங்கிகரிக்காமல் தர்மசீமான் எங்கே என்றார். அதற்குற்ற காரணங்களைச் சொல்லிச் சாதுக்களைத் தேடி வெளியே போயிருக் கிறார் என்றேன். லட்சமி நீ யார் சொல்லென்றார். தர்ம வர்த்தினியாருக்கு யான் பணிப்பெண் என்று உரைத்தேன்.

**நாயனார் :**

128. பெண்குணப் புரட்டொ ழித்து
 பேத மின்றிச் செம்மையாய்
உண்மையைச் சொல் அச்சமேன்
 உணர்வில் சுத்த அம்மைநீ. (128)

## உரை

அப்படியா! பெண் சென்மமடைந்தவர்களுக்கு நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு என்ற இந்த நால்வகை பேத நினைவும் பிறவியிலேயே யேற்பட்டதாகும். ஆனால் சமயத்துக்கேற்ற மடமையும் மடமையில் அச்சமும் அச்சத்தில் நாணமும் உண்டாகும் அனுபவமுண்டு. அதனால் ஆசையும் ஆசையால் வஞ்சமும் வஞ்சத்தால் பொய்யையும் சொல்லப்படும். அந்தப் புரட்டுவார்த்தைகளுக்குப் பேதமொழியும் அச்சமும் வேண்டியதில்லை. உண்மையைச் சொல் அறிவில் சிறந்த அம்மையே!

## பாட்டு

**சந்தனம் :**

129. அம்மை யாரும் எங்குளார் சொல்லென்றார்
 அவர் அந்தப்புரந் தன்னிலுள்ளா ரென்றேன்
 அனிச்சமா யேகன் தனிமையில் போகேன்
 ஆசரில் லாமற் புறஞ்சென் றார்மனை
 ஆளனில் லாம லுண்ணே னென்றார். (129)

## உரை

வேதபதி! அந்தத் தர்மவர்த்தினியார் எங்கே என்றார். அந்தப்புரத்தில் இருப்பதாகப் புகன்றேன். அதற்கு ஆ அருந்த இச்சையில்லாயிடம்; நான் அசங்கன்; பெண்கள் தனிமையான யிடம் செல்லும் பழக்கமில்லை; நான் இச்சித்து வந்த கொடையாளி நேராகாமல் உள்ளே வரவும் மாட்டேன்; உண்ணவும் மாட்டேன் என்றார்.

## பாட்டு

**நாயனார் :**

130. உண்ண இசைந்திலார்க் குபாயமென்ன பெற்றனை
எண்ண ருந்தவத்தில் நீயெடுத்த நோன்புபற்றினை. (130)

**சந்தனம் :**

131. பத்தினிக் குடனுரைத்தேன் கேட்டாள் - அவர்
பதத்து கடையசரண் போட்டாள்
பவக்குறை யாற -- தவம்நிறை வேற. (131)

## உரை

பாரந் திருவடிக்கே என்றாள். நல்ல பாக்கியம் மெய்யென்றும் ஒப்பி நின்றாள். குணநிதி! உடனே அந்தப்புரத்தில் பத்தினியாள் காதில் சுவாமி சங்கதியை உரைத்தேன். அவர் அக்கணமே திருவடிக்கடையமென வந்தித்து எங்கள் ஜென்மப்பிணி நீங்கவும் செய்யுந் தர்மம் பூரணமாகவும் உள்ள சுமை திருவடிக்கே யல்லாது மற்றும் ஒன்றுமில்லை என்று சாதித்து நின்றாள். அதைக் கண்ட மகான் சந்தோஷம், அது உண்மையென்று ஒப்பினார்.

## பாட்டு

**நாயனார் :**

132. ஒப்பிலார்பின் ஒப்பினாரும் உண்டிலாதது மோசமே
செப்பவொண்ணாப் பெருமைபெற்ற அண்ணலெந்த தேசமே. (132)

## பாட்டு

**சந்தனம் :**

133. வடதேசம் அறிவா னந்தம் என்றார்
கொடைவள்ளலைக் காண என்னாசை யென்றார்
மலியாடை ஒன்றே பலியோடும் ஒன்றே
வரவுங் கண்டு பின்போறே னென்றார்
அன்னம் வயிறாறவும் பின்னுண்பே னென்றார். (133)

## உரை

தனபதி! நான் வசிப்பது வட தேசம். என் பெயர் பிச்சாந்தி

அறிவானந்தம் என்றும், (அவரை) தர்ம சீமோனைக் காண இச்சை கொண்டு வந்தேனென்றும் அவரை வரக் கண்டு பின்பு போறேனென்றும் உரைத்தார். அவரின் அடையாளம் ஒரே காவி வஸ்திரமும் கையில் ஒரு பிச்சையேற்கும் ஓடும் உடையவர். நீங்கள் வேண்டியபடி பின்பு அருந்திச் செல்கிறேனென்றார்.

### பாட்டு

**நாயனார் :**

134. பின்னருந்த சம்மதித்தும் பிறழ்த லேனோ பேணவும்
சின்னமாக வறிவா னந்தர் செல்லி டஞ்சொல் காணவும். (134)

**சந்தனம் :**

135. அண்டை கணேச வனமென்றார் - அதில்
ஆத்தியடி கண்ணமர்வே னென்றார்
அண்மையோய் நானே
உண்மைசொன் னேனே
அவணேவ லாரைக்கேட்டுப் பாரும் - சென்று
அறிஞரை அழைத்து அழுந்து வந்து சேரும். (135)

பிரபுவே! அடுத்த கீழ்பாகம் கணபதி வனத்தில் வசனித்த தடத்தில் அமர்ந்திருப்பதாகவுஞ் சொன்னார். அடியார் வசனித்த தெல்லாம் சத்தியமே. எங்கள் பேரில் தயைசெய்து சிரமத்தைக் கவனியாமல் சென்று அம்மெய்ஞ்ஞானியாரை அழைத்துவர பிரார்த்திக்கிறேன் ஆண்டவனே.

**நாயனார் :**

ஆஹா! அப்படியா சபாஷ். நீங்கள் இருவருஞ் சொல்லிய பெரியோர் சங்கதியைப் போய் பார்த்து வந்து பிறகு சொல்கிறேன்.

### விருத்தம்

**நாயனார் :**

136. ஐயமிட் டுண்ணா சென்மம் அபலமே அவன்கை செல்வம்
செய்ய பூண்பணி பிரேதஞ் சீராகுந் திங்கள் வெய்யோன்
மொய்ய வானுள்ள மட்டும் மோக்கமில் லென்றார் முன்னோர்
பையவே அதற்கி சைந்தேன் பாழாச்சு தென்ன செய்வேன். (136)

## உரை

ஹே சர்வேசா! உலகின்கண் அரிதாகிய மனித ஜென்மத்தைப் பெற்று பகுத்தறிவைத் தாங்கி இருக்கினும் பசித்தவருக்குப் பிச்சையிட்டு உண்ணாத ஜென்மம் மிக்க அவலமே. அவ்வாறு தரும சிந்தையில்லாத லோபி பல உபாயத்தினால் பொருளைத் தேடிப் பலியாத ஆசையுடன் தனக்குச் சிங்காரமாய்க் கெட்டிப்படுத்தி வைத்திருக்குந் திரவியமானதை உயிருடன் தக்க பருவ காலத்திலே பூட்டி அழகு பார்க்காமல் பெட்டியில் கெட்டிப்படுத்தி வைத்திருந்த பூஷணாதிகளைச் செத்த பிணத்துக்குச் சீர்பூட்டிவைத்து அழகு பார்ப்பது போலே ஆகுமென்றும், அந்தக் கடுமனதுடைய கருமிகளுக்குச் சந்திர சூரியர்களுள்ள மட்டும் நற்கெதி கிடையாதென்று வேத பாராயண சத்துக்களால் சொல்லக் கேட்ட பாவியாகிய யான் அதற்கு உடன்பட்டு இந்தத் தர்மத்தைச் செய்வதற்கு முயன்றேன். அத்தர்மமும் நேரே அதர்மமாச்சு. அது எதனாலெனில்

## பாட்டு

(இதர்க்கோடா மைந்தா உன்னை என்ற மெட்டு)

**நாயனார் :**

137. தெய்வமே யானரும்பாவி திகைக்க விட்டாளே கூவி
சென்ம வினையாக வந்துசெனித் திருந்தாளே தேவி
தேசிகா தேசிகா தேசிகா தேசிகா (தெய்வ)

ஆகா திருவுளமே! முன் சென்மாவில் நான் கொடிய பாவியாயிருந்து செய்த தீவினையே இந்த ஜென்மத்தில் பெண்ணாயவதரித்து எனக்குத் தேவியாகி இக்காலம் மனம் திகைத்துக் கூவியழும்படி செய்துவிட்டாளே. யானும் கொடுவினையாகிய பாரியை எனது அற்ப இச்சையால் உயிர்க்காதலி என நம்பி,

## பாட்டு

கைவளரும் பாம்பை விஷகாலனென்று எண்ணாமலே
காதலி என்றிருந்தேனே கருத்துரை பண்ணாமலே
காரணா காரணா காரணா காரணா (தெய்வ)

ஹே தயாநிதி! கையிலே வளரும் படியாகிய சர்ப்பத்திற்கு எவ்வளவு நாள் பாலைக் கொடுத்து வளர்த்தாலும் அது விஷத்தை

யல்லது அமுதத்தைத் தாராது. அதுவே பிராணனை வாங்கும் எமனென அறியாமல் அப்பிராணனுக்கு ஆனந்த பூஷணமெனவே நம்பியிருந்து கெட்டேனே. ஐயோ!

பாட்டு

ஆரையினி சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
ஆசை அடங்கவோடி ஆத்தியடி கண்டுய்வேன்
அண்ணலே அண்ணலே அண்ணலே அண்ணலே. (தெய்வ)

சர்வபூர்வமாக அவளுக்கு வேண்டிய சகல சுகானுபவங்களையுங் கொடுக்கப் பெற்று மகிழ்ந்து இருந்தவளே. இப்படி மோசஞ் செய்வாளானால் மற்றும் யார்தான் நமக்கு சதமாவார்கள்! எனது இரு நேத்திரம் போல காத்து வந்த மனையாட்டியே! இந்த வஞ்சத்தைச் செய்தாளானால் இனி அன்னியரைக் கால்பிடித்தால் எப்படி நமக்கு உதவுவார்கள். இதை எல்லாம் நிதானித்துப் பார்த்ததில் மேலான ஆசையொன்றில் வந்திருங்குங் களங்கமற ஆத்தியடியைக் காண இப்போது போகிறேன். போனாலும் எனக்கு ஏற்பட்டிருக்கும் அபாண்ட மோசத்தை நினைக்க நினைக்கச் சுபாபமில்லாமலே தடுமாறுகிறேதே.

பாட்டு

ஊரார் நகைக்கப் பலவுடம்பெடுத் தேனிப்பேராய்
உலகிலென்போலும் பாவி உண்டோகடைக் கண்பாராய்
யோகனே யோகனே யோகனே யோகனே (தெய்வ)

ஹே செகதீசா! அரிய அந்தண குலத்திலே அவதரித்து இந்தச் சென்மாவும் அரியவர்களாலும் பெரியவர்களாலும் துதிக்கத்தக்க நல்வழியிலிருக்கப்படாதா. உலகஞ் சிரிக்க வீணான பிறப்பாகிய இந்த உடம்பை யேன் பெற்றேன். பெற்றதற்கு உள்ள பிரயோசனத்தைக் காண்கிலேனே. ஓகோ இம்மாநிலத்தின்கண் என்னைப் போல பெரும்பாவிகள் இருக்கமாட்டார்களென எண்ணுகின்றேன். ஏ ஈசா! இவ்வீதியிலுள்ளவர்களையாவது விசாரித்துப் பார்க்கிறேன்.

பாட்டு

138. நாட்டிலுறும் அன்னை தந்தை நாயகமே நண்பர்களே
நாதன்வரக் கண்டீரானால் நானறியச் சொல்வீர்களே
நண்பரே நண்பரே நண்பரே நண்பரே (நாட்டி)

மேட்டிவணங் காமுடி வேந்தர்குல வீரர்களே
விஞ்ஞானியைக் கண்டதுண்டோ விளம்பும் குபேரர்களே
வீணனான் வீணனான் வீணனான் வீணனான் (நாட்டி)

சிதருங் கணக்கெடுக்குஞ் செட்டிகுல செல்வர்களே
தியாகியிவ் வீதிவர தெரிந்தாலுஞ் சொல்வீர்களே
தீனனான் தீனனான் தீனனான் தீனனான் (நாட்டி)

பதசார முறைகொள்ளும் பாவாண பண்டிதரே
பரமஞானியார் போன பாதையை விண்டீரே
பார்த்திலேன் பார்த்திலேன் பார்த்திலேன் பார்த்திலேன். (நாட்டி)

கோதிலாஸ்தபதி தட்டார் குடியானமாரே நில்லும்
குழகனடியார் தங்கும் கோட்டமெதுவோ சொல்லும்
கொள்ளுவேன் கொள்ளுவேன் கொள்ளுவேன் கொள்ளுவேன்.
(138) (நாட்டி)

## விருத்தம்

139. பக்குவத் திலறிய பதினாறும் பெற்று
பலுகிவாழ நானா வீதி தோறும்
தக்க விசாரணைகள் செய்தும் யானடைந்த
சங்கையற தெளிந்திலேன் தேவி சொன்ன
மிக்கா ருந்தங்கடவி யிதுவோ வேறோ
வெவ்விருளா லடர்புதர்கள் மரஞ்சூழ் காட்டில்
புக்கயிதிலே அறிஞரை முன்னறியப் போமோ
புகுத்திட்டேன் துணிந்து தனியிருந் திட்டேனே. (139)

## உரை

ஆ தெய்வமே! பருவகாலத்தில் 16 செல்வங்களை அடைந்து இடையில் தாழ்ச்சி யன்றிப் பெருக வாழும் ஊரிலுள்ளாரை வீதிகடோறும் தீர விசாரணைகள் செய்தும் யான் பெற்ற துக்க மயக்கம் முற்றுந் தெளிந்திலேன். ஆனாலும் என் பத்தினியார் உரைத்தவண்ணம் இதோ காட்டாறருகில் வந்தேன். பரமான்மா தங்கியிருப்பதாகச் சொன்ன காடு இதுவோ, அல்லது எதுவோ! ஆ பயத்தைத் தருகின்ற இருள்நிறைந்த அடர்ந்த புதரும் பெருமரங்களுஞ் சூழ்ந்த அக்கானகத்தில் நுழைந்து பெரியாரை நேரில் காண்பேனா? எப்படியோ. இதோ வனத்துள் புகுந்தேன். ஏகியான நான் திடங்கொண்டு வழியே செல்கின்றேன்.

## பாட்டு

**நாயனார் :**

140. எப்படி யானிந்த ஆரண்யந் தன்னிலே
ஈசனடியாரைக் காணப் போறேன்
மைப்படியுங் கண்ணி நங்கைசெய் தீமையால்
மயங்கு திவ்வனம் போறேன்
செல்லவழி யொன்றுந் தோன்ற வில்லையே
சிவனடி யாரைக் காணச்
சொல்லும் வனந்தனில் எவ்விடமோ ஆத்தி
தொடர்ந் தறிஞரைப் பேண. (140)

## உரை

ஹே வகுளவனேசா! இந்தப் பெருங்கனாகத்தில் எங்கு நுழைந்து பரிசோதித்தாலும் பெரியாரிருக்குமிடம் புலப்படவில்லையே. போகட்டும். எங்குந் தளிருந் துளிருமாய் தழைந்து அரும்பி பூத்து அலர்ந்து தேன்துளிகள் ஒழுகவும், பிஞ்சு காய்கனி நிறைந்து பரிமளிக்குங் காட்டினிடத்து கேட்க வேணுமென்றால் யாருங் கண்ணுக்குத் தெரிசனமாவதில்லையே. ஆஹா அதோவோர் இடைவெளியாக இருக்குமிடத்தில் ஆடுமாடுகளை மேய்க்குங் கோகுல செல்வர்களிருப்பதாகத் தெரிகிறது. அங்குச் சென்று விசாரிப்போம்.

## பாட்டு

(மாட்டை மடக்கி என்ற மெட்டு)

**இடையர்கள் :**

141. தானதத்தகு தானதித்தமி தாமததித்தின தகஜம்
தோடுசுந்தரி தும்தனத்தன தோமதத்தின சுகுணா
ஞானசந்தர வானஇந்திர ராஜதந்திரர் பணியும்
கானமெங்கினுங் கோனயக்குடி யானமந்தையுங் கதியாய்
நாளும் பொய்யற வாழும் வெய்யவனாலே மெய்யுளம் நலியா
கூலனந்தன பாலன்விந்தையில் கூடிவந்த எங்குலமே
ஆடுகள்குடி மாடுகள்குடி யாளரெங்களின் குலமே
ஆதவரக ஆச்சியர்கரம் ஆள்வதெங்களின் குலமே
பாடியில் விபசாரியென்பது பார்த்திலாதெங்கள் குலமே
கம்பளிதலை தம்பலபையுங் கக்கமும்பாற் கலையம்

கந்தையிடையில் காற்செருப்பொடு காடுமுற்றிலு மலையும்
கம்பையூன்றி நின்றுறங்கிடுங் காலம் எங்களின் குணமும்
கட்டித்தயிரு கெட்டிப்பாலிகன்கந்தம் எம்முடல் மணமும்
சிந்தைதுயரொழிந்து மானந்தெளியு மெங்களின் குலமே
தேவதேவ ராஜகிருஷ்ணன் திருட்டிஎங்களின் குலமே
விந்தை அறிவானந்தன் உரையைவிரும்பும் எங்களின் குலமே
வெய்யகானில் பயவந்த விபரங்கேளும் நலமே. (141)

உரை

**இடையர்கள் :**

யாங்களோ முல்லை நிலத்தின்கண் வசிக்கும் ராஜேந்திரன் முதல் தேவர்களுந் துதிக்கக் கானகமே குடியாய்க் கொண்ட ராஜவைசிய இடையரென்றும், பசுக்காத்த இடையர் என்றும், கோவிடையரென்றும் பெயர்பூண்டு, பசுமந்தையே குடியாகக் கொண்டு, கனவிலும் பொய்யுரையாத கோபாலரென உலகந் துதிக்க வாழும் ஆயர்கள். யாங்கள் தினந்தினம் வெய்யிலில் அலைந்தாலும் எங்கள் உடலும் உள்ளமும் நலியமாட்டோம். யாங்கள் ஆயர்பாடியில் வசிக்கின்றவர்கள். மிக்க அனுகூலனாகிய நந்தகோபாலன் விசித்திர வழியில் வந்த குலமென்பார்கள். ஆடுமாடுகளே எங்களுக்குக் குடித்தனம். எங்கள் அகத்திலிருக்கின்ற ஆச்சிமார்களின் கையை எதிர்பார்த்துதான் பிழைக்க வேண்டும். எங்கள் வீட்டில் இருக்கும் பெண்களுக்கு எந்நாளும் விபசாரத்துவமே கிடையாது. எங்களுக்குப் பால் மோர் வெண்ணை வியாபாரத்தினாலே தனவைசியரென்ற பேருமுண்டு. எங்களுக்குப் பன்னிரெண்டு பட்டாநாமமும் தலையிற் கம்பளமும் கட்கத்தில் பாக்குப்பையும் கரத்தில் பொற்கலையமும் இடையில் கந்தையும் காலில் செருப்பும் கம்பையூன்றி நின்ற தூக்கமும் காடே குடியுமாக உள்ளவர்கள் எங்கள் மீது தேவதேவனான ராஜகிருஷ்ண பெருமானுக்கு மிக்க திருஷ்டியுண்டு. இப்போது மெய்ஞான சத்குருமூர்த்தியாகிய அறிவானந்த சுவாமிகள் இட்ட வேலையைச் செய்யவந்தோம். வெவ்விய கானகத்தின்கண் எங்கள் நித்திய காலட்சேபத்தை விமரிசையாய் நடத்துவோம். ராமா, ரெங்கா, கிருஷ்ணா, நேரமாச்சு. மந்தையில் ஆடுமாடுகளை வெளியே விடுங்கள். நாய்களைக் கட்டவிழ்த்து விடுங்கள்.

### பாட்டு

(டாபரே உன்னை நம்பின என்ற மெட்டு)

142. *டேய கூ ஹெ ஹெ டேய கூ சு கூ*
*டெம்மாடி குண்ட பேரி டெர் ரே கூ*
*டாடிகாளி டுடுமூளி டடுகுடட்டி டெட்டே கம்பே டே* (142)

எங்குப் போனது மணிச்ஞரனும் வையிரியும் இராசாளி கொடியன்
கூற்றன்
பொங்கு வாய்வேகன் விடங்கனு மனோவேகன் புகழ்சங்க னென்னு
நாமம்
துங்கபேர் பெற்றநாய்களி லொன்றுங் காண்கிலேன் தூங்குதே கிடைய
லையோ

*டேய கூ ஹெ ஹெ டேய் கூ சுசு மெம்மாடிடுண்ட பேரிடெர்ரே கூ*

வெடிவாலு அள்ளுமறை நரைமோளை பள்ளையொடு வெண்காலி
நெற்றிசுட்டி
கொடிவெள்ளை பூவாலி கன்னக்காலியு மூளிபொறி வெள்ளை கம்பை
சாரை
கடிகாரி சோண்டரை செங்கம்பை அணிமயிலை கம்பை கருப்புப்
பழுப்பு
பொடிகுட்டி இவைகளைத் தேடிபார் கிட்டுனா போச்சுபோ மோசம்
ரெங்கா

*டேயகூ ஹெஹெ டேயகூசு சுடெம்மாடிடுண்டபேரி டெர்ரேகூ*
*பபாதீதீ ஆஆமட்டே பலுக்குநாரைசிலுக்கோ ட்ரியேடே*

வெண்கண்ணு மாம்புள்ளி சந்தனப் பில்லை மறைவெடி வாலி
அணிமயிலையும்
தண்கறாந் தாரை மின்பட்டை காராம்பசு தாய்காபிலை பில்லை
மயிலை
வன்உச்சி கொம்பு செந்தாரைக் கூழைப்பசு வாய்வைத்து மேயாமலே
கண்பட்ட இடமெலாம் போகுதே ராமாநீ கட்டிவளை விட்டிடாதே
டேய்

## பாட்டு

**நாயனார்:**

ஆதவ குலசெல்வரே அதிசுகம் பெறுவீரே
ஆண்டி சன்யாசிபோன அடவியே தறைவீரே
அன்பரே அன்பரே அன்பரே அன்பரே. (137) (தெய்வ)

## விருத்தம்

143. ஈகைபொன் பெண்டு பிள்ளை யேக போகங்க ளாகிப்
பாகமாய் ஆடு மாடு பலித்துமென் மேலும் வாழ்வீர்
தாகமாய் வந்தே னிந்த தடமதாய் ஓர்சன் யாசி
போகவுங் கண்டி லீரோ புகலுங் கோகுலத்து ளாரே. (143)

## உரை

அப்பா யாதவகுல கண்மணிகாள்! உங்களைப் பார்த்தால் மிக்க செல்வ வான்களாய்த் தெரிகிறது. மிக தர்மவான்களாகவுங் காட்டுகிறது. ஆகையால் உங்கள் பெண்டு பிள்ளைகளும் ஆடுமாடுகளும் திரவிய தர்மமும் மேன்மேலும் பெருகுவீர். நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள். நான் இவ்வெய்யிலில் இத்தூரம் வந்தது ஓர் அவசரம். அது சஞ்சலமேயாகும். இது இருக்கட்டும். இந்த மார்க்கமாய் ஓர் சன்யாசி போகக் கண்டது உண்டா? சொல்லுங்கள்.

## விருத்தம்

**இடையர்கள் :**

144. சாமி உங்களுக் குமிந்த சஞ்சலம் அணு கலேதோ
நேம நிஷ்டைகள் குலைந்து நீடு தானங்க ளோய்ந்தோர்
காம வேதனை யினாலே களைத்தது போலுங் கண்டோம்
கோம டிபால் கறந்து கொடுக்கிறோங் குடித்தி டீரே. (144)

## உரை

சுவாமிகள் இதுவென்ன ஆச்சரியமாய் இருக்கின்றது. தங்களின் நித்திய அனுஷ்டானங்களும் நேம நிஷ்டைகளுந் தான தர்மங்களும் சாதுசங்கம சவகாசங்களை விட்டு ஏதோ பேராசை பிடித்த பேயர்களைப் போல இந்த வெயில் நேரத்தில் இந்த இருட்காட்டில்

ஓடி வந்ததைப் பார்த்தால் மிக்க பசிகளைப்புள்ளவராகத் தெரிகிறது. இருக்கட்டும். மற்றெல்லாம் பின்னால் பேசிக் கொள்வோம் கொஞ்சம் பசும்பால் கறந்து வருகிறேன். சாப்பிடுங்கள்.

## விருத்தம்

இராகம்: ஸ்ரீராகம்

**நாயனார்:**

145. கேளுமப்பா ஆயர்களே நீங்கள் சொல்லக்
கேட்டவுடன் எனக்கிருந்த களையும் போச்சு
கேளுமப்பா என்விரத மான தின்னாள்
கேவலமாய் உயிர்வாதைக் கிடமு மாச்சு
கேளுமப்பா வந்தபர ஞானி யுண்ண
கெடுசொல்லி யிவ்வழியே வந்தா ராமே
கேளுமப்பா அவரேகும் போதிற் காணேன்
கெதிநீங்கள் கண்டிருந்தால் பதிசொல் வீரே. (145)

## உரை

அப்பா நண்பர்களே! நீங்கள் விஸ்வாசித்து இதனைச் சொன்னவுடன் இதுவரையும் இருந்த களை தணிந்து மிக்க திருப்தியானேன். நான் நடத்தி வந்த தர்மத்தில் இன்று யேற்பட்ட தாட்சியினால் பிராணாவஸ்த்தைக்கு உடையவனானேன். மடாலயத்தில் வந்த ஓர் பரமஞானி அமுதருந்தாமல் என்னை வரச் சொல்லிவிட்டு இவ்வனத்தில் பட்ட ஆத்தியடியில் வீற்றிருப்பதாய் வந்தாராம். இந்த இடம் உங்களைத் தவிர கெதிவேறொன்றுங் காணேன். அவர் எந்தப் பாதையில் போயிருக்கலாம். செல்லக் கண்டீர்களா? சொல்லுங்கள்.

## விருத்தம்

**இடையர்கள் :**

146. வாடியே வருந்த வேண்டாம் மகிபரே யிதனைக் கேளும்
மேடியாய் நீற ணிந்து வெகுவிதப் பணிகள் பூண்டு
தாடியுஞ் சடையு மான சந்யாசி யொருவர் தாமோ
ஓடினா ரிந்த மார்க்கம் உண்மை யீதுண்மை தானே. (146)

## உரை

ரா : ஏன் காணும் ரெங்க கோனாரே. நீர் கண்டீரோ?

ரெ : நான் அறியேன். உன் மகன் கிட்டினக் கோனானைக் கேளு.

ரா : ஏண்டா கிட்டினா! உன் கண்ணுக்குப் புலப்பட்டதோ?

கிட் : அப்பா! நரி பிடிப்பதற்கு முன்னே போய் குட்டியைத் தூக்கி வந்து விட்டேன்

ரா : அடே மூன்று நாழிகைக்கு முன்னே ஆரோ பெரியவர் போனாரே தெரியுமா?

கிட் : அப்பா! மூன்றாடு இன்று போகவில்லை. மூன்று நாளைக்கு முன்னே அணிமயிலையைதான் பிடித்துவிட்டது புலி.

ரா : போடா செவிட்டுப்பயலே. சுவாமி அந்தப் பெரியவருக்குத் தேகமெல்லாம் வீபூதியும் கழுத்தில் ஆபரணங்களும் தாடியுஞ் சடையுமுண்டோ?

நா : ஆம். அய்யா அந்த அடையாளந்தான். அவர் எப்படி சென்றார்?

ரா : அந்த அடையாளமுள்ளவர்தான் இந்தக் கொடிதடமே வெகு அவசரமாய் ஓடினார். சற்று நேரத்திற்கு முன்னே கண்டேன். அவர் போனது இதே பாதைதான். நான் சொல்வது உண்மை. சீக்கிரம் போய் பாருங்கள்.

நா : ஆஹா! உங்களுக்கு எனது அன்பார்ந்த நன்றி. போய் வருகிறேன்.

## பாட்டு

(தர வேணும் எனதாசை என்ற சந்தம்)

**ஆனந்தகோஷ்டி இடையர்கள் :**

147. ஹரிராமா அமரேச அருணாதனே வேத அரிராம அமரேச
பிரமாதிகளும் போற்றும் பரம புருஷா வென்றேத்தும்
பெத்தமுத்தர் நாளும் வாழும் முத்திதந்து ஆளுந்தேவ (ஹரி)

பரதாழ் வானுக்குப் பாத குறடளித் தாண்டற்புத
பாவைசீதை காண குகனும் ஆவலோடு பேண தாங்கும் (ஹரி)

அனுமான் வீபீடணர்க்குக் கனவாயுள் தந்துனக்கு
ஆசைநேச மூர்த்திபாதம் வாசம்வைத்த மூர்த்தி தேவ (ஹரி)

அறிவானந்த பதமே நிறையானந்தம் நிதமே
ஆள்களித்த காட்சி எங்கள் வாழ்வுபார்க்கச் சாட்சிதேவ.
(147) (ஹரி)

## விருத்தம்

**நாயனார் :**

148. இடையரிது சொன்னஉடன் பேரின் புற்று
இருபுயமு மறுபுயமாய்ப் புளகங்கொண்டு
அடவியினில் நுழைந்து கொடிவழியு மாறி
அங்கைநெறித் தகங்குலைந்து ஐயோ பாவம்
திடமிலையே எந்தவழி செல்வன் நாலு
திசைவழியு மொருவழியாய்ப் பிரியு தெந்தன்
குடனடுங்க அடவியெலாம் புகுந்து கண்ணீர்
கொட்டினேன் புதரடியில் முட்டி னேனே. (148)

## உரை

ஹே சிவமே! இதுவென்ன ஆச்சர்யம். கோகுலச் செல்வர்கள் சொல்லுங்காலத்து எனக்குள்ள சிந்தாகூலங்களெல்லாம் நாசமாகி இரு புயமும் ஆறு புயமானது போல் பூரித்து, காட்டில் அவர்கள் சொன்ன நேர் பாதையை வந்ததும் வழிமாறிப் போய் விட்டதே. அந்தோ என்ன செய்வேன்!

## பாட்டு

இராகம்: முகாரி

**நாயனார் :**

149. எதுவோ நான் செல்லும் பாதை அய்யரைக்காண
எதுவோ நான் செல்லும் பாதை
இதுவோ அதுவோபல வழிஎதை நாடுவேன்
ஈசா யீசா யீசா கைலாச வாசா (எதுவோ)

கன்னுழை யாக்காட்டிலே புகவோ - தேகம்
குன்னுதே தலை யோட்டிலே

அன்றெழுதும் போதென்ன ஆயாசமோ அறியேன்
அரனே அரனே அரனே கிருபாகரனே (எதுவோ)

பண்டுசெய் பாவம் ஏதோ - செய்யுந்தரும
தொண்டுக் கழிவு யீதோ
மண்டுந் தொடரிசூரை யிண்டமுள் கிழிக்குதே
மணியே மணியே மணியே சிகாமணியே (எதுவோ)

காலைப் பொழுதும் போகுதே மதியந்தாண்டி
மாலை நேரமு மாகுதே
பாலைவன நெருப்போ பற்றுதே தேகமெல்லாம்
பதியே பதியே பதியே தயாநிதியே (எதுவோ)

சிந்தை பேதகன் போலே பிதற்றியழ
சந்தோஷமோ மென்மேலே
நிந்தைக் கிடமல்லவோ எந்த இடமிருந்தாலும்
நேராய் நேராய் நேராய் தரிசனந்தாராய், (149) (எதுவோ)

உரை

ஏ கணபதீசா! இப்புதரான காடு எத்தொலைவு இருக்குமோ என்று மெத்த பயந்தேன். அதையும் லகுவில் நுழைந்து எழுந்தேன். ஓகோ அது எனக்கு பெரிதாய்த் தோற்றவில்லை. இங்குப் பார்த்தால் சந்தன விருட்சங்களும் புன்னை விருட்சங்களும் பாரிஜாத செடிவகைகளும், விளா பலா மூங்கில் நாவல் விருட்சங்களும் சூழ்ந்து அடர்ந்து இருள்படர்ந்து பயங்கரத்தைத் தருகின்ற காடாயிருக் கின்றன. அப்பரடியார் தங்கியிருப்பது பட்ட ஆத்தியென்றோ செப்பினாள்.

## பாட்டு

**நாயனார் :**

150\. வித்தார மான விருளாழ்ந்த வனந்தனில்
வேதனைகளை விண்டேன் (வித்த)

கத்தியோடி திரிந்து ஆத்தியடியிற்
கர்த்தனிருக்க கண்டேன். (150) (வித்த)

## ஆனந்த கொம்மி

151. கண்டேன் கண்டேன் கண்டேனே - சிவ
காருண்ய மூர்த்திபோற் கண்டேனே.
கொண்டேன் கொண்டேன் கொண்டேனே - அகங்
கொள்ளாத ஆனந்தங் கொண்டேனே (கண்டேன்)

முத்தர்களும் பலசித்தர்களும் சிவபக்தர்களும் அருற்பெற் றோர்களும்
நித்தனைக் கண்டருள் பெற்றிடவே யோகசித்தியடைந்திடு முத்திவனம்
(கண்டேன்)

சண்டன் விபத்தினா லண்டரெல்லாங் கூடிசங்கரனை துதிபோற்றிடாமல்
கொண்டு உமையரன் அண்டருக்காய்தந்த கொற்றவனத்தி முகவனத்தில்
(கண்டேன்)

சின்மயானந்த பரம்பொருளாகிய சித்தவினாயகர் வாழ்வனத்தில்
தன்மபொன்னகர் கற்பகமென்னத்தழை கொளுமித்திருவாத்தியின் கீழ்
(கண்டேன்)

பட்டமரமென்று சொன்னதென்ன ஆத்திபடர்ந்து பசுந்துளி ராவதென்ன
கட்டழகிசொல்லு பொய்யாமோ அவள்கண்ட பெரியோ ரிவர்தாமோ
(கண்டேன்)

வாசம் பெருகுதே ஆத்தியிலே மலர்வாரி கொழிக்குதே பார்க்கையிலே
கூசுதே சித்தர்கள் தங்குமிடமிந்த கோலமடைந்தாரிவர் தாமோ.
(151) (கண்டேன்)

## ஆனந்த நடனம்

152. ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே
மகத்தானந்த மானந்தம் ஆனந்தமே
ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே
அகத்தானந்தம் ஆனந்தம் ஆனந்தமே

பிர்மானந்தம் ஆனந்தம் அருளானந்தம் ஆனந்தம்
பரமானந்தம் ஆனந்தம் பொருளானந்தம் ஆனந்தம்

வித்யானந்தம் ஆனந்தம் ஞானானந்தம் ஆனந்தம்
சத்தானந்தம் ஆனந்தம் நிறையானந்தம் ஆனந்தம்
சித்தானந்தம் ஆனந்தம் அறிவானந்தம் ஆனந்தம். (152)

## தேவாரம்

153. வாடும் பயிர்க்குதவும் மழைபோ லுற்ற
மாதேவ ஸ்ரீபதியே வழுவி லாத
பீடு பெருங்கருணை பக்திபிரளா வெள்ளப்
பெருக்கேசன் மார்க்க நலம்பழுத்து முற்றி
வீடு பெறுமேலோர் தான்மெய்மை தொண்டு
விருப்புடையேன் சமுசாரி விதிநீ ணாளும்
ஈடு கெடபடும் பாடுமே முந்திகாக்க
ஏத்தினேன் அபயமொழி சாற்றி னேனே. (153)

## பாட்டு

(கையை நோகுதே என்ற அரிச்சந்திரா மெட்டு)

154. சரணஞ் செய்குறேன் தேவா
சரணங் செய்குறேன் - இந்தத்
தருணமுன் பிரணவத் திடைநெடும்
பொருளறிந் தவர்க்கருள் சரணடி (சரணஞ்)

## தேவாரம்

155. அரும்பொருளே ஆதிமத்தி யந்த மில்லா
அற்புதமே தற்பதமே அகண்டா காரப்
பெரும்பொருளே பிரக்ஞான விபுவே வாத
பேதமற்ற நீதவிஞ்சை பெருமான் முத்திக்
கிரும்பொருளே எம்மானே எளியோர்க் குற்ற
யிடர்தவிர்த்துக் காக்குமக பதியே முத்தி
தரும்பொருளே தருமார்த்த தகைமை சித்து
தன்மயமே பொன்மயத்தாள் தலைகொண் டேனே. (155)

## பாட்டு

கோசபாச கருவிகரண நாசபிரகாசவ - பூரண
வாச நட்சய மாகும் விதரண
வடிவுடை சடைதிட நடமிடு
கரரடை விடைபடு தடவடி. (சரணஞ்)

## தேவாரம்

156. பராவுமன நினைவனைத்தும் பாழே யர்க்குப்
பதபோக காட்சிக்கிப் பரிவுற் றாழ்ந்து
யிராப்பகலும் ஒழிவிலி ருந்திறுதி காண்பார்க்
கிசையும் பசியகற்ற மனமிசைந்து ளேனான்
நிராமயமே நிச்சயமே நிமல வாழ்வே
நித்தியமாய்ச் சத்தியமாய் நிருவி கற்ப
பராபரமே வடிமைதரப் பழிதீர்த் தாள்க
பகவன் மாலறியாத பணைத்தாள் போற்றி. (156)

## பாட்டு

சன்மதானத் தொன்மை வினைகள்
பன்மையனும் யிம்மை வினையுள்
பொன்மை செயலை யுன்னி னேனிலை
புண்ணிய கெண்ணிய மெண்ணிய
நுண்ணிய வெண்ணமு நண்ணியுன் (சரணஞ்)

## தேவாரம்

157. உலகடம்ப ஒப்பனைக்கு மூகித் தில்லேன்
உள்வஞ்ச கருமசிந்தை யுடையே னில்லேன்
புலையரகங் காரி பணிபுரிந்தே னில்லேன்
புண்ணியத்தால் பொருடேட்டப் பொலிந்தே னில்லேன்
குலஞ்சாதி சமயநெறி குறித்தே னில்லேன்
குருபரனே என்விரதக் குறிப்புங் காண்பாய்
புலவருக்காய் ஆல முண்டாய்ப் புரமெரித்தாய்
பூச்சியனே என்விரத சாட்சி யானே. (157)

## பாட்டு

செட்டில் லாமலே யிட்டுண்ப தென்று
திட்ட மிட்ட ளித்தேனே - யின்று
கட்டமாய் வரும் நிட்டர்க ளொன்றுங்
கண்ட தில்லை மண்டலத்தில்
தொண்டன்றிரு புணரடி (சரணஞ்)

## தேவாரம்

158. விட்டேனிப் பொய்யுலக வேட்கை யெல்லாம்
வீணாக்கால் பழிக்க வுள்ளம் விருப்புற்றேமுன்
தொட்டேன் மெய்த்தொண்டரடி துணையே கொள்ள
தொந்தமற்று மிரவுபகல் சுயஞ்சோ திக்கே
பட்டேன் மெய்வைராக்ய பக்தி ஞானப்
பாடறிவானந் தனுக்கே பார மானால்
கெட்டே னென்றறிஞர் வசைகிளரப் போமோ
கிருபாநற் கபாலியுன் கிளைத்தாள் போற்றி. (158)

## பாட்டு

தீன ரட்சகா ஞான ரூபா
நானி யற்றுந் தவத்தின் ப்ரதாபா
ஈன மில்லா மற்காரும் மனோபா
சித்தத்துவ முத்தித்திரு
முத்தத்திதி நத்தித்துதி. (154) (சரணஞ்)

## தேவாரம்

159. நான்பட்டதைப் பிறர்பால் நண்ணிப் பல்கால்
நவின்றாலுங் கேட்டு சிரமாட்டி நீணாள்
தான்பட்ட குறையு ரைத்துந்தகை வேயீரேழ்
தலம்பட்டதுஞ் சொல்வார் சன்மார்க் கத்தின்
மேம்பட்ட வவத்தை யற்றவிடத் தின்புற்ற
மேதாவிதாள் பணிந்தார் வினவக் கேட்டும்
ஏன்பட்டா யஞ்சலென்றே யினிது கூறார்க்
கின்பற்றுப் பொறிவாயி னியல்பற் றேனே. (159)

## உரை

சுவாமி! சூரிய வெப்பத்தினால் வாடுகின்ற பயிர்கட்கு உதவிய மழையைப் போலவும், அடியேன் எடுத்த அருந்தவப்பயிரும் வெவ்விய வினையின் உஷ்ணத்தினால் மெலிந்த பயிருக்குக் கருணை மழையைப் பொழிந்து காக்க வந்த மகாத்துமா திருப்பாத கமலங்களுக்கு அடியேன் நமஸ்கரிக்கிறேன். சுவாமி சுவாமி சுவாமி.

## பாட்டு

(கண்மணியே இன்னுந் தூக்கம் என்ற மெட்டு)

இராகம்: தேசிக கமாசு

160. இது வென்ன தூக்கம் மாதவா?
இது வென்ன தூக்கம் மாதவா?

## உரை

நாதா! தன்னைப் பெற்ற தாய் முகங்காணாத பிள்ளையானது தவித்து அழுந்தன்மை போலவும், அகண் ஆழமுள்ள தடாகங்களில்லாமல் சிறிய குட்டைகளில் விளைவற்று கிடக்கும் தாமரையைப் போலவும், நல்ல சத்துவக் குணங்கள் விளக்கமில்லாமல் ராஜத தாமத குணங்களால் பேதித்து நலியும் பித்தனைப் போலவும் ஆகிய நாயினேனை முகம் நோக்கி மனக்கவி தீர்க்காமல்.

## பாட்டு

பதுமம் பன்னகம் புல்மேல்
பாங்காய் நித்திரை செய்த
புதுமை அதாகுமோ விதுஐயனே - என்ன
புதுமை அதாகுமோ யிது. (இது)

## உரை

சுவாமி! ஆகமவிதியில் ஆசனபேதம் 38 என சொல்லியிருக்கும். ஆசனங்களுக்குள் நான்முக தேவனுக்குக் கமலாசனமென்றும் திருமாலுக்குச் சர்ப்பாசனமென்றும் உருத்திரனுக்குப் புல்லாசனமென்றும் யோகிகளுக்குத் தர்ப்பாசனமென்றும் விசேஷித்து உரைப்பார்கள். அப்படியானால் நிட்டானுபூதி நித்திரை சுகத்துக்கு மேலாகும் இந்த கரடுமுரடான வறண்ட வெட்டையில் எந்த ஆசனத்தைக் கொண்டு நித்திரை வந்தது சுவாமி?

## பாட்டு

அட்டாங்க யோக சித்தில் ஆதார மாயடைந்த
இட்டானு பவமென் சொல்லுவீர் தேவரீ ருந்தம்
இட்டான பவமென் சொல்லுவீர்? (இது)

### உரை

சுவாமி! இயமம் நியமம் ஆதனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்னும் எட்டு யோகங்களுள்ளும், இன்னும் அணிமா மகிமா இலகிமா கரிமா பிராத்தி பிரகாமியம் ஈசத்துவம் வசித்துவம் என்று சொல்லும் அட்டமா சித்திகளுள்ளும் எந்த யோகத்தை அனுபவமாகக் கைக்கொண்டு நடத்தி வருகின்றதோ? இதையல்லாமல்.

### பாட்டு

கன்ம ஞானேந் திரியம் கலந்தொருமைப் படுத்தும்
இன்பானு போகஞ் சொல்லுவீர் விஞ்ஞான தேவா. (இது)

### உரை

சுவாமி! பதி பசு பாச விலட்சணங்களைத் தெரிந்து துறந்து ஆன்ம சொரூபம் ஒன்றே என ஜீவர் தரத்தை அடைய விரும்புவோர்கள் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் மூவகையாலும் அட்டாங்க யோகங்களைச் செய்தலும் வேண்டும். இதல்லாமல் ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும் ஒன்றோடொன்று கலக்கச் செய்ய அனுபவயோகம் பண்ண வேணுமென்றுரைப்பர். அஃது அனுபவத்தில் இருக்கின்றதா? அல்லது

### பாட்டு

பிராணன் அபானனுடன் புணர்ந்துறக்க மானதோ
திராணி யெதுவோ காணேனோ பேசாதிருக்குந்
திராணி யெதுவோ காணேனே. (இது)

### உரை

மகான்மா! பிராணன் அபானன் சமானன் உதானன் வியானன் நாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயனென்னும் வாயுக்கள் பத்தையும் பந்தித்தாலன்றி மனம் ஒருவழி நில்லாது. சடங்கயோக சாதனத்தை யல்லாமல் சத்தியத்தை உணர்தல் அருமை என்றாரில் வேறு சிலர் பிராண வாயுவும் அபான வாயுவும் ஒருமைப்பட யோகானுபவஞ் செய்ய வேண்டுமென்பர். இவைகளைவிட எக்காரியத்திலும் பேசாதிருத்தல் பெரிய மௌன மென்ற

திருமொழியைக் கொண்டு சாதிக்கின்றதா? அல்லது இன்னானென்று உண்மை தெரியாமல் சட்சுவாதி பொறிகளை விளக்கப்படாது என்று இருக்கிறதா?

## பாட்டு

மைப்படி விழியாள் நங்கை வாக்கறிந்து இங்குவந்தேன்
இப்படி யுந்தூங்க லாகுமா விழிக்கலையா இப்படி (160) (இது)

## உரை

சுவாமி! இன்று காலையில் திருச்செங்காட்டங்குடி கன்னி மூலையிலிருக்கும் மடாலயத்துக்குச் சுவாமிகள் வந்ததாமே. அச்சமயம் அம்மடத்திலிருந்த எனது பத்தினியாள் திருவெண்காட்டம்மையாள் நேர்வந்து வணங்கித் தான்செய்யுந் திருப்பணிக்கும், திருவமுது யேற்றுக் கொள்வதற்கும் வேண்டிக் கொண்டதற்குச் சம்மதிக்காமல் உன் நாயகனை வரச்சொன்னால் உடன்வந்து பிச்சையேற்பேனென்று சொல்லி வந்ததாகக் கேள்விப்பட்டு இக்கணம் இங்கு வந்தேன். நான்தான் சிறுத்தொண்டன். இப்போதாவது கண்விழித்து பேசப்படாதா? அல்லது செவிடா? இதுவென்ன பாபம்? காதண்டையில் கைதட்டிதான் பார்ப்போமே. சுவாமி சுவாமி சுவாமி.

(இந்தயிடங் கைதட்டல்).

## விருத்தம்

161. அடைக்கலங் கருணா மூர்த்தி அற்புதச் சொரூப மேயுன்
அடைக்கலம் பொருள்மெய் ஜீவன் அபயம் நின்திரு வடிக்கே
அடைக்கலந் துயர கற்றி ஆள்பர பிரம மூர்த்தி
அடைக்கலம் பேசா தாயின் ஆருயிர் விடுவேன் காப்பே. (161)

## உரை

சுவாமி! உண்மையைத் தெரிவித்துங் கண்திறந்து பாராமலும் வாய் பேசாமலும் பொய்யான தூக்கத்திலிருப்பது என்ன? என்மீது வர்மமா? இன்று நான் பட்டபாட்டிற்குத் தங்கள் சமுகங்கண்டும் அதின் பயன் ஒன்றும் காணாமல் எவ்வகையிலும் என் துயர் ஒழியாது. இதோ தங்கள் திருவடியிலேயே என் பிராணனை விடுவேன். திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.

## பாட்டு

162. தாங்காதினி பிராணன் ஜாலஞ் செய்யக் காலமோ
தூங்காமற் றூங்க லாகுமோ? - இது சமயம்
தூங்காமற் றூங்க லாகுமோ? (162)

## விருத்தம்

**சுவாமி :**

163. நீர்தானோ திருவளருஞ் செங்கா டுற்ற
நிமலனடி யார்க்கமுது யிடுவே னென்றோர்
நீர்தானோ கொடிநாட்டி வைத்தோர் வேத
நீதி தொழிலுடைய வேதிய குலத்தோர்
நீர்தானோ தயைபொறை மெய்புடைய மிக்கோர்
நீடுபுவி போற்ற புகழ்பூண்ட சீமான்
நீர்தானோ பெரிய சிறுத்தொண்ட னென்போர்
நிற்றலுமென் சொல்லென் பாலுற்ற தேனோ. (163)

சுவாமி : நீ யாரப்பா?

நாயனார்: சுவாமி நான்தான் சிறுத்தொண்டன்.

சுவாமி : நீர் எந்த ஊர்?

நாயனார்: நான் திருச்செங்காட்டங்குடி.

சுவாமி : ஓகோ அட்டலட்சுமி வளங்கள் பெற்ற செங்காட்டங் குடியிலிருந்து பரனடியார்களுக்கு அமுதளித்துக் கொண்டு வருகின்றவர் நீர்தானே?

நாயனார்: சுவாமி நான்தான்.

சுவாமி : ஜீவகாருண்யம் சாந்தம் சத்தியத்தைக் கைபிடித்து உலக மெல்லாம் போற்றிப் புகழாபரணம் பூண்ட சீமான் நீர்தானோ?

நாயனார்: சுவாமி நான்தான்.

சுவாமி : இங்கு என்னைப் பார். பெரிய சிறுத்தொண்டரென்பவர் நீர்தானோ? இக்காட்டில் என்னிடம் என்னெதிரில் வந்து நிற்கும் விசேஷமென்ன?

## விருத்தம்

**நாயனார் :**

164. வித்தகனே போற்றி சிவனடியார் தொண்டு
விரைந்து செயத்தெரிந்தி லேனான போதும்
அத்தனெழி லடிகள் தம்மால் காழிவாழும்
அருண்ஞான சம்பந்த ராலு மிப்பேர்
நத்தியடைந்தேன் பிழைகள் கோடி செய்யின்
அதுபொறுத்தோர் பெருஞ்சேதி நவிலக் கேளும்
கர்த்தனே மனையில முதுண்ண வுள்ளங்
கருதுவீர் தயைசெய்து வருகு வீரே. (164)

## உரை

தேசிகா! நமஸ்கரிக்கின்றேன். பொறுத்தருளல் வேண்டும். திருவடியார்களுக்குத் தக்கத் திருப்பணிகளை விதிப்படி செய்வதற்குச் சிற்றறிவுடைய சிறியேன் திறமையில்லேன். ஆனாலும் தெரிந்தமட்டும் மிக்க அச்சத்தை மேற்கொண்டே சிறிது செய்துவந்தேன். அக்காலம் தெய்வீகம் பொருந்திய சீர்காழித் தலத்திற் பிறந்த திருஞானசம்பந்த சுவாமிகள் அளவில்லாத பல திருக்கூட்டங்களுடன் வரக் கேள்வியுற்று அடிமை நேர் சென்று பணிந்து அழைத்து வந்து சில நாள் சுவாமிகள் திருப்பணிகள் செய்து வருங்காலத்து அச்சுவாமிகளால் திருவாய் மலர்ந்தருளின இத்திருநாமத்தைச் சிரமேற்றேன் அல்லது எனது மாதாப்பிதாக்களால் இடப்பட்டதுமல்ல; இப்பெயருக்கு நான் இச்சித்தவனும் அல்ல; பொறுத்துச் சற்று செவிகொடுத்துக் கேட்க வேண்டும். அடியேனிடத்து எக்குற்றமிருந்தாலும் அதைப் பாராட்டாமல் தயைசெய்து இப்பவே என் மனைக்கு எழுந்தருளி திருவமுது எடுத்துக்கொள்ள பிரார்த்திக்கிறேன் ஆண்டவனே.

## விருத்தம்

**சுவாமி :**

165. அருந்தவனே வடதேச மிருந்து உம்மை
ஆசையுடன் காணவந்தேன் கண்டேன் போதும்
பரிந்தமுதுக் கழைத்தீரெற் கமுத ளிக்கப்
பலகஷ்ட மதுமுடியா தும்மா லென்முன்

வருந்தாதீர் நானுரைக்கும் வசனங் கேளீர்
வையமதி லியல்பிலா விரத மொன்றைப்
பொருந்தினே னிவ்வு லகுக்கேற் காததைப்
போற்றினே னென்னுண்மை சாற்றி னேனே. (165)

## உரை

ஹே தர்மாதிபதியே! நான் சொல்வதைக் கவனித்துக் கேட்கவேண்டும். நான் வசிக்குமிடம் வடதேசம். அதுவும் வெகுதூரம். பல நாளாகப் பலர்களால் உம்முடைய நல்லொழுக்கத்தையுஞ் சத்குண விசேஷத்தையும் உமது பத்தினியாள் பதிவிரதா தன்மையையும் சொல்லக்கேட்டு, ஆசையினால் வெகுபாடுபட்டு, உம் சத்திரத்தில் வந்து பார்த்தேன். அச்சமயம் நீரில்லை. உமது பத்தினியைக் கண்டேன். அவரால் மற்ற சேதிகளும் தெரிந்து கொண்டேன். நான் உம்மைக் காண வந்ததே ஒழிய உம்மிடம் அமுதருந்த அல்ல. ஹே புண்ணிய சீலரே! உங்களுடைய தெரிசனமே எனக்குப் போதும். நீர் போய் வாரும்.

**நாயனார் :**

சுவாமி! வடதேசம் வெகுதூரத்திலிருந்து வெகுபாடுபட்டு வந்து என்னைக் காணவந்த அன்புக்கு அமுது ஏற்காமல் போவது தர்மமா? வரத்தான் வேண்டும் சுவாமி.

**சுவாமி :**

பக்தரே! உலகில் வழக்கம் ஓர் வராத விருந்து வந்தால் அவர்களுக்கு மரியாதையுடன் அழைத்து வந்து ஆசனத்தமர்த்திக் களையாற்றித் தாம்பூலமீய்ந்து பசியாறித்தான் போக வேண்டுமென்று சொல்வது வழக்கம். அதற்கிசைந்து உண்பவர் உண்பார். உண்ணாதார் உண்ணார். அதுபோல நீரும் மரியாதைக்குக் கூப்பிட வேண்டியது தான். கூப்பிட்டதும் எனக்குச் சந்தோஷந்தான். நானோ நீர் கூப்பிட்டு சாப்பிடுவதற்குத் தக்கவன் அல்லேன்.

**நாயனார் :**

சுவாமி! அப்படியேன் சொல்ல வேண்டும்? சன்னியாசிகளுக்கு பேத நினைவு உண்டா? ஆனால் நான் பிராமணனல்லவா? ஏன் உண்ணப்படாது? வரலாம். வரட்டும்.

**சுவாமி :**

அன்பரே! நீரும் பிராமணன்தான். என்னிடம் பேதமுமில்லை. சன்னியாசியா யிருந்தபோதும் அவரவர்களுக்கு நித்ய அனுஷ்டான உபவாசங்கள் பலவாறாகும். அதனால் இதைச் சொன்னேன்.

**நாயனார் :**

சுவாமி! அப்படியானால் தாங்கள் அனுட்டித்து வரும் உபவாசம் எதுவாகுமோ?

**சுவாமி :**

ஏ புண்ணிய சீலரே! என்னுடைய உபவாசத்தைச் சொன்னால் உலகம் சம்மதியாதாகும். அதை வீணில் சொல்வதில் பிரயோசனம் என்ன?

**நாயனார் :**

சுவாமி! உலகஞ் சம்மதியாகாதென்றால் சாத்திரமுந் தெய்வமுஞ் சம்மதியாகாதா? அதுதான் எனக்குத் தெரிய வேண்டாமா?

**சுவாமி :**

ஹே ஆரியசிகாமணி! அவரவர் மனக்கொள்கையும் அவரவர் விரதமும் அவரவருக்குதான் விசேஷம். அந்தந்த தேசத்திற்கு அது முக்கியமாகும். உருத்திரதேசத்துக்கும் தெட்சண பாகத்துக்கும் எவ்வளவோ பேதம் உண்டு. அதை விரிப்பானேன்?

## விருத்தம்

**நாயனார் :**

166. அருந்த முலைப்பா லளிக்கும் அன்னையர்க்கு
ஆசைபின்னை யிக்குளினால் வெட்க முண்டோ?
தருந்த கைமை பெற்றோர்க்கு முண்போருக்குஞ்
சம்மதமோ உலகியல்பு தரமோ சுவாமி?
பொருந்த வடியார் கிடைத்தால் புவியில் கிட்டாப்
பொருளு முண்டோ எதுவேண்டுந் தவறாதீவேன்
திருந்த உரைத்திட வேண்டும் அன்பனுள்ளந்
தேற்றவீர் அதன்விபரஞ் சாற்று வீரே. (166)

## உரை

பரமான்மா! தாயானவர் மடியில் வைத்துப் பாலூட்டிக் கொண்டிருக்கும் போது பால் குடிக்கும் பிள்ளை தாயை யிக்குளி பண்ணியதேயானால் அதற்காகக் கோபித்துப் பிள்ளை எடுத்து எறிந்து விடுவாளா? அதைப் போல இடுவார்க்கும் ஏற்பார்க்கும் சம்மதமல்லாமல் உலக வழக்கம் பார்ப்பானேன்? அடியார்கள் கிடைத்தால் அவரவர் விரத பாங்கிற்கேற்க குற்றமன்னியில் செய்ய அடியேன் தயாராயிருக்கின்றேன். அதை யின்னதென்று தெரியச் சொல்லட்டும்.

## பாட்டு

இராகம்: சங்கராபரணம் தாளம்: ஆதி

**சுவாமி :**

167. உம்மாலே ஆகாது காண் - அமுதிட
உம்மாலே ஆகாது காண்
நம்மரிய விரதம் உம்மிடம் படித்திடச்
செம்மலே யதின்படி குறைவற முடித்திட (உம்)

## உரை

அன்பரே! என்னுடைய அரிய விரதத்தை உம்மிடஞ் சொல்லத் தக்கதாயில்லை. ஏனெனில் நீர் அந்தண குலத்தாரினுஞ் சிறந்த மேலான வேத பண்டிதர். ஆகையால் அது உம்மாலே செய்யக் கூடியதுமல்ல. அதனால் சொன்னேன் நீர் கோபங் கொள்ள வேண்டாம்.

**நாயனார் :**

சுவாமி! தருமஞ் செய்ய முயன்றவர்கள் எந்த மேலான ஜாதியா னாயிருந்தால்தான் என்ன? இரப்பவர்களுக்கு எப்படி பேதமில்லையோ அதுபோல இடுவானுக்கும் பேதமில்லை. துறவிகள் எவர்களானாலும் அவர்களுக்குள் இடுவான் அடிமையே ஒழிய அவனுக்குப் பிரபுத்துவங் கிடையாது. சுவாமிகள் எவ்வாறான தவத்தை யேற்றிருக்கினும் அவ்வாறு செய்ய அடியேன் தயாராயிருக்கின்றேன்.

## பாட்டு

**நாயனார்**

168. உண்ணுமாறு சுவைக ளுமரும் பதார்த்தவகை
யோடருஞ் சோறுகறி உண்ணாமல் - தினங்
கண்ணுறங்காமல் பெருந்தவத் திலிருந்து மிக
கனிந்தொரு மாதம் பசியெண் ணாமல்
தெண்ணரிதான வொரு பசுவினை தலைகொய்ய
விண்ணவருந் துதிக்கப் புசிப்பேனிதனைச் செய்ய. (உண்ணு)

## உரை

ஹே பக்தசிரோன்மணி! உமக்காகக் கற்பனையாய்ச் சொல்வதல்ல. மிக்க கவனிக்க வேண்டும். உலகினோர்கள் போசனவகையில் உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, புளிப்பு, கசப்பு, இனிப்பு என்று அறுசுவை பாகங்களாக உண்பது வழக்கம். நான் அப்படி உண்பதல்ல. எனது அபிப்பிராயம் எடுத்திருக்கும் விரதத்திற்கு அயனாந்த சடோபவாச பட்சணி. அதாவது ஆறுமாதம் இரவு பகல் பசியென்னும் நினைவற்று இரவுபகல் உறக்கமற்று பெருஞ் சமாதியிலிருந்து 181 ஆம் நாள் நினைத்தற்கரிய ஒரு பசுவினைத் தலைகொய்து அதை பாகஞ்செய்துத் தேவர்களும் புகழ்ந்தேத்த சிவார்ப்பணம் பண்ணிச் சாப்பிடுகிற வழக்கம். இதைத்தான் சொல்லப்படாது என்றேன்.

**நாயனார் :**

சுவாமி! இந்தக் கடுந்தவத்தை எவ்வளவு காலமாய் அனுபவித்து வருகின்றதோ தெரிவிக்க வேண்டும்.

## பாட்டு

**சுவாமி :**

இப்படியாக நெடுநாளா யிவ்வு லகினில்
இதை அனுட்டித்து வந்தேன் வெகுவாக - அது
தப்பித மில்லாமல் நேற்றைய தினம்வரையில்
விரதஞ் சரிவர முடிந்தது சுகமாக
ஒப்புரவே யின்றையதினம் பசுவினை யுண்ண
செப்புநாளா கையினா லதின்படியே பண்ண. (168) (உண்ணு)

உரை

ஹே புண்ணியாதிபதியே! இவ்விதமாகவே வெகுநாளாய் இவ்வுலகில் வடதேசத்தில் விடாமல் அனுட்டித்து வந்தேன். அது நடைமுறையில் 180ம் நாள் நேற்றோடு குறைவில்லாமல் சுலபமாக, சுகமாக முடிந்துவிட்டது. இன்று கடைவிரதம் பூர்த்தியாக வேண்டும். அதற்கு அனுபவமாய் வசித்திருந்த உத்த பாகத்தை விட்டு தெட்சண பாகம் வந்ததால் அது பாக்கியில் கிடந்துவிட்டது. என்ன செய்வது? அத்தேசம் போனால்தான் பூரணமாகும்.

**நாயனார் :**

சுவாமி! பின்னும் வடதேசம் தென்தேசமென்று சொல்வானேன்? இதுவும் நான் செய்த தவந்தான். அந்தக் கடைவிரதத்தை அடிமையின் அகத்திலே பூர்த்தி செய்து கொள்ளலாம். வரட்டும்.

பாட்டு

**சுவாமி :**

அருமை யாகவே என்னைத் தேடி - வந்து
அடிபணிந் தானந்த மகிழ்ச்சியாற் கூத்தாடி (உம்)

குறைவில்லா மலென திஷ்டப்படி யமுது
கொடுப்பே னென்ற ழைக்கிறீர் வாதாடி - இதை
சரியென்று நம்பிவர தாழ்ச்சி யென்னிடமில்லை
தெரியும்பின்னாலே கஷ்டம் நம்புவீரென் சொல்லை.
(167) (உம்)

உரை

பக்தரே! அருமையாக விஸ்வாசமாய் என்னைத் தேடி வந்து பக்திபூர்வமாய் பாதம் பணிந்து அடங்காத ஆனந்தங்கொண்டு ஆடினீர். பாடினீர். என் இஷ்டம் போல் செய்கின்றேன்; வர வேண்டும் மென்று தரித்திரமில்லாமல் செப்புகிறீர். அதுவும் மிக்க நன்று. உமது வார்த்தையைக் கேட்டு வருவதற்கு இவனிடத்தில் சந்தேகமில்லை. ஆனாலும் எவர் இத்தவத்தைச் செய்ய ஒப்புக்கொண்டார்களோ அவர்களுக்கு ஆதிமத்தியாந்தம் வரையில் பெருந்துக்கமுங் கலகமும் வந்து கொண்டேயிருக்கும். மத்தியில் சலித்துவிடச் செய்யும். இது

உமக்கு யேற்றதல்ல. நேரா நோன்பு சீராகாது என்னும் வாக்கியப்படி முடியும். என்னால் உமக்குக் கஷ்டம் வேண்டாம். போய் வாரும்.

## விருத்தம்

**நாயனார் :**

169. அய்யனே இதெனக்குப் பெரிது மல்ல
அனந்தபசு உண்டதிலோர் பசுவ ளிக்க
நையுவனோ பின்வாங்க லுண்டோ சுவாமி
நாட்டமுள்ள பசுஇன்ன தென்று சொல்லும்
மெய்யடியார் தொண்டிலொரு குறைவில் லாமல்
விரைந்து செயவிரத மெனக்காகை யாலே
செய்யவகஞ் சென்றுபசிக் கமுது மிந்தோ
தருகுவேன் தயைசெய்து வருகு வீரே. (169)

## உரை

ஹே கருணைமூர்த்தி! தாங்கள் சொல்லிய இந்த விரதம் எனக்குப் பெரிதாகத் தோற்றப்படவில்லை. ஏனெனில் என்னிடம் பசுமந்தைகள் அளவில்லாமலிருக்கின்றன. அதில் ஒரு பசுவைச் சிலவிடத்தானா முன்பின் பார்க்கப்போகின்றேன்? அப்படி பார்த்து அச்சத்தையடைபவன் சன்மார்க்க சாது சங்கமர் திருப்பணி எப்படி முடிப்பான். எவ்வகை யிடர்கள் வந்தாலும் அறிஞர்கள் திருப்பணியே எனக்குப் பெரும் ஆஸ்தியும் ஆனந்தமும். சுவாமிகள் தயவுசெய்து என்னோடு வந்து ஆநிரைக் கூட்டத்தில் தாங்கள் குறிப்பிட்டு பார்த்துச் சொல்லிய பசுவை விரதத்திற்கு யேற்றபடி பாகஞ் செய்ய அஞ்சேன்.

**சுவாமி :** நல்லது. என் விரதத்திற்கு யேற்றபடி செய்ய அஞ்சமாட்டீரோ?

**நாயனார் :** சுவாமி! பரம சாதுக்கள் தனக்கு வேண்டியதைக் கேட்டால் அதைக் கொடுத்துதானே தீரவேண்டும்? தாங்கள் சொன்னதைச் செய்யவும் அஞ்சமாட்டேன். திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.

## பாட்டு

(நீ யென்னடாவதிஷ்டா என்ற மெட்டு)

இராகம்: இந்துஸ்தான் தோடி

**சுவாமி :**

170. செய்யவு மஞ்சே னென்றாய் அன்பனே
திருட்டும் புரட்டுமல்ல ஔவை

சையெனத் திரியே லென்றோது மொழிக்காக
அஞ்சினே னுன்முன் சொல்ல (செய்)

உரை

அன்பரே! களங்கமற்ற மனதுடன் நான் சொன்னதைச் செய்ய அஞ்சேனென்குறீர். என்னிடத்தும் திருட்டும் புரட்டுங் கிடையாது. சையெனத் திரியேல் என்ற அவ்வையார் மொழிக்குப் பயந்தேனே ஒழிய வேறல்ல.

**நாயனார் :** அடிமைப் பட்டவனிடத்தில் வசனிக்க அச்சமென்ன வந்தது. தெரிவிக்கட்டும்.

**சுவாமி :** அன்பரே! அப்படியல்ல. சொற்சோர்வு படேல்; மிகைப்படச் சொல்லேல் என்றிருப்பதால் மயங்கினேன். ஆனால் உம்மிடத்தில் இச்சகமாய்ப் பேசி வஞ்சகஞ் செய்திருப்பவர்களை அளவிடப்படாமல் இதற்குமுன் பார்த்திருக்கலாம். அவர்களைப் போன்றவன் நானல்ல.

**நாயனார் :**

சுவாமி! அடிமையினிடம் என்னதான் வஞ்சகமாய்க் கேட்கப் போகின்றது? நானும் அப்படி நினைக்கவில்லை. உண்மையைத் தெரிவிக்கட்டும்.

பாட்டு

**சுவாமி :**

உண்மை நான் உண்ணும் பசு நரபசு
ருத்திர தேசத்திலே -அந்த
வண்மையைக் கேட்டாற் றெரியுமே பொய்யல்ல
வஞ்சகமோ இத்திலே (செய்)

உரை

ஓ மறையவரே! என்னிடத்தும் வஞ்சகமில்லை. பொய் சொல்வது மில்லை. நான் வாசஞ்செய்த உருத்திர தேசத்தார்களை விசாரிக்கில் தெற்றென விளங்கும். அதாவது நான் உண்ணும் பசு நரபசுவே யாகும்.

**நாயனார் :**

சுவாமி! இதைப்போய் வடதேசத்திலா கேட்கவேண்டும். நரப்பசு என்ற விபரத்தை அறிவிக்கவேண்டும்.

## பாட்டு

**சுவாமி :**

மாமறை வேதங்களை உணர்ந்தெழில்
வாழுங் குலத் தோங்கும் - மிக
வாம குடிக்கொரு பிள்ளை யாக
வேணுமாகா தவையவ தீங்கும் (செய்)

## உரை

ஹே கொடைவள்ளலே! மேலான நான்கு வேதங்களையும் உணர்ந்து அவ்வேதத்தின் வழியே நடக்கும் வேதியர் குலமாக இருக்க வேண்டும். அம்மேலான குலம் விளங்கத் தொன்று தொட்டு ஒரு பிள்ளையாக இருக்கவேண்டும். அவ்வாறு வந்த குடி ஒன்றாகும். பிள்ளைக்கு அவையவ குற்றங்களிருக்கக் கூடா.

## மேற்படி பாட்டு

அருமருந் தென்னப்படும் இளையோன்
ஆகிய பூணூலோன் - கற்பத்
தருகாம வல்லிபோல் வளரைந்து வயதுள்ள
சத்வ குணசீலன் (செய்)

## உரை

**மேற்படி :**

கேளும் வேத சிரோன்மணி! பெற்றோர்க்கு அரிய சஞ்சீவியும் அமுதமும் போல நினைத்து வளர்க்குஞ் சிறுவனுக்குப் பூணநூல் கல்யாணம் ஆகி இருக்க வேண்டும். கற்பகத் தருவின் மீது படருங் காமவல்லிக் கொடிபோல் வளருங் குழந்தை ஐந்து வயதாயிருக்க வேண்டும். அதுவுஞ் சாந்தகுண ரெத்தினமாயிருக்க வேண்டும். அன்பரே இவ்வளவுதான் சொல்ல நாவெழுந்தது. இனி சொல்லத் துணியவில்லை.

**நாயனார் :**

சுவாமி! என்ன விசேஷமாய்ச் சொல்லிவிட்டது. நரபசு இன்னதென்று விளங்கிற்று. மேல் தெரிவிக்க வேண்டுகிறேன்.

பாட்டு

**சுவாமி :**

கண்ணுக் கினிய பிள்ளைதனைச் செய்யுங்
காரிய மொன்றுண்டு - சொன்னாற்
புண்ணிற் கோலமிட்டது போலாகு மென்மேற்
பிணக்குச் செய்வாய் வேறுண்டு. (செய்)

உரை

ஹே தர்மாதிபதியே! நேத்திரம்போல் காத்து வளர்க்கும் அந்தப் பிள்ளையைச் செய்யவேண்டிய காரியம் ஒன்றுண்டு. அதைச் சொல்வேனானால் புண்ணில் கோலிட்டது போல் இருக்கும். அதனால் என்மேல் வருத்தமடைவாய்.

**நாயனார் :**

சுவாமி! எத்தனை விதமான வார்த்தை வந்தாலும் அடிமைக்குத் திருப்தியே தவிர வெறுப்புங் கோபமுமில்லை. சொல்லட்டும்.

பாட்டு

**சுவாமி :**

இல்லை யானாற் சொல்லுவேன் விபரத்தை
இன்பமாய்க் கேளாற்றி - பழி
சொல்லாதே பிள்ளைக்கு நீராட்டி சீராட்டி
சோதி தனை போற்றி. (செய்)

உரை

அன்பரே! என்மீது கோபப்படாமலிருந்தால் சொல்லத் தடையில்லை. கேட்டு பின்னால் பழி சொல்லாதே. அதன் விபரம் யாதெனில் பெற்றோரிருவரும் சாந்த மனதுடன் பிள்ளைக்குத் திருமஞ்சன நீரால் நலுங்கிட்டு, ஆடையாபரணங்களால் அலங்கரித்து, அமுதம்

ஊட்டி ஆராட்டி தாலாட்டி அப்பிள்ளை நினைவுடனிருக்க சர்வசாட்சியாகிய சுத்தபிரம்ம தியானத்துடன்... அன்பரே சொல்லவா? கேட்குறீரா? அலட்சியமாயிருக்கிறது போல் முகக்குறியில் தெரிகிறதே.

### உரை

**நாயனார் :**

சுவாமி! கேட்டுவரும் போதே மதிகெட்டா போச்சு? இல்லை. திருந்த சொல்லட்டும்.

### பாட்டு

**சுவாமி :**

பெற்ற தாயார் பிடிக்க கைவாளால்
பிதாவுங் கழுத்தறுக்க - அல்லல்
சற்று மில்லாமலே துண்டு துண்டாகச்
சதைகளையும் நொறுக்க. (செய்)

### உரை

ஹே அறக் காதலரே! சிறப்போங்கிய அக்குழந்தையைப் பெற்றவள் மடிமீது வைத்து அணைத்துப் பிடித்து முகம் பார்த்திருக்க, பெற்றவன் நிற்சலனாய் வாளெடுத்து சிரசை பிடித்து கழுத்தை அறுக்க வேண்டும். மனதில் யாதொரு துக்கமும் கண்ணீரும் வரப்படாது. பின்னும் அறுத்த குழந்தையின் அவையவங்கள் மாமிசங்களைப் பெற்றவள் பொடித்துக் கொடுக்க வேண்டும். பின்னும்

### பாட்டு

**மேற்படி :**

தாயின் கைபா கமதாய்ப் பலவித
சம்பா ரங்கள் கொட்டி - சமையல்
நேயமுடன் செய்தா லுண்ணும் வழக்கம்
நாமிச் சையைப் பாராட்டி. (செய்)

### உரை

அன்பரே! அவ்வாறு பொடித்த இறைச்சியைப் பல வாசனை வஸ்துக்களைக் கூட்டி வெகு அன்புடன் பெற்றவள் சமையல்

செய்ய வேண்டும். அப்படிச் செய்து அன்னத்துடன் விசுவாசமாய் அளித்தால் நானும் விஸ்வாசமாய்ச் சாப்பிடுவேன்.

### பாட்டு

**மேற்படி :**

இப்படி என்விரதம் இதின்படி
இல்லாவிடி லருந்தேன் - யாதுந்
தப்பித மில்லாமற் செய்யப் பிரியமோ
சாற்றும் பசித்து வந்தேன். (170) (செய்)

### உரை

**மேற்படி :**

அன்பரே! இது என் விரதமாகும். இந்த விபரத்தில் தவறினால் நான் உண்ணவுமாட்டேன். குற்றமில்லாமல் ஆதிமத்தியாந்தம் வரையில் பெற்றோரிருவரும் மனம் ஒத்து செய்ய வேண்டும். சம்மதமானால் சொல்லும். இல்லாவிடில் பேசாமல் போம்.

**நாயனார் :**

சுவாமி! பேசாமல் போகத்தானோ சுவாமிகளை இவ்வளவு கஷ்டப்படுத்தி பிரார்த்து கேட்டுக் கொண்டது? சுவாமிகள் விரத சம்பந்தம் எதுவோ அப்படியே செய்குறேன்.

### விருத்தம்

**சுவாமி :**

171. சொன்ன தெல்லாம் ஞாபகத்தி லிருக்குதோகாண்
துணிந்தொப்புக் கொள்வீரா சொல்லுந் சொல்லிப்
பின்னடைத லாகாது இதனி லேதும்
பிசகிருந்தால் விடமாட்டேன் சொன்னேன் சொன்னேன்
பன்னு பகலோன் எங்கிருக்கான் பாரும்
பசிதாளே னிப்பொழுது சாயு முன்னே
சொன்ன பிள்ளைக் கறியமுது படைக்குமுன்னந்
தோத்திடவே தாரை என்கை வாத்திடாயே. (171)

## உரை

ஹே தர்மசீலரே! இப்போது நான் சொல்லி வந்த வகையில் ஆதிமத்தியந்தம் வரை கவனித்து சித்தப்படுத்தினீரா? ஏதேனும் மறதி உண்டோ?

**நாயனார் :** சுவாமிகள் திருவாய் மொழிகள் ஆதிமத்தியாந்தம் வரையில் ஞாபகபடுத்தினேன்.

**சுவாமி :** கேட்டவரையில் சம்மதந்தானா?

**நாயனார் :** சம்மந்தான் சுவாமி.

**சுவாமி :** ஓய் திடமாய்ச் சொல்லும்.

**நாயனார் :** திடமாய்ச் சொல்கின்றேன்.

**சுவாமி :** ஓய் உலக அனுபவம் எப்படியெனில் ஓர் எதார்த்த வாதியினிடத்தில் முன்வராமல் ஒளிந்து திரியும் ஓர் நயவஞ்சகனைச் சமயபேதமாய் நேரில்கண்டுவிட்டால் அம்மெய்யாளன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சரி சரி என்று ஒப்பிப் புறம்போனதும் அவ்வுண்மையாளன் தந்த வினாக்களை யெல்லாம் அலட்சியஞ் செய்தது போல் ஒக்குமோ?

**நாயனார் :** சுவாமி அடிமையை நயவஞ்சகனாய் பாவித்ததா? உண்மையுளோ னென்று பாவித்ததா?

**சுவாமி :** அன்பரே! என் மனதுக்கு உம்மை உண்மையாளனாகத்தான் நினைக்கின்றேன். உன் மனம் எப்படியோ நானறியேன். இக்காரியத்தில் பிசகில்லால் நடக்க உமக்குச் சம்மதமா? சம்மதமென்று சொல்லிப் பின்வாங்குவிரேயானால் லேசில் விடமாட்டேன். கண்டிப்பாய்ச் சொன்னேன். கவனித்துப் பதில் சொல்லும்.

## விருத்தம்

**நாயனார் :**

172. மதிகதி மாறினும் மண்வானங் கீழ்மே லானாலுஞ்
சதிக்கிட மாக வொன்றுந் தவறியான் நடக்கேனென்முன்
இதுசொல வேண்டாந் தாங்களிட்டம் வைத்தென் னூடூர்ந்தால்
அதுமுதலாக வெந்த னாவி கேட்டாலு மீவேன். (172)

உரை

**நாயனார் :**

சுவாமி! தாங்கள் அடிமையை யிப்படி சொல்லப்படாது. கவனிக் கட்டும். சந்திர சூரியர்கள் தம் கெதி மாறினாலும், விண்ணுலகம் மண்ணுலகமாகி மண்ணுலகம் விண்ணுலகமானாலும் அடிமை சத்தியந் தவறி நடக்கமாட்டேன். சுவாமிகள் இஷ்டம் வைத்து இப்போதே என் பின்னே வரட்டும். வந்த அளவில் என் பிராணனைக் கேட்டாலுங் கொடுக்கத் தடையில்லை.

**சுவாமி :**

சந்தோஷம் அன்பரே! இதில் ரொம்பவுங் கவனிக்க வேண்டும். இதோ பாரும் சூரியன் எம்மட்டிலிருக்கின்றான்.

**நாயனார்:**

சுவாமி! உச்சியிலிருக்கின்றான்.

**சுவாமி :**

சரி. கவனித்தீரா. இப்பொழுது மலைவாய் மறையுமுன்னாக என் விரதம் குறைவுபடாமல் சொல்லிய விபரப்படி பிள்ளைக்கறி படைப்பேனென்று நானும் நிச்சயிக்க சர்வ சாட்சியும் ஒப்ப தாரை வார்த்து கொடும்.

பாட்டு

(ஆவியுடல் மெய்மறந்து என்ற மெட்டு)

**நாயனார் :**

173. பிள்ளைக் கறியென்ற என்னை
வள்ளலே கேட்டதின் பின்னே
தெள்ளித் தாரை வார்ப்பேன்
ஐயனே திருக்கரத்தில் - தெள்ளி (பிள்ளை)

உரை

**நாயனார் :**

சுவாமி! இத்தனை விதத்தில் தெளியச் சொல்லியும் நிச்சயப் படாமல் தாரை வார்த்துக் கொடுக்கச் சொல்லிற்று. அதுவுஞ் சம்மதந்தான். பெற்றுக் கொள்ளட்டும்.

**சுவாமி :**

பக்த சிரோன்மணி! கேட்பதற்கெல்லாஞ் சரி சரி என்று உடன் பாடாக குதர்க்க மன்னியில் உட்படுகிறதைப் பார்த்தால் எனக்கே சந்தேகிக்கிறது. நீர் பிராமணனானதினாலே ஏதாவது மனதுக்குச் சங்கடமாயிருக்கினும் இதைச் செய்ய வேண்டாம்.

**பாட்டு**

**நாயனார் :**

சிந்தையில் வருத்த மில்லை
தந்திடத் தவணை யில்லை
மைந்தன் கறிசெய்ய போய்வாரேன் - சுவாமி
உமக்கு மைந்தன் கறிசெய்ய (பிள்ளை)

**உரை**

சுவாமி! என் மனதில் லேசமும் வருத்தங் கிடையாது. தங்கள் மனம் போல் செய்து அளித்து சுவாமிகள் ஆசீர்வதிக்கப் பெற்றுக் கொள்கிறேன்.

**சுவாமி :**

ஹே ஜீவகாருண்யா! இன்னமுஞ் சொல்லுகிறேன். கேள். இத்திருப்பணியின் பாரம் இவ்வளவு ஆகுமென்று தெளிந்து தாரை வாரும். யோசித்து செய்யும். நீரோ பிராமணன். நடக்கப் போகிறதோ கொலை. அதனினும் கொலைக்கு உட்படும் பாத்திரமோ பிள்ளை. அதனினும் பெற்றோரால் செய்யும் வேலை. இதுவும் தெய்வமும் சாத்திரமும் உலகமும் சுற்றத்தாரும் சம்மதிக்கப்படாத காரியம். இந்தப் பெருஞ்சுமையை நீர் ஏன் தாங்க வேண்டும்? தக்கதல்லாததைச் சான்றோருஞ் சம்மதியாரென்பது போல் வீண் சங்கடப்பட வேண்டாம். நாம் பேசியவரையில் இருக்கட்டும். விடும் விடும். இதற்காக நான் சொன்னேனென்று சஞ்சலம் வேண்டாம். பின்னால் இகழ்ச்சி யில்லாமலிருக்கட்டும். போய் வாரும்.

**பாட்டு**

**நாயனார் :**

மடமை குணம் வெறுத்து
உடலைத் தராசில் வைத்து

திடமாய் அளித்தா ரில்லையோ - இது
பெரிதோ திடமாய் (பிள்ளை)

உரை

சுவாமி! அயோத்தி மாநகர ரவிகுலசிபி சக்கரவர்த்தி வேடனால் வாதிக்கப்பட்டு தன்பால் அபயம் புகுந்த புறாவைக் காக்க வேண்டி அவ்வேடன் கேட்டபடி புறாவின் மாமிசத்திற்குப் பதிலாகத் தன் சரீரத்தை அறுத்துத் தராசில் வைத்து கொடுத்ததிலும் இது அருமையா? அல்ல. உடன் செய்து அளிப்பேன்.

**சுவாமி ,:**

அன்பரே! ஓகோ சரி சரி. சிபிச்சக்கரவர்த்தி தன்னுடலை அறுத்தான். நான் பிறர் உடலை அறுக்குறேன். இதில் வந்த கஷ்டமென்ன என்னுந் துணிபோ? தெரிகிறது உமது யோசனை. மிக்க தெளிவான யோசனை அன்பரே. பிராமணனினும் நல்ல சதுரன்.

பாட்டு

**நாயனார் :**

மன்னு முங்கள் தேச பச்சை
முன்னவா நீருண்ணு மிச்சை
இன்ன மென்ன வேணுஞ் சொல்லுவீர் - அதைதருவேன்
இன்னு மென்ன. (பிள்ளை)

உரை

சுவாமி! முன்னாலேயே என் பிராணனைக் கேட்டாலும் கொடுக்க அஞ்சேனென்று சொல்லியிருக்கிறேன். அல்லாமலும் இப்போதே இந்தத் தேகம் வேண்டுமா கொடுக்கிறேன். இது மாத்திரமல்ல அனுபவத்தில் தாங்கள் வசித்த தேசத்தில் முக்கியமாய் இச்சித்து அருந்தியது சொல்லாமல் பாக்கியிருந்தாலும் தயவு செய்து சொன்னால் அதன்படி செய்ய பாத்தியவான் நானே.

**சுவாமி :**

அடே அப்பா. என்ன தைரியம்! என்ன வலிவு! என்ன சாதனை! ஏன் காணும், க்ஷத்திரிய சூத்திரருக்கல்லோ இவ்வளவு திடம் வேண்டும்! பிராமணனாகிய உமக்கு இவ்வளவு துணிவு ஏதுங் காணும்?

**நாயனார் :**

சுவாமி! ஏன் துணிவு வரப்படாது? மாயா, கற்பனையாலுண்டாகிய பிரபஞ்சமனைத்தும் பொய்யென்றுரைத்தால் இந்தச் சடம் மெய்யாகுமா?

**சுவாமி :**

அடடா ஓகோ பொய்யான காரியத்தைதான் நான் விரும்பினேனோ? அப்போது நான் எடுத்த விரதமும் பொய்தான். அன்பரே! உன்னால் இப்போது புத்தி வந்தது. இது வரையிலும் பொய்யை மெய்யென்று நம்பி கெட்டுப் போனேன். இனியாவது தப்பித்துக் கொள்வேன். போகட்டும். இந்த விரதமும் முடிவாகட்டும்.

**பாட்டு**

**நாயனார் :**

சாற்றி யபடி வருவேன்
ஆத்தி யடியில் பெரியோன்
காத்திருக்க வேணு மையனே - புறம்
போகாமல் காத்திருக்க. (பிள்ளை)

**உரை**

சுவாமி! அடியேன் பிரார்த்தித்து கேட்டுக் கொள்வது யாதெனில் சுவாமிகள் சாற்றிய கெடுப்படி வருமளவும் இந்த ஆத்தியடியிற்றானே சுவாமிகள் காத்திருக்கும்படி வேண்டுகிறேன்.

**சுவாமி :**

அன்பரே! நீர் கேட்ட கேள்வி நன்றாயிருக்கிறது. பந்த பாசமற்ற சன்யாசிக்கு உலக விசாரணை ஏதுக்கு என்றிருக்கும். இவன் சொன்னது என்ன நிச்சயம்? இவ்வளவு பெருத்த காரியத்தைச் செய்து வந்தாலும் ஏற்பானோ? காப்பானோ? என்னுஞ் சந்தேகம் வந்துவிட்டதோ? வந்திருக்கலாம். உம்மை வேண்டி வந்ததும் இதுவரையும் காத்திருந்ததும் துறவு சட்டத்துக்கு விரோதந்தான். இன்னும் என்ன காரியங் கேட்கப் போறீரோ? தெரியவில்லையே!

**பாட்டு**

**நாயனார் :**

முறை பிறழாம லோதும்
இறைவர் வந்ததே போதும்

கறிசமைக்கப் போயி வாறேனான் - தேவனே
பிள்ளை கறிசமைக்க. (173) (பிள்ளை)

உரை

சுவாமி! தாங்கள் எடுத்த விரதத்தை உலகம் ஏற்காதாயினும் அடிமையிடம் வஞ்சமற்று ஓதிக் கண்டித்துக் கேட்கும் சுத்த நின்மல கருணைநாதன் அடிமையை வேண்டி வந்ததே நாயினேன் செய்த பெருந் தவமாகும். ஆகையால் மனஸ்தாபம் வேண்டாம். சொன்ன பாகஞ் செய்தற்குப் போய் வருகிறேன்.

விருத்தம்

**சுவாமி :**

174. உலகெலாந் தாதா வென்ன ஓங்கி வாழன் பனேகேள்
இலகுமிவ் வாத்தியின் கீழிருந் தெதிர்பார்த் திருப்பேன்
பலகீதை ஓத வேண்டாம் பாலனார் கறியி லேதும்
கலகமில் லாமற் செய்யக் கைதாரை வார்த்துச் செல்வீர். (174)

உரை

ஹே அறக்கொடையாளனே! உன் வாக்கியத்தைக் கேட்கக் கேட்க எனக்கு மிக்க ஆனந்தமாயிருக்கிறது. நீர் வேண்டியபடி உமக்குத் தெரிந்த ஜாலத் தந்திரங்களைப் பேசிக் கொண்டிருக்க வேண்டாம். பிள்ளைக்கறியில் குறைவுமில்லாமல் செய்கிறேனென்று இதோ கையில் தாரை வார்த்துப் போங் காணும்.

விருத்தம்

இராகம்: நாட்டை

**நாயனார் :**

175. அண்ணல் பெருங்கண பதீச்சுர வனத்தில்
ஆத்தியடி யமர்ந்தி ருக்கும் வைரவர்க்குப்
புண்ணியஞ்செய் சிறுத்தொண்ட னான நாயேன்
பிள்ளைகறி சோறு மிகுபுகழி னோடு
விண்ணவரு மண்ணவரு மூவர் காண
விக்கின மிலாதளித்து ஆள்வே னென்று
எண்ணியமே டத்திங்கள் பரணி நாளில்
ஏத்தினேன் தாரை தங்கை ஊத்தினேனே. (175)

## உரை

தெய்வீகம் பொருந்திய அகண்ட இக்கணபதீச்சுர வனத்தில் பசிய ஆத்தியடியில் அமர்ந்திருக்கும் வைரவம் பெருமாள் திருக்கரத்தில் சன்மார்க்க சர்ச்சன சங்கம சத்துக்கள் திருப்பணிக்கிச் செய்து உலக பிரச்சித்து பெற்ற ஜீவரட்சக புண்ணியத்தைச் செய்து வந்த சிறுத்தொண்டனான நாயினேன் தேவரீர் விரதத்திற்கு ஒத்தபடி சொல்லுங் கிரமத்தில் தவறாமல் பிள்ளைக்கறி செய்து திருவமுது அளிக்கிறேனென்று சொல்லுதற்கரிய சித்திரை மாதம் பரணி நட்சத்திரங் கூடிய சுபதினத்தில் திரிகாரண சுத்தியாய் இதோ தாரை வார்த்தேன் சுவாமி. இதற்கு விண்ணுலகத்தவரும் மண்ணுலகத்தவருந் திரிமூர்த்திகளுஞ் சாட்சி.

## விருத்தம்

**சுவாமி :**

176. காட்சி என்யெண்ணம் போல கட்டுப் பட்டா னிதற்கு
ஆட்சியாய்த் தேவர் மூவர் அருந்தவ முனிவர் சாட்சி
மாட்சிமை யுள்ள பக்தா வார்த்தகைத் தாரை பெற்றேன்
தாட்சி பண்ணாதே சென்று சடுதியில் வந்தி டாயே. (176)

## உரை

**சுவாமி :**

பளா பளா பளாமிக்க ஆனந்தங் கொண்டேன். நான் பலவிதத்திலும் திரிகால வர்த்தமானங்களைக் காட்டிப் பயமுறுத்திக் கேட்டுக் கொண்டதற்கும், உட்பட்டு துணிந்து நீரை யான் கையேற்றுக் கொண்டதற்கும் விண்ணாட்டாரும் மண்ணாட்டாரும் திரிமூர்த்திகளும் தவமூர்த்திகளுஞ் சாட்சி. ஓ பெருந்தவச் செல்வரே! நீர் கொடுத்த தந்த நீரைச் சம்மதித்துப் பெற்றுக் கொண்டேன். இனி தவணை பண்ணாதீர். சடுதியில் கொண்டு வாரும்.

## பாட்டு

இராகம்: நாட்டை

**நாயனார் :**

177. போறேன் இதோ போறேன்
இதோ போறேன் இதோ போறேன் (போறேன்)

சீராய்ப் பிள்ளைகறி சமைத்துத் தேவரிடம் வாரேன்
வீராதிபர் சேரன்மந்திரி வீர சோகன் பேரன்
தீரன் ப்ரவு ஸ்தான ஞான பிரகாசன் குமாரன் (போறேன்)

பல்லவர்பரம் பரையில் பாங்கடைந்த தந்திரி
வல்லவனாம் நரசிம்மன் வரிசைபெற்ற மந்திரி
தொல்லையில்லாச் சோதிபதந் தொழுதாளச்செய் தர்மன்
சல்லாபதந்தி வாகன் சதுர்மறைகொள் பிரமன். (177) (போறேன்)

## உரை

சர்வேசா! வீரப்பரதாப நீதி மன்னனாகிய சேர மகாராஜனுக்கு அதிஅன்புள்ள மந்திரியாயிருந்த வீரசோகப் பண்டிதர் குமாரன், சிவபக்தியில் சிறந்த சோழமகா ராஜனுக்கு மந்திரியான சிவபிரகாச பண்டிதர் புத்திரன், காஞ்சிரபுரம் பல்லவ பரம்பரையில் வந்த கௌட மகா ராஜனென்னும் ஐயடிகள் காடவர் கோன் மகாராஜனுக்கு அரியமந்திரியும் கஜவாகனாதிபதியுமான யான் அந்த ஐயடி யிரணியவர்மனால் கருணை கூர்ந்தளிக்கப்பட்ட திரவிய சகாயத்தினால் எனது பிறவியை ஒழிக்கவேண்டிச் செய்துவந்த சாத்துக்கள் திருப்பணியில் வந்த குறைக்கு நேரிட்ட அருள் ஞான மகாமுனிவர்க்கு தான்கொண்ட அகோரவிரதத்தை நிறைவேற்றும்படி பிள்ளைக்கறி சமைக்கப் போகிறேன்.

## பொது நடை

நாயனார் திருப்பணி நித்திய கால அனுபவப்படி உதைய காலமே திருக்கூட்ட தரிசனை இல்லாமையைப் பெரும்பிழையாக நினைந்து, மனையாட்டிக்கு அறிவித்து விட்டு, உதயத்திலே வெளிச்சென்று தான் வசிக்கும் நகர் நான்கு வீதியையும் பார்த்து, காலை 7 மணிக்கு தன்னகர் சுற்றுப்புறத்தில் அருகிலிருக்கும் தலமட வாசங்களைப் பார்த்துக் காணாமல் திரும்பி வந்து களைத்து மரமத்தடியில் படுத்துறங்கிய வரை 10 மணிக்குள்ளாகும். வைரவ மூர்த்தியார் உதயாதி 7 மணிக்கு நகர்வலம் பிச்சைகேட்டு மடாலயஞ் சென்று அம்மையாள் அனுபவங்கண்டு விடைகொடுத்து ஆத்தியடி சென்றதும் 10 மணிக்குள்ளாகும். நாயனார் படுக்கையை விட்டு எழுந்து மடம் வந்து மனையாள் விசாரணை தெரிந்து ஆத்தியடி சென்ற வரையில் மணி 11க்குள்ளாகும். சுவாமிகள் சம்பாஷணை முடிந்து உண்மை மொழி கூறித் திரும்பியது மணி 12க்குள்ளாகும்.

மனையாள் சம்மதங் கேட்டு பள்ளிக்கூடஞ் சென்ற வரையில் மணி 1க்குள்ளாம். பிள்ளையை வீட்டுக்கழைத்து வந்தது மணி 2. கறிபாக வகை செய்து வைரவ பிரானை அழைக்க அத்தியடி சென்றது மணி 4. சுவாமிகளும் அன்பரும் மனை வந்தது மணி 5. மோட்ச காலம் மணி 6. நமம்பார்பதி பதையே அரகர மகாதேவ.

## விருத்தம்

**நாயனார் :**

178. வறுமையிலா தருந்தவர்க்கு உறுதி சொல்லி
மகவு கறியமு தளிப்பே னிங்குசற்றுப்
பொறுமையுடன் நம்பியிரும் வருவே னென்று
புகழ்புளகங் கொண்டுரைத்து வந்தேன் றேவி
வெறுமையற கருத்தறியே னென்ன தீங்கோ
மெய்மை யறியாமற் செய்பிழையால் நெஞ்சம்
சிறுமையடைந் தென்னென்னோ நினைந்து பொங்கிச்
சிதறுதே சிவசிவா பதறு தையோ. (178)

## உரை

மகேசா! இது வென்ன அன்யாயம்! ஐயோ. இதயம் நடுங்குகிறதே! தேகம் படபடவென்று ஆடுகிறதே! வியர்க்கிறதே! இதுவென்ன மோசம்! சர்வேசா! நிலையிலிருந்த மனம் மாறித் திறங்குலைந்து ஒன்றுந் தெரியாமல் திகைக்கிறதே. ஆத்தியடியிலிருந்த பெரியவர் தன் விரதபாங்கை யெல்லாஞ் சொல்லி நீ முடிக்கப்பட்டவனல்ல; ஆரம்பத்திலிருந்து முடிவு காலம் வரையில் பெருந்தொல்லையுந் துக்கமுங் கலகமும் உண்டாகும்; அதின் விசேஷ பலன் அறியாதே நீ நம்பி மோசம் போகாதே; நான் சொன்னேனென்று வருத்தம் வேண்டாம் என்று பல தடைவையில் தடுத்து தடுத்து சொல்லி நற்போதமேற்றிய ஜீவன் முத்தருக்குத் தரித்திர மில்லாமல் தாராதர்த்தம் வார்த்துக் கொடுத்து உறுதி சொல்லி நான் வருமட்டும் ஆத்தியடியிற்றானே யிருக்க வேண்டும். பிள்ளைக்கறி செய்து வைத்துக் கொண்டு வருகிறேன் என்று வெகு சந்தோஷத்தோடு வந்தேன். ஐயோ சுவாமிகளுடைய முகதரிசனத்தை விட்டு திரும்பியவுடன் அந்த நினைவு போய், என் மனையாட்டி நினைவு வந்து புத்தி மயங்குகிறதே! ஐயோ! அவள் விசாரணையுங் கருத்துந் தெளிய தெரிந்து கொள்ளாதது குற்றம். இம்மனம் மடமைப்பாட்டை அடைந்து

ஏதேதோ நினைத்து மேல் ஆத்திரம் பொங்கிச் சிதறுதே. சிவ சிவா. இதற்கு என்ன செய்வேன்?

## பாட்டு

இராகம்: ஸ்ரீராகம்

179. ஓகோ யிதற்கென்ன செய்வேன்
உலுத்த மனமே - என்னை
ஒழியாத் துயர்க் காளாக்கினை
இல்லை கனமே (ஓகோ)

பஞ்சுபடா பாடு பட்டும் பாரம் இல்லையே - என்
பைந்தொடியாள் தன்னா லென்ன வருமோ தொல்லையே
இந்த நாளாய் எடுத்தவத்தி லில்லை நலமே - ஐயோ
இன்று விரதம் முடிந்தா லல்லோ உண்டு பலமே
மாதவரிடம் நடந்த செய்தி மனைளா யிடமே - சொன்னால்
மகிழுவாளோ என்னை யிகழ்வாளோ எனக்கில்லை திடமே.
(179) (ஓகோ)

## விருத்தம்

இராகம் : செஞ்சுருட்டி

180. பிறந்தென்ன வளர்ந்தென்ன பேறு பெற்றுமென்ன
பெரும்புலவ னெனப்படித்துப் பேரவை கண்டென்ன
சிறந்தபெரும் வாழ்வுடைய செல்வ மிருந்தென்ன
திரிலோக மாளுமுடி சீமானாய் ஆயென்ன
அறந்தாங்கித் தவம்பலவும் அனுபவித் துமென்ன
அறத்தளவே முக்கால மறிந்தடங்கி யெல்லாந்
துறந்தாரின் செயலறியாத் துரோகியினுந் துரோகி
துக்ககடல் மூழ்கினதுந் தக்கதுவோ சிவமே. (180)

## பாட்டு

181. ஓம் அரகர சிவசங்கரனே உருத்தி ரேசா
ஊமையான் கண்ட கனவானது
என்செய்வெ னுமேசா! சொன்னால்
உலகமுஞ் சம்மதப் படாதே - பெருங்
கலகமென் றெண்வருந் தீதே
ஒவ்வாதே இவ்வாதே ஓம் (ஓம்)

## உரை

ஏ பார்பதி சமேதா! இந்தக் காரியத்தை உற்றுநோக்குங் காலத்து வாயில்லா ஊமையான் கனவில் கண்ட காட்சியை எப்படி பிறர் கேட்க சொல்ல முடியாதோ அதைப் போலானது. ஏனெனில் இதுவோ கொலைச் செய்கை; ஜீவ வதை; கருணையற் கொடிய தொழிலாகும்.

## பாட்டு

போற்றலிலாச் செய்கையை மாற்றி
உரைக்க வழி காணேன் - கொண்ட
பெண்டீர் மனமறிய சண்டை யிட்டு
வந்தவன் நானே போ போ
புத்தி கெட்டவனே யென்பாளோ? - ஞான
பித்து கொண்டனையே யென்பாளோ?
பொறுப்பாளோ வெறுப்பாளோ? (ஓம்)

## விருத்தம்

182. நல்லார்க்கு நிடேதமிது கேட்டாலு முடல்ந டுங்கும் நன்றில்லா
பொல்லார்க்கு விசேடமிது எவ்வெவர்க்கு மிகக்கொடிது போரில் மிக்க
வல்லார்க்கு எிலக்கணகு மாரனபி மன்னனுயிர் மாண்டா னென்றுஞ்
சொல்லார்க்குங் கேட்டபிதா வர்க்காதி தன்னகமே துணிந்திட் டாரோ. (182)

## உரை

முற்றும் உணர்ந்த காருண்யமாகிய கோட்டையுள்ளிருந்து தாரணை வாயிலைப் பற்றி அசைவற்றிருந்திய சமாதியிலிருக்கின்ற பெரியாருக்கும் இது முற்றும் விலக்கப்பட்டதே யாகும். அவர்களிந்த கொடிய பழியைக் காதில் கேட்டாலும் உடல் நடுங்குவார்கள். கனவிலுங் கருணை யென்பதை யின்னது என விசாரனை யில்லாத பெரும்பாவிகளுக்கு இந்தத் தொழில் செய்ய பேரானந்தமாயிருக்கும். ஆனால் எத்தேசத்திலும் எந்த ஜாதியாரும் மாச்சரியத்தினாலோ குரோதத்தினாலோ சாகசத்தினாலோ பிறர் கொலை செய்யத் துணிவார்கள். அதிலும் அன்னியமாயினுஞ் சொந்தமாயினுங் குழந்தையென்றால் அச்சமும் நடுக்கமும் உண்டு. மேலும் பிறர்

உயிர்வதை செய்து பாகம் பண்ண சாப்பிட்டு சிலர் தங்களுடலைக் காக்க நினைப்பார்கள்; தம் பிள்ளைக்கு ஏதேனும் விபத்து வந்தால் மிக்க வருந்துவார்கள். இது சகசம். முக்கியமாய் மனிதராய்ப் பிறந்து தனித்த அறிவைப் பெற்ற யாருக்கும், ஆண் பெண் அனைவருக்கும் இது மிக்க கெட்ட செய்கையே யாகும்.

அல்லாமலும் குருகுலத்தவர்களில் குரோதத்தினால் விளைந்த பாரத யுத்தத்தில் பஞ்சவர்களுந் துரியோதனாதியரும் சர்வசங்க பரித்தியாயராய் களத்தில் நின்று யுத்தம் பண்ணுங் காலம் துரியோதனன் மகன் இலக்கணகுமாரன் அர்ச்சுனன் மகன் அபிமன்னுவின் கையால் மாண்டானென்று காதில் கேட்ட பிதாவும் பிதா வர்க்கத்தாருங் கண்ணீர் விட்டு அழுது போர்க்களமே பெருந்துக்க சாகரத்தில் அழுந்தியது என்றால் யாருக்குத்தான் குழந்தை காதல் விட்டது? ஹா சிவமே.

## பாட்டு

சங்கை யில்லாமற் சொல்ல
வங்கையால் முணுமுணுப்பாளோ - நான்
சாற்றிடு முன்னந்த சூத்திரம் அறிவே னென்பாளோ
எந்த சாவித்திரி யம்மைக் கெட்டாளோ - அநுசுயா
தேவியே யிங்குதித் திட்டாளோ
சலிப்பாளோ கெலிப்பாளோ (ஓம்)

## உரை

நித்தியானந்த பூரணியான பராசத்தியின் அன்பே உருவாயெழுந்த தன்மையாயுள்ள சாவித்ரியம்மையாரும், உத்தமோத்தம புருஷனாகிய சத்தியவானும் பூருவதொந்தானுபவப்படி சதிபதிகளாகியும், முன்னால் சத்துருவினாலே தனது நாடிழந்தும் தாய் தந்தைகளைப் பிரிந்தும் நாரதர் உபதேச பலத்தால் வனவாசிகளாகி, ஜீவ வித்து வருங் காலம் யாழ்வலோன் குறிப்பிட்டு உரைத்த தினத்தில் சத்தியவான் எமவாதைக்கு ஆளாயினானெனத் தெரிந்து தன்மடியேத்தி காத்தும், மாயாபந்தத்தால் தன் புருடனுயிரைக் கவர்ந்து செல்லும் யமனோடு பின்தொடர்ந்து வாதாடி முன்னிழந்த நாடு நகரங்களையும் யேற்று, சந்ததி வரத்தோடு தன் புருஷனுயிரையும் பெற்று யமதரிசனங் கண்டு தர்க்கித்த சாமர்த்தியமுள்ள சாவித்ரி அம்மைக்குச் சமானமுள்ளவள் ஆவாளோ இந்த சம்பரட்சணா தேவி?

திரிகாலந் தெரிந்து பரமன் திருவடிப் பற்றறாதிருக்கும் வீணைக்காவலன் ஒரு சமையம் நான், எனது எனும் அபிமான அகச்செருக்கு உடையாரைத் தாழ்த்திச் சமப்படுத்த வேண்டி அஸ்வினி தேவர்களால் கொடுக்கப்பட்ட வல்லிரும்பைக் கடலையாக்கி எடுத்துச் சென்று மலைமகள், மலர்மகள், கலைமகள் மூவர் பாலுங் காட்டி இதை அடிமைக்குப் பொரித்துக் கொடுக்க வேண்டுகிறே னென்க. அம்மூவரும் தம்மால் முடியாது எனக் கேட்டு பிர்ம்ம புத்திரரான அத்திரி மகரிஷியின் பத்தினியான அநுசுயா தேவியினிடஞ் சென்று வருந்தி பிரார்த்தித்துக் கொள்ள, அந்த ரிஷி பத்தினி அதற்கு இணங்கி தனது சத்திய முந்தானை யோட்டிலதை யேற்று, பொரித்துக் கொடுக்க, பெற்றுச் சென்று மூன்று அம்மையாரிடமுங் காட்ட அவர்கள் வெட்கி தம்பதிகளிடத்தில் அறிவிக்க, அம்மூவரும் மாறுவேடம் பூண்டு ரிஷிபத்தினியைச் சோதிக்க தன் பதிவிரதா தர்ம்மம் விளங்க வேண்டி ஈஸ்பரனைக் கோசமறுந்து விழச்செய்தும் மூவரையுங் குழந்தைப் பருவமடையச் செய்துவிட்டாள். இந்தச் சங்கதி யாழ்வலோனால் விளங்கபெற்று மூன்று பிராட்டியாரும் பதைத்தெழுந்து வந்து ரிஷிபத்தினியின் கால் வணங்கி முப்பதி பாக்கிய மேற்று ஆசி பெற்று சென்றார்களென்றால் முக்கால முணர்ந்த அந்த ரிஷிபத்தினியுடைய தன்மை இத்திருவெண்காட்டானுக்கு வருமோ? அல்ல.

## பாட்டு

பிள்ளை என்ற வுடனே
துள்ளி உயிரை விடுவாளோ - அல்லால்
பெற்ற வருத்தமதை நந்தியே
அழுதிடு வாளோ - சித்த
பிரமை கொண்டெனனை தனிப்பாளோ
செய்யுந் தருமமீடேற நினைப்பாளோ
பூரணா காரணா (ஓம்)

## விருத்தம்

183. சத்தியவா னரிச்சந்திரன் மனைமக வென்றுணர்ந்தே யிடந்தனை மறந்தான்
நித்தியனாம் ராகவனும் மனைமக வென்றறிந்து நிலைகெட் டோய்ந்தான்

முத்தர்கள் முன்அனாதி மக்களெனத் தெரிந்தால் மோகித்
தாள்வார்
சத்தனுஞ் சித்தனு மானார் கேட்டபழி பெரிதுதவுந்
தனதென்றாலும். (183)

உரை

ரவிகுல திலகனான சத்தியபுருடனாகிய அரிச்சந்திரன் தன் வாக்கு தவறாமல் காக்க வேண்டித் தனது மனைவியையும் மகனையும் விலை கூறி விற்று, தானும் பறையனுக் கடுமையாகி மயான காவலனாயிருக்கையில் இறந்து போன பிள்ளையைத் தூக்கிச் சுடுகாடு வந்த மனைவி மக்கள் தனது என விசாரணையில் தெரிந்து மதியிழந்து கண்ணீர் விட்டு மூர்ச்சித்தான்.

நித்தியாத்ம புருடனாகிய ராம பிரானும் தனது மனைவியைத் துணிந்து கற்பத்தோடு காட்டில் விட்டுவிட, அவள் இருடியின் ஆச்சிரமமடைந்து பிள்ளையைப் பெற்று வனத்திலிருக்க, இது தனது பிள்ளை பெண்சாதி எனத் தெரிந்த சமயம் தன் குறையை நினைந்து கண்ணீர்விட்டு, தன்னை மறந்து பூமியில் வீழ்ந்தானென்றால் பிள்ளை யாசை யாரை விட்டது. அல்லாமலும்,

ஜீவன் முத்தர்களாகக் காட்டில் வசிக்கும் பரமான்மாக்களும் காட்டில் அனாதியாகக் கிடக்கும் குழந்தையைக் கண்டால் அன்போடும் எடுத்தணைத்து ஆதரிப்பார்கள். துறந்தார்களுக்கும் பிள்ளை என்றால் ஆசை விட்டதில்லையே! ஆயினும்,

முற்றுந் துறந்த முனிவர்கள் காய் கனி சருகு இலை சலம் காற்று பட்சணம் பண்ணிக்கொண்டிருப்பார்கள் என்றும், உண்ணாவிரதியாயிருக்கக் கற்பங்கள் உண்டு, சட்டை களைந்து இருப்பார்கள் என்பர். இது அப்படியில்லையே.

ஆறு மாதம் ஊண் உறக்கமின்றித் தவத்திலிருந்து 181-ம் நாள் பிள்ளைக்கறி சாப்பிடும் வழக்கமென்றால் உலகம் ஒப்பத் தகாத வார்த்தையாயினும் இவர் இஷ்டப்படியே பிள்ளைக்கறி படைப்பவர்களிருக்கலாமோ என யோசித்தால் அது மெய்யாகத் தெரியவில்லையே.

ஆனால் 6வது மாதம் ஒரு வேளை சாப்பிட எத்தனப்பட்டவர்க்கு மற்றுமிந்த ஒரு வேளை ஆகாரம் ஆறு மாதங் காக்குமா? இதையுந்

தள்ளி இருக்கப்படாதா? அல்ல. சித்த பேதகத்தால் வெறியர் உளறுகிறார் என்போமா? அப்படியுங் குண பேதகமாய்த் தெரியவில்லையே. குடிவெறியால் மாறிப் பேசுகிறாரென்போமா? அதற்கு வேண்டிய சாமான்களையுங் காணோமே. இதுவும் இச்சைபடி செய்யவோ பிற பதார்த்த மில்லையே. பிள்ளைக்கறி இது வேண்டுமெனில் எப்படிக் கிடைக்கும்? யாவர் ஒப்பிக் கொடுப்பவர்? எப்படியோ நமது விரதம் நிறைவேற வேண்டுமே? எனில் எவ்வகையிலும் திடப்பட்ட மொழியாய் இல்லையே? என்ன காலம்! என்ன விதி! என்ன பாவம்! என்ன செய்கை! ஆ.

### பாட்டு

பாவை மனதறிய மூவரும் எளிதோ வென்பாரே - அன்னூல்
பார்த்திருந்துந் தாரைவார்த்து வந்தவனவர் நேரே - பெரும்
பாவத்துக் கிடங் கொடுக்காதே இந்த
ஆபத்துக் குடன் போகாதே
கண்ணால் பாரும் என்னை காரும். (ஓம்)

### (உதாரணம் அத்தியின் மலரும்)

தாராளமாக வொருபோராட்ட மில்லாமலே போமோ! - அல்லால்
சண்டி முண்டி னாலிந்த காடுகொள் ளாதெனப்
பேராமோ! என்ன சங்கடமோ மறையோனே - தவம்
பங்க மில்லாதா ளிறையோனே
தற்பரா சிற்பரா. (181) (ஓம்)

### உரை

சிவமே! இது வேண்டாம். பிறர் உபகாரத்தை நம்பி துணிந்து செய்யலாமே எனில் நம்பலாகாது. நம்பினால் முடியாது. அது அபலமான காரியம். சரி இந்தப் பேத விசாரணை வேண்டாம். அதிலும் நாம் பெற்ற பிள்ளையே நிச்சயிப்போமெனில் அதுவும் பல விதத்திற் சங்கடங்களுண்டு. எப்படியோ ஈசா நான் பிடித்த உத்தம சத்திய நிற்மல பிரகிருதி வைராக்கிய ஞான தவம் தியானம் உண்மையானால் சர்வக்ஞ சாட்சியு முன்னின்று காக்கும். சந்தேகமில்லை. ஏ கணபதீசா! எனது நிஷேத கர்மம் பங்கமில்லாமற் காக்க நான் மனை செல்லுகிறேன்.

## விருத்தம்

**நங்கை :**

184. தொழகுலம் புலவரே என்தோன்றலே அடியாள் மிக்க
செழுங்கணபதி புறத்தே சென்றடை பெரியோர் செய்தி
குழையவென் காதில்கேட்கக் குறித்தரு ளாசை கொண்டேன்
தழைவுற மணங்களிக்கச் சாற்றுவீர் தேற்று வீரே. (184)

## உரை

மறைகுல பண்டிதரான எனது ஆருயிர்க் காதலரே! வளம்பெற்ற கணபதி வனத்தைச் சென்று, மகாமுனிவரின் விசேஷத்தைக் கேட்டு, என் காதுகுளிர ஆசையுள்ளவளா யிருக்கின்றேன். தங்கள் மனம் திருப்தியாகத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

## பாட்டு

(நானே பெறவரமிரண் டருள்வீர் என்ற மெட்டு)

**நாயனார்:**

185. வாசமிகும் பூங்குழல் நாயகியே
நான் சொல கேட்பையே
வாசமிகும் பூங்குழல் நாயகியே (வாச)

நீசொல் கணபதி வனஞ் சென்று
நின்மலர்ப் பரஞானியைத்
தன்மய முற்றிடு சேதியை (வாச)

பச்சைதிரு வாத்தியின் கீழிருக்க வனம் பெருக்கப்
பசிய துளிர்பூவும் மலர்ந்திருக்கத் தேனும் பெருக்க
அச்சமறக் கண்டவர்தான் கருக்கச் சிந்தை உருக்க
அஞ்சலித்தே னறிவானந்தம் ஆதரிக்கக் கண்ணே திறக்க
மைந்தனேநீ முன்வந்த தென்ன சொல்லென்றார்
மறையாமலே உரைசெய்திட நிறைஞானியர் குறைகண்டார் (வாச)

தம்மின்தவம் என்பதும் ஒன்றுரைத்தார் என்மனங் கரைத்தார்
தக்கதெது வென்றேனதை மறைத்தார் பல நிரைத்தார்
உம்மால் செய்யவல்லனோ என்றுரைத்தார் தானே சிரித்தார்
உண்மை சொல்லென்றே னதையுமங்கி கரித்தார் இதை விரித்தார்

நம்முனோர் முன்பின் கேட்டறியா வொன்றை
நாட்டினரித்தரை உத்தம மேட்டி தவத்துளசித்தரும் (வாச)

அந்தணர் குடிக்கோர் பிள்ளையைத் துணிந்து கையா லணைந்து
அன்னை பார்க்க அறுக்கணுமுன் தணிந்து மேலும் பணைந்து
விந்தை பாகஞ் செய்தன்புடனே யிணைந்து விண்ணோர் - கனிந்து
வேண்டலளித் தாலருந்து வேனான் துணிந்து கேளு முணர்ந்து
சம்மதஞ் சொல்லென்றார் அம்மனம் போல்தத்தம்
சத்தியங்கை அமர்த்திபின் நத்தி யுன்முகம் விளித்தேன்.
(185) (வாச)

## விருத்தம்

186. அவையவங்க ளூனமிலாக் குழைந்தை யாக
ஐந்து வயதுள்ளவ னாயரிய வேதம்
எவைகளுமாய்ந் தறிந்தவனாய்த் தாய்க்கோர் மைந்த
னிருப்பவனாய்க் குழந்தை ஒன்று கொண்டுவந்து
பவமகல திருமஞ் சனீரா லாட்டிப்
பத்தியுடனவன் தாயார் மடிமேல் வைத்துக்
கவலையில்லாத வன்றந்தை யறுக்கச் சேயின்
கறிசமைக்கத் தான்புசிக்கக் கருத்தென் றாரே. (186)

## உரை

கண்மணி! அதின் விபரத்தைக் கேட்பாயாக. அந்தணர் குடிக்கு ஓர் பிள்ளையாகவும் அது ஐந்து வயது உள்ளதும் அவயவ பழுது இல்லாததும் பூண்நூல் தரித்ததும் கல்வியில் சிறந்ததுமான புத்திரனுக்கு அபிஷேகஞ் செய்து, பெற்ற தாயார் மடியில் வைத்து, அணைத்து பிடித்துக் கொண்டு பார்த்திருக்கத் தகப்பன் கைவாள் கொண்டு அதை அறுத்துப் பக்குவப்படுத்திக் கொடுக்கத் தாயின் கை பாகமாய் சமையல் செய்து அன்புடன் தனக்கு அளிக்க, அதை ஈஸ்வரார்ப்பணம் பண்ணி தான் ஆசையுடன் சாப்பிடுகிறது வழக்கம் என்றும், அது தன்னுடைய விரதமென்றுஞ் செப்பினார்.

நங்கை :

சுவாமி! வேத வழிக்கும் பக்தி காண்டத்திற்கும் கர்ம காண்டத்திற்கும் ஆகமத்திற்கும் புராணங்களுக்கும் ஆன்ம சொரூப

ஞானிகளுக்கும் பொருந்தாத விதியாயிருக்கிறது. தங்களுக்கு எப்படி விளங்குகிறது?

**நாயனார் :**

மாதே! நீ சொல்லிய பாகங்களுக்கெல்லாம் பொருந்தாதென எனக்குத் தெரிந்தாலும் சுவாமிகளும் மேலும் மேலும் எடுத்துக் காட்டிற்று. நாம் கொண்ட விரதம் முடிந்தால் போதுமென்று சரி சொல்லி, தாராதர்த்தம் வார்த்து வருமட்டுங் காத்திருக்கும்படி கேட்டுக் கொண்டு வந்திருக்கின்றேன்.

பாட்டு

(பட்சமிருக்க வேணும் மன்னனே என்ற மெட்டு)

187. அஞ்சுகத்தைப் பழிக்கு மொழியாளே - யாதும்
வஞ்சமின்றிச் சொல் கெண்டை விழியாளே
யாசித்தேன் யானுன் யோசனை வேணும்
அம்பிகாபதியருள் பெறுவாயே நேர்
அன்புடன் உன்கருத்தை யறைவாயே. (அஞ்சு)

உரை

ஆ! கிளியின் சொல்லைப் பழித்திலகும் இனிய மொழியையும் சேல்கெண்டையை யொத்த வஞ்சமற்ற நேத்திரத்தையுமுடையவளே! உன்பாலுள்ள யோசனை எனக்கு முக்கியமாய் வேண்டியிருப்பதால் யான் யாசித்துக் கேட்கிறேன். ஆகையால் உமாமகேச்சுரம் கிருபாகடாட்சம் உனக்கு உண்டாகும். அதற்கு என்ன செய்யலாம்? அன்புடன் உன் கருத்தைத் தெரிவிப்பாய்.

பாட்டு

**நங்கை :**

கருத்துரை கேட்ட எந்தன் காதலனே பதில்
கழற மடமை யறி வேதிலனே
கற்றறியேனே கேட்டறி யேனே
கருத்துமக் கெப்படியோ அறையீரே என்னை
கவனிக்க வேண்டாங்காண் மறையோரே. (அஞ்சு)

### உரை

முற்றுணர்ந்த மறைகுல சிகாமணியாகிய என் காதலா! அடியாளைப் பரீட்சிக்க வேண்டாம். தாங்கள் சொல்லிய வகைக்குக் கருத்தென்ன வென்று கேட்டால் விவேகமில்லாத பேதமை குணத்தையுடைய நான் அந்தத் தந்திரங்களெல்லாம் தெரிந்தவளல்ல. தங்கள் கருத்து எப்படியோ அதைத் தெரிவிக்கட்டும்.

### பாட்டு

**நாயனார் :**

மறைமகளே வோர்பிள்ளை வேணுமடி அதை
வாங்கபணங் கொணர்வாய் நானுமடி
வையம்போய் நேரே வாங்கியே வாறேன்
மாவறி வானந்தருக்கிது காலம் மட
மங்கையே போய்வா வேண்டாஞ் ஜாலம். (அஞ்சு)

### உரை

ஓ வேதியர் குலவிளக்கே! வந்த அறிவானந்த சுவாமிக்கு இது காலம். பசி தீர வேணும். அதற்கு அவர் சொன்னபடி ஓர் பிள்ளை அவசியம் வேணும். அடியே, அப்பிள்ளை வாங்க வேண்டிப் பணங்கொண்டு வருவாய். நானும் சென்று உலகின்கண் நேர்பார்த்து வாங்கி வருகின்றேன். இந்தச் சமயம் வீண்காலம் போக்க வேண்டாம். ஜாலம் பண்ணாமலே போய் வா.

### பாட்டு

**நங்கை :**

ஜாலமில்லை பணத்தைத் கொடுத்தாலும் பெற்ற
தனையரைக் கொடுப்பாரோ எக்காலும்
சதியலவோ கொலை விதியலவோ
தரணிமுழுதும் அளிக்கினுமைந் தாலர் மனஞ்
சம்மதித் தளிப்பாரோ விலை பாலர். (அஞ்சு)

### உரை

நாயகா! பணங் கொடுப்பதற்கு ஜாலமில்லை. அது தயாராயிருக்கின்றது. பணத்தைக் கொடுத்துப் பிள்ளை வாங்க வேண்டு

மென்றால் எதற்காக விலைக்கு வாங்குகிறது? உலகின் வழக்கம் பிள்ளை யில்லாதவர்கள் தன் பூருவ கோத்திர வழியிலேயோ அல்லது சம்பந்த கோத்திர வழியிலேயோ தன்குடி விளங்க மக்களாசை நீங்க ஆனந்த மடைந்து வளர்க்க ஒரு புத்திரனையோ புத்திரியையோ சுவிகாரம் பெறுவார்கள். அதல்லாமல், இது கொலைக் காரணமாகிய பெரும்பழியாகும். பிள்ளை வேணுமென்று அகண்ட இந்தப் பூமி முழுதும் தர்த்தம் பண்ணிக் கொடுத்தாலும் பலர் மனச்சம்மதம் வேண்டும். ஆகையால் எக்காலத்திலும் விலைக் கொடுக்கிறேன்; பிள்ளையைக் கொடுவென்று கேட்டால் துணிந்து கொடுப்பார்களோ சுவாமி?

## பாட்டு

**நாயனார் :**

விலையில்லாமல் கேட்பதும் யாசகமா - அது
  மேதினிக்கி பொருந்தும் வாசகமா
மெல்லியளே உன்சொல் சரியோ
  மெத்த யேழையர் கலிதீராரோ - அவர்க்கு
மொத்த ரொக்கத்தைத் தந்தால் தாராரோ. (அஞ்சு)

## உரை

ஏ மெல்லியளே! உனது வாக்கியம் உண்மைதான். கிரையமில்லாமல் யாசகமாகக் கேட்டால் உலகஞ் சம்மதிக்குமா? அப்படி கேட்கும் வார்த்தையும் வார்த்தையா? ஜீவனத்திற்கு யேது மில்லாத மிக்க தரித்திரர்களுக்கு ஒன்றுக்கு மேல் பல குழந்தைகளிருக்கிறது. அதில் ஒன்றைத் தன்னுடைய தரித்திரந் தீர ஏன் கொடுக்க மாட்டார்கள்? அவர்களுக்கு மொத்த ரொக்கமாக அதிக திரவியத்தைக் கொடுத்தால் ஏன் ஆசையுண்டாகாது? தடையில்லாமல் போய் வா.

## பாட்டு

**நங்கை :**

தந்தாலும் எமன் கையில் துணிவார்கள் - பிள்ளை
  சஞ்சலமற்று நாளுந் தணிவார்கள்
ஓங்குவதே தாங்குவதே குடி ஓங்குவதே
  சாற்றரிய ஏழைகளா னாலும் - தர
சகிக்குமோ கோடி பண மானாலும். (அஞ்சு)

### உரை

சுவாமி! சொல்லுதற்கரிய ஏழையாயிருந்தாலும் கோடி கோடியாய்த் திரவியத்தைக் கொட்டிக் கொடுத்தாலும் அவர்களுக்குத் திருப்திப்படாது. அந்தப் பிள்ளை ரட்சிக்க வந்ததென்றும் ஒரு பெரிய நினைவு. எத்தனை பிள்ளை பெற்றாலும் வளர்க்கச் சலிக்க மாட்டார்கள். எமன் கையில் முழுமையுங் கொடுத்துத் துணிந்து வெறுமனையில் வாழ்ந்து பொறுத்திருப்பார்கள். உற்றார்க்கு ஒரு பிள்ளை கொடுக்க மாட்டார்களே சுவாமி.

### பாட்டு

**நாயனார் :**

பணமென்றால் பிணங்கூட வாய்திறக்கும் - முடி
 பாரந்தாங்கி யெவர்க்குங் கைவிரிக்கும்
பக்குவமே வைக்கும் பொக்கிஷமே
 பகைத்துகை வாங்கென்றாலு மற்றோர்கள் - நம்
பாக்கியத்தால் தாராரோ பெற்றோர்கள். (அஞ்சு)

ஹே பெண்கள் நாயகமே! பணமென்றால் பிணங்கூட வாய்திறக்கும் என்ற பழமொழிபோல் முடிதரித்து பூபாரந் தாங்கிய மன்னனும் பணத்தாசையினால் தான் தேடிய பொருளைப் பக்குவமாகப் பொக்கிஷம் வைத்து விட்டு யிரப்பார்க்கும் வறியார்க்கும் சிலவிட யில்லாதவனைப் போல கையை விரிப்பான். ஆகையால் நாம் கோபித்துப் பணத்தைக் கையில் வாங்கென்றால் பணத்தாசை பிடித்தவர்களில் பிள்ளையைப் பெற்றோர்கள் பாக்கியத்தை வாங்கிக்கொண்டு ஏன் தர மாட்டார்கள்?

### பாட்டு

**நங்கை :**

பெற்றவளறிவாள் பிள்ளை யினருமை - வம்ச
 பேருரைக்கு மென்பதும் அவர் பெருமை
பின்னா னந்தமே அறிவா னந்தமே
 பிள்ளையி னாசை கொள்ள கிடைக்காதே - இந்தப்
பேச்சு எவர்க்கும் ஐயோ அடுக்காதே. (187) (அஞ்சு)

## உரை

சுவாமி! பெற்றவளறிவாள் பிள்ளையின் அருமை என்றும், பிள்ளை ஆசை கொள்ளக் கிடைக்காதென்றும், உள்ள ஆன்றோர் வாக்கியப்படி நீடூழி காலம் வம்ச பேருரைக்க மைந்தன் வேண்டுமென்றும், புண்ணிய கர்ம காண்டத்தில் சொல்லியபடி பெருந்தவங்களைச் செய்தும், அகோர விரதங்களிலிருந்தும் பல புண்ணியம் மேலோர்கள் ஆசீர்வாதம் பெற்றும், அதனால்தான் அடைந்த இந்த மக்கள் செல்வம் மாளா செல்வமென்றும் எண்ணியிருப்பதும் பொய்யான இந்த உலகத்தின் கருத்து. அக்கருத்துள்ள இவ்வுலகத்தெவர்க்கும் இந்தப் பேச்சை பேசினால் ஒப்புமா சுவாமி? அல்லாமலும்.

## விருத்தம்

188. தரமறியா மோகினிக்கா யுருக்கு மாங்கன்
தன்மகனைத் தன்வாளால் சிதைக்க லானான்
தரணியாள் சோழனும் ஆவின் கன்றுக்காய்த்
தன்மகனை ரதக்காலில் தந்தான் பின்னே
உரமறியா விந்திரர்க்காய்த் ததீசி நாதன்
உண்மையாய் முதுகெலும்பை உவந்தே யீந்தான்
விரதிகளின் குணமறிந்து முழுது ணர்ந்தும்
வீண்முறையாற் கலக்க முறுவதேன் மேதையிரே. (188)

## உரை

கேளும் தர்ம தாதாவே! ராஜ நீதியின் நிலமையும் தேவி விரதத்தின் வலிமையும் அறியாத மோகினிப் பெண் கேட்டதற்கு ருக்மாங்கத மகாராஜன் பின்வாங்காமல் தான் எடுத்த ஏகாதசி விரதத்தைக் காக்கும் பொருட்டு தன் மகனான தர்மாங்கதன் சிரத்தை தன் கைவாளால் வெட்டி அம்மோகினியின் கையில் கொடுத்தானென்றும், பூபாலனாகிய சோழ மகாராஜன் ரதக்காலில் அறைபட்டு இறந்த பசுவின் கன்றுக்காகத் தன் மகனான வீதிவிடங்கனைத் தேரின்காலில் தந்தானென்றும், தவமுனிவர்கள் மகிமையறியாத தேவேந்திரன் மலைகளின் பழி நீக்க தனக்கு ஆயுதம் வேண்டி ததீசி முனிவரிடம் கருண்ணை தியாகங் கேட்க அதற்கிசைந்து அம்முனிவர் தன் முதுகெலும்பை முறித்து வச்சிராயுதமாகக் கொடுத்தாரென்றும், இன்னும் பல விரதிகளும் பக்திமான்களும் வைராக்கிய வல்லபர்களும் புண்ணிய தாதாக்களும் அவரவர் மனதுக்கேற்ற சாதனையைக் கொண்டு தம்

உடல் உயிர் பெண்டு பிள்ளை இடம் பொருள் ஏவல் அனைத்தையும் சிவார்ப்பணமாகச் சிலவிட்டு சுவர்க்கபதம் அடைந்தார்களென்றும் சில கிரந்த சுலோகங்களினால் தெளிந்திருந்தும் சுவாமிகளுக்கு இந்தக் கலக்கம் வரலாமா?

## விருத்தம்

**நாயனார் :**

189. கலங்கலென்ன ப்ராண நாயகிநீ சாற்றக்
கருதி நரனது உண்மையாகக் கொண்டேன்
நலங்கமழும் பிள்ளை விலைக்கே யளிக்க
நானிலத் தோரொப்பர்க ளொப்பி னாலும்
புலன்பொறிக ளகங்குளிர நேரே நின்று
புதல்வனையு மறுத்திடுவோ ரெவரு மில்லை. (189)

## உரை

ஏ மறைகுல மாணிக்கமே! எனக்கு என்ன கலக்கமிருக்கிறது? ஒன்றுமில்லை. உன்னை விசாரணை செய்த வரையில் நீ சொன்ன தெல்லாம் உண்மை என்றே நம்பிக் கொண்டேன். அது என்னவெனில் எல்லா நன்மைகளும் பெற்று பரிமளிக்கும் பிள்ளை விலைக்கு கொடுக்க எவர்களும் உலகில் சம்மதியார். அது வாஸ்துவம். அப்படி சம்மதித்து கொடுத்தாலும் அக்குழந்தையை ஐந்து புலன்களும் கர்மேந்திரியம் ஐந்தும் ஞானேந்திரியம் ஐந்தும் கரணாதிகள் நான்கும் ஒத்து பெற்ற தாய் தந்தைகளே தம் கையாலறுத்து தம் கையால் பாகஞ்செய்து துணிந்து அளிக்க உலகில் எவராலு மாகாதே என்று என் மனங் கலங்குகிறது.

**நங்கை :**

ஆம் சுவாமி! தாங்கள் சொல்லுவது சத்தியமே. அவைகளனைத்தும் சுவாமிகளுக்கு நன்றாய் தெரிந்திருந்தும். எவ்வித திடத்தைக் கொண்டு அந்த அயனாந்த விரத பெரியாருக்குத் தங்கள் மனப்படி உண்மை சொல்லி வந்தது? அவ்வாக்கு தவறாமல் நாம் செய்வதுதான் என்ன?

**நாயனார் :**

நாயகி! இப்படி யெல்லாம் பலபல யோசனை பண்ணுவதில் பிரயோசன மென்ன? நான் சொல்வதைக் கேள். அந்தப் புராதன விரதபக்தி வைராக்கிய சாதனைப் பெற்ற பெரியாருக்குத் தலம்புகழும் நாமீன்ற சிறுவனாரைத் தருவிப்போம். நின் கருத்தைத் தெரிவிப்பாயே. நம் பிள்ளையைத்தான் பாத்தியப் படுத்தி விடுவோமே.

## விருத்தம்

**நங்கை :**

190. கருத்தெனக்கு மதுதவிர வேறொன் றில்லை
    கையில்வெண் ணெய்யிருக்க நெய்க்கேன் வாட்டம்?
திருத்தமுட னனுகூல புத்ர னென்று
    செனித்த பிள்ளை பெற்றோரின் பெருந்தவத்தை
விருத்திசெய பேருரைக்கப் பிறந்தா னல்லால்
    வேறெதுக்கா யிருப்பதுடன் பள்ளி சென்று
வருத்தமின்றிப் புதல்வனையு மழைத்தெ டுத்து
    வருகுவீரருஞ் சுகத்தைப் பெறுகு வீரே. (190)

## உரை

நாயகா! அடியாளுக்கும் உள்ளத்திலிருந்து அப்படித்தானே தவிர வேறு நினைவில்லை. நாதா! கையில் வெண்ணையிருக்க நெய்க்கு அலைந்தால் அதை அறிந்த பிறர் நகைக்க மாட்டார்களா? சகல காரியத்திற்கும் பாத்தியப்பட்டு உத்தம அனுகூல புத்திரனென்று நமது கர்ப்பத்தில் வந்துதித்த பிள்ளையானது பெற்றோர்க ளனுட்டித்து வரும் அரிய தவத்தை விருத்திக்குக் கொண்டு வரவும், அவர்கள் பூர்வ நற்பேருரைக்கவும் பிறந்ததல்லாமல் எதற்காகப் பிறந்தது? சீக்கிரம் பள்ளிக்கூடம் சென்று குழந்தையைத் தூக்கி வாருங்கள்.

**நாயனார் :**

ஏ மாதரசி! நீ யிப்போது சொல்லிய வாக்கியம் என்னைப் பரிசோதிக்கச் சொல்லியதா? அல்லது உன் திரிகரண சுத்தியாய், தெய்வ சாட்சியாய் சொல்லியதா?

**நங்கை :**

சுவாமி! ஆதியில் அடியாளை மணஞ்சூட்டிக் கைபிடித்துத் தத்தம் வாங்கிய நாள் முதல் இந்த பிராணன் போகும் வரையில் இந்தச் சரீரம் தங்களுக்கே பாத்தியம். அல்லாமலும் என்னால் வரும் அவமான அபிமான மோட்சானுகூலம் தங்களுடைதாயிருக்க மாறாகச் சொல்வதற்கு என்ன ஞாயம் பெற்றேன்? ஆகையால் சந்தேகம் வேண்டாம். நான் சொல்வது சத்தியம். சீக்கிரம் போய் வாருங்கள்.

## விருத்தம்

கள்ள மில்லாமற் சொன்ன காதல் மொழிக்கி ணங்கி
உள்ளமே மகிழ்ந்து வாழும் உயர்மனை விட்டு நீங்கிப்
பிள்ளையை அழைக்கப் பள்ளிக் கூடம் போகையினிற் பெற்ற
வள்ளலார் சுதனா லென்ன வருமோ என்றுருகு வேனே.

## பாட்டு

இராகம்: சுருட்டி

191. பிரம்ம பூரீசா தர்ம்ம ப்ரகாசா
நிரதி சயானந்த நித்ய உல்லாசா (பிர)

மனையாள் சம்மதங் கேட்டு
மகிழ்ந்து யான் போறேன்
தனைய னாலினி வருந்
தாழ்ச்சி என்னவோ பாரேன். (பிர)

## உரை

ஓ பிர்மோபதேச மூர்த்தியே! ஆத்மானுக்கிரக சுயஞ்சோதியே! நின்மல நித்தியானந்த மூர்த்தியே! தவத்தில் தரித்திரத்தை அடைந்த அடியேன் என் மனையாட்டியின் உறுதிமொழியைக் கேட்டு, மகிழ்ந்து பள்ளிக்கூடஞ் சென்று பிள்ளையை அழைத்து வரலாமென்று திடங் கொண்டெழுந்த எனக்கு அத்திடங்குலைந்து ஐயோ என்னவோ தெரியவில்லையே மனந்தடுமாறி மதி மயக்குற்று பேதப்படுகிறதே! ஏ ஈசா! இதுவும் உன் சோதனையா?

### பாட்டு

பள்ளியிற் சென்று பிள்ளை வாவென்று
உள்ளபடி சொல்லி அழைத்திட லாமோ
தெள்ளுந் தவத்தி லென்னைத் தீமை யுண்டாமோ (பிர)

### உரை

ஏ பரமேசா! இப்படி மதி மயக்கத்தில் விட்டால் பள்ளிக் கூடஞ் செல்வேனா? பிள்ளையை வாவென்று அழைப்பேனா? அப்படி அழைக்குங்கால் ஐயோ ஐந்து வயது பாலனாச்சுதே, இருவினைப்பயனை அறிந்தவனாகவே என்னை அழைக்க வந்தது யாது காரணமென்று கேட்டால் மெய்யைச் சொல்லி அழைப்பேனா? அல்லது பொய்யைச் சொல்லி அழைப்பேனே? மெய்யைச் சொல்வேனாகில் குழந்தைத் திகிலடைவானா? பொய்யைச் சொல்வேனாகில் தவம் அவமாகுமே! எந்தக் குற்றத்திற்குப் பாத்தியப்படுவேன்? இதுவென்ன பெருமோசத்திற்கு ஆளாக்கி விட்டாயே! இன்னமும்.

### பாட்டு

வாத்தியார்க் கென்ன வகைசொல் வேனிதை
மாத்தி யுரைக்கயேதும் வழியறியேன் வீணில்
நீத்தோ ரென்னால் காத்திருப்பாரே கானில். (பிர)

### உரை

பரமேசா! பள்ளிக் கூடத்தில் சென்றால் பிள்ளையை எனது இஷ்டபடி அழைத்து வருவதா யில்லையே. பிள்ளை நமது பாத்தியத்தை விட்டு உபாத்தியாயர் ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு இருக்கின்றான். அவனை அழைக்க உபாத்தியார் உத்தரவு வேண்டுமே. அவர் என்னை என்ன விசேஷமென்றால் மறைத்துச் சொல்ல வழி தெரியேனே. அவர் என் மொழிக்கும் தவத்துக்கும் விரோதமாகத் தடுத்துரைப்பாரோ என்னவோ தேசிகா. இப்படியெல்லாம் என்னை மயக்கத்தில் விட்டால் எல்லாந் துறந்த முனிவரானவர் பசியோடு நான் வருவேனென்று காத்திருப்பாரே! ஐயோ மகாபெரும் பாவத்திற்கு ஆளாகினேனே! என்ன செய்வேன்?

## பாட்டு

உளமையால் தீரும் தளும்புதே வீரம்
மிளகை பயிராய்செய்து வணிகரின் றுயர்தீர்த்த
வளமை என்சொல்வேன் முத்துவிஜைய ரங்கனைக்காத்த.
(191) (பிர)

## உரை

செகதீசா! மிளகுப் பொதியைப் பயிராக்கி அதைக் கொண்டு வந்த வியாபாரிகளைத் தன் வசமாக்கி பின் பயிரை மிளகாக்கித் தனக்கு திருப்பணிக்கு ஆளாக்கியும் உடையார்பாளையம் சமஸ்தான ஜமீன் கச்சி முத்து விஜைய ரங்க ராஜதுரையின் தீராத குன்மவலியை நீக்கி, தன் அடிமை கொண்ட மெய்ப்பொருளே இப்போது என் மன மயக்கத்தைத் தீர்த்து மேலுமுள்ள திடங்கொடுத்து காப்பாயாக இதோ பள்ளிக்கூடஞ் செல்கின்றேன்.

(இரண்டாம் பள்ளிக்கூடம் உபாத்தியாயரும் மாணவரும் புடை சூழப் பள்ளிக்கூடம் வருதல்)

## பாட்டு

**சீராளன் :**

*சா சா சா ரிக மபகரீசா சனி தபமாமகரி*

192. ஆ ஆ ஆ எனதுயிர் நண்பர்களே
அன்பில் மிகுசீலர்களே வா வா
வா வா மறைகுல மாமணியே
மதனச் சிந்தாமணியே போவோம் - நாம்
புனித முக்கலை பயில
புவிபுகலு ஒயிலாய் - தவஞானம்
சத்குரு வினால் பெறவே
தயை வைத்து ஆண்டிடவே - தேவர்
சொல் நாவலன் எம் ஆசான்
செருட் செய்யவே கூசான் - கவிமதுரை
முத்து தமிழைப் படிப்போம்
கரி முகன்றாள் பிடிப்போம். (192)

(பள்ளிக்கூடம் வந்த உபாத்தியார் பிள்ளைகளின் ஆசர் காண சட்டாம் பிள்ளையை வருவித்து விசாரிக்கிறார்.)

பாட்டு

**சட்டாம் பிள்ளை :**

193. கோடி போயினதே மாமா
கோடி போயினதே

சேதி கேளுங்கள் வாத்தி சேதி கேளுங்கள்
சேதி கேளுங்கள் வாத்தி நீதி கேளுங்கள்
நீதி போதுவார் நீள போத நாதனார்
போத நாதனார் வேத ஆதி சைவனார் (சேதி)

(வசனத்தொடர்)

நித்தம் மாலையிற் குடித்து நிலைகெட்டால் கள்ளு
நத்தி கண்ட பேரையும் நயந்து பாடல் பள்ளு (சேதி)

மாமிச மில்லாமலன்ன மூட்டவாய் புகாது
பாமரரிணக்க மிரவு பகலுமாட்டஞ் சூது (சேதி)

தாசிவேசி யேவல் கேட்டு தங்கலங்கு சயனம்
தேசுபெண்கள் வீதிகண்டால் செம்மைநோக்கம் நயனம் (சேதி)

பையில் ரொக்கமேறிக் கண்டால் பண்ணுமே பொய்சத்யம்
தெய்வபூசை மணியடி சிறந்த பூச்சு நித்தியம் (சேதி)

பாடசாலை பிள்ளைகள் படிப்பிலே திண்டாட்டம்
தேடல்மூக்குத் தூள்தாம்பூலம் தின்பதில்வாய் நீட்டம் (சேதி)

வருண வாச்சிரம் தர்மம் அறிவானந்த போதம்
முற்று மொழிந்த பேதம் உற்றாரைக் கண்டு பாதம் (சேதி)

வாழ்த்தவோ வாழ்த்தவோ வாழ்த்தவோ
ஏனிதோ வந்தேன் சாமி ஏனிதோ வந்தேன்
ஏனிதோ வந்தேன் சீடன் நானிதோ வந்தேன். (193) (சேதி)

(வந்த சட்டாம்பிள்ளையும் உபாத்தியாயரும் தங்கள் சம்பிராயதம் முடிந்து தினம் வரும் பிள்ளைகள் வந்ததும் வராததும் விசாரணை பண்ணிப் பிள்ளைகள் பாடம் படிக்கும் போது சீராளன் விசேஷமுரைத்தல்)

## விருத்தம்

**சீராளன் :**

194. அருமைசேர் புதல்வ ரான அன்பரே அண்ண மாரே
இருமையு முணர்ந்த வையம் இன்று போதித்த பாடம்
பரிவுடன் நான் படிக்கப் பற்றிலா தெனது புத்தி
சிரம்பட படக்கு தென்ன செய்வேனான் அண்ண மாரே. (194)

## மேற்படி பாட்டு

இராகம்: ஆனந்த பைரவி

195. ஐயையோ நானென்ன செய்வேன் அருமையுள்ள தோழர்களே
வெய்யோன் எனக்குவந்த வினைஎன்ன நேயர்களே (ஐயை)

ஆண்மைக ளெல்லாங் குலைந்து அங்கம் படபடத்துத்
தாண்மைக் காலந்தானோ சித்தந் தடுமாறிச் சடசடத்துத் (ஐயை)

திகைத்து மெய்யாவி சோர்ந்து திமிர்ந்து வலிகிளம்பிப்
பகை பித்த சேட்டை யாலே பாலன் மனந்தளம்பி (ஐயை)

படர்ந்து கண்ணைக் கழற்றிப் படிக்ககண் சோருதையோ
நித்திரை வருகுதுன்பால் நிச்சயமாகச் சொன்னேன்
சற்றே படுக்காவிட்டால் தாளே னினிமே லண்ணே. (ஐயை)

## உரை

**சீராளன் :**

எனது அருமையான தோழர்களே! சிறியேனுக்குப் படிக்கும் போதே திடசித்தங் கெட்டு சரீரம் படபடத்து ப்ராணாவஸ்த்தை வருவது போல புத்தி தடுமாறி நெஞ்சம் சடசடத்து சுவாசந் திகைத்து மோவாய் கட்டை ஓடிய கொட்டாவி யுண்டாகி, வாய்குழறி, கண்கள் புகைந்து, கண்ணில் நீர்வடிந்து படிக்க முடியவில்லை. சற்றுப்படுத்து எழுந்திருக்காவிட்டால் என்னால் சகிக்க முடியாது அண்ணன்மார்களே.

## விருத்தம்

**சங்கரவையன் :**

196. உறக்கம் வந்துற்ற தானால் உன்மனப் படியே கேளு
மறைப்பிட தோழ ரெந்தன் மருங்கினிற் படுத்துச் சற்று

நிறக்க நித்திரை புரிந்து நேசனே வாத்தி யார்கண்
பறக்குதே நாலு திக்கும் பளிச்சென வெழுந்தி டாயே. (196)

## உரை

**சங்கரன் :**

தம்பி! உனக்கு நித்திரை வந்தால் நான் சொல்வதைக் கேள். அடே பஞ்சாமகேசவையா! நன்னுவையா! சங்கரவையனாகிய நான் சொல்வதைக் கேளுங்கள். குழந்தை நித்திரை வருகுறதென்கிறான். இவ்வளவு பிள்ளைகள் படிக்குஞ் சத்தத்தில் படுத்தால் எப்படி கண்ணுறங்குவான்? அல்லாமலும் உபாத்தியாயர் கொடுத்த பாடத்தைக் கவனம் பண்ணிக் காலத்தில் ஒப்பிக்க வேண்டியதவசியம். அதுவுமில்லாமல் உபாத்தியாயர் நம் மேலே கண் வைத்துக் கொண்டிருக்கிறார். இதில் என்ன செய்யலாஞ் சொல்லுங்களப்பா.

**நரசிம்மன் :**

ஏ சங்கரவையா! ஆமாம். எல்லாங் குற்றமாகத்தான் தெரிகிறது. அதுவோ பிரபுவின் வீட்டுக் குழந்தை. செல்வபுத்திரன். தேக அசதி கொடுக்குந்தான். நித்திரை வந்தால் அதிகாரம் என்ன பண்ணும்? இதற்காக அழுகிற பிள்ளையை உபத்திரவப் படுத்துகிறதா? நாம் அவன் வீட்டு அன்னத்தை உண்டும் அவனுக்குத் துணையாய் வந்தும் இந்தக் கஷ்டப்படுத்துவதுதான் லாபமோ? ஒன்றுங் குற்றம் வராது. பக்கத்தில் படுக்கச் செய்யடா செய்.

**சங்கரவையன் :**

அப்பா குழந்தாய்! உபாத்தியாயர் நாலு பக்கமும் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவருக்குத் தெரியப்படாது நாங்கள் சுற்றிலும் மறைத்துக் கொள்கிறோம். நீ என் மடியில் தலை வைத்து படுத்து உன் மனம் போல சற்று கண்ணறுங்கி எழுந்திருப்பாயப்பா.

(சீராளன் உறங்குகிறான்)

## பாட்டு

**தோழர்கள் :**

197. வாரும் வாருங் கணப தீசா
சிறுமைந்தன் துணை உருத்தி ரேசா

ஆருங் கதியில்லை விஸ்வேசா - என்னை
ஆதரித்தாய் கயிலை வாசா. (வாரும்)

அப்பா உனைவிடவுந் தாதை - எனக்கு
ஆரு மில்லை யறியேன் பேதை
எப்போ தொழிவேன் புவி சூதை - அதில்
இரவும் பகலும் பெரு வாதை
பாலன் பரிதாபத்தைக் கேட்டுநற் பாதை (வாரும்)

காட்டி நலங் கூட்டு - காலன்
பயந் தடுத்து ஓட்டு - நின்
கருணை கழலடியைக் காட்டு (வாரும்)

பொல்லாப் பிறவி வந்த தோஷம்
வயிறு பிழைக்க எடுத்தேன் பலவேஷம்
வல்லோ னறிவா னந்தன் நேசம்
வைக்க வருமே பரகதி ப்ரகாசம். (197) (வாரும்)

## விருத்தம்

**நரசிம்மன் :**

198. என்னடா புதுமை எந்தன் இஷ்டாஞ் சங்க ரய்யா
நன்று பஞ்சாம கேசா நரசிம்மன் சொல்லக் கேளீர்
பன்னு மென்னண்டை யிற்றாள் படுத்து றங்கிய சீராளன்
கொன்னவாய் புரண்டெ ழுந்தான் குறையென்னோ கேட்பே
னானே. (198)

## உரை

**நரசிம்மன் :**

ஆஹே! இதுவென்ன ஆச்சரியம் அப்பா. குழந்தாய் என் மடியில் தலைவைத்து படுத்திருந்தாயே. திடீலென எழுந்த காரணம் என்ன? அடே சங்கரய்யா! ஏ நன்னுவையா! ஓ பஞ்சாமகேசவையா! என்னடா ஆச்சரியமாயிருக்கிறது. ஏதுந் தெரியவில்லையே. குழந்தை பக்கத்தில் படுத்திருந்தான். திடீலென எழுந்தான். கேட்டால் ஒன்றும் பதிலில்லாமல் நிற்கின்றான். அவன் வெருள வெருளப் பார்க்கின்றதைப் பார்த்தல் பயமாயிருக்கின்றது. அதை என்னவென்று கேளுங்கள்.

**சங்கரவையன் :**

ஆமடா நரசிம்மவையா! அது சரிதான். என் மடியில்தான் படுத்திருந்தானே! நித்திரை செய்பவன் எழுந்திருப்பானேன். நீதான் கிள்ளிவிட்டாய்ப் போலிருக்கிறது.

**நரசிம்மன் :**

அடபாவி! ஏண்டா சங்கரவையா! நான் ஒரு பாவமும் அறியேன். என்மேல் வீண்பழி யேற்றுகிறாய். நான் கிள்ளியதுங் கிள்ளாததும் உனக்குத் தெரியாதா? உன் கண்ணு அவிந்தா போச்சுது? நன்னுவையன்தான் அவன் மேல் கையைப் போட்டுக் கொண்டிருந்தான். ஒருக்கால் அவன் கிள்ளியிருக்கலாம். நானென்றால் உனக்கு எப்போதும் பொறாமைதானே!

**சங்கரவையன் :**

ஏண்டா துஷ்டபயலே! நன்னுவையா குழந்தை அயர்ந்து நித்திரை செய்யும் போது நாம் சாக்கிரதையாய்க் காக்க வேண்டாமா? அவனைச் சேட்டை பண்ணுகிறதா? இதுதான் அவன் வீட்டு அன்னத்தைப் புசித்ததற்குப் புண்ணியமோ? போடா போ. அறிவுகெட்டவனே.

**நன்னுவையன் :**

ஐயோ பாவம்! நான் அப்படி செய்வேனா? ஏண்டா சங்கரவையா, அண்டையிலிருந்த பஞ்சாபகேசனைக் கேட்டுப்பாரு. நான் சேட்டை செய்ததுஞ் செய்யாததும் அவன் சொல்லுவான். ஏண்டா பஞ்சாபகேசவையா, குழந்தையை நித்திரையில் நானா தீண்டினேன்? நீயே சொல். நேரே பார்த்துக் கொண்டுதானே இருக்கிறாய்.

**பஞ்சபா கேசவையன் :**

போடா போ. நீங்களெல்லாங் குறும்புக்கார பசங்கள். உங்கள் வழக்கமே யிப்படி. ஒருவனுக்கொருவன் அதைச் சொன்னான்; இதைச் சொன்னான்; அவன் அடித்தான்; இவன் பிடித்தான்; போனான்; வந்தான் என்று பேசுவது உங்களுக்கே ஆனந்தம். பள்ளிக்கூடம் வந்தோம்; பாடம் படித்தோம்; எழுதினோம்; ஒப்பித்தோம்; கேட்டுக் கொண்டோமென்பது என்றுமில்லை. எனக்கு ஒரு சங்கதையுஞ் தெரியாது. உங்களிஷ்டம் போல் நடவுங்கள்; குழந்தையை, அவனைக்

கேள்; இவனைக் கேள் என்று சாட்டுவானேன். நாம் நாலு பேருமே கேட்போமே. (பொது) ஆகா அப்படியே கேட்போம். (பொது)

### பாட்டு

(மாதேவு சோதையே கேளம்மா என்ற மெட்டு)

199. தம்பி சீராள தேவா பயப்படாதே
தம்பி சீராள தேவா
வெம்பி அழுவ தென்ன சொல்லுவா யப்பா (தம்பி)

நித்திரை வருகு தென்றாயே அடடா பையா
நித்திரை வருகு தென்றாயே
நத்தி எங்க ளண்டையில் படுத்திருந் தாயே
பித்தனை போலெழுந் தாயே
ஐயையோ கண்ணே பித்தனை போலெழுந் தாயே - எங்கள்
சத்தங் கேட்டெழுந் தாயே
சங்கதி சொல்வாயே (தம்பி)

நெஞ்சு துடிக்கு தென்னடா - உடல் நடுங்க
நெஞ்சு துடிக்கு தென்னடா - விலை
மிஞ்ச தேகபிணிக ளுண்டோ சொல்லடா
சோத்துக்கு இந்த கஷ்டமா - பசியினாலே
சோத்துக்கு இந்த கஷ்டமா - உன் (தம்பி)

ஆத்துக்கு வாராயோ நானும் வரட்டுமா
வேத்து சொப்பன கஷ்டமா
அழாதே சொல்லு வேத்து சொப்பன கஷ்டமா
இல்லை தம் வாத்தியாரிடம்
போய் நான் செல்லட்டுமா. (199) (தம்பி)

### விருத்தம்

**சீராளன் :**

200. என்னுயிர்த் துணைவர் கேண்மின் இதுவேதோ புதுமை காணேன்
பன்னுமும் மருகில் சற்று படுத்துக் கண்ணுறங்கும் போதில்
கொன்னவோர் கனவு கண்டேன் குழந்தையான் சொல்ல வென்றால்
என்னிட நாவெ ழாமல் எடுக்குதே நடுக்கம் அண்ணே. (200)

## மேற்படி உரை

எனது ஆருயிர்த் துணைவர்காள்! இதுவரையிலு மில்லாத நித்திரை வந்ததே மிக்க ஆச்சரியம். அதுவுமல்லாமல் உங்களண்டையில் படுத்துச் சற்று கண்ணுறங்கும் போது வாய் குழற, தேகம் நடுக்க, மனந் திகைக்க ஓர் கனவு கண்டு விழித்தேன். அதை உங்களிடஞ் சொல்ல வேணுமென்றால் என் நாவு எழவில்லை. நான் என்ன செய்வேன் அண்ணன்மார்களே?

## உரை

**சங்கரவையன் :**

ஆஹா! பஞ்சாபகேசவையா! நன்னுவையா! நரசிம்மவய்யா! குழந்தை சொல்லுகிறான். கேட்பீர்களா? அப்பா குழந்தாய்! நித்திரை நிலமை கெட்டு எழுந்தது கனவினாலா? ஆனால் சகல கலைக்கியானங்களுங் கற்ற உபாத்தியாயருக்கு அந்தக் கனவுக்கு ஏற்ற பலனறிந்து சொல்லத் தெரியும். நீ கண்ட கனவுக்குப் பரிகாரமின்னதென்று உன் மனந் தெளியச் சொல்லுவார். சீக்கிரம் அவரிடம் போய் சொல். போ போ.

## விருத்தம்

**சீராளன் :**

201. அய்யனே வடியேன் தேகம் அயர்ந்து வந்ததினால் சற்று
பையவேன் றோழ ரண்டைப் படுத்து நித்திரை புரிந்தேன்
நையவே மனமாற் றத்தால் நடுங்கி மெய்யுடல் குலுங்க
ஐயமுள் ளெழவே யெந்தன் அண்ணலே கனவு கண்டேன்.(201)

## உரை

சுவாமி! அடியேன் தேக பீடையுள்ளவனாய் அயர்ந்து எனது நண்பர்கள் பக்கத்தில் படுத்துச் சற்று கண்ணுறங்கும் போது என்னவோ தெரியவில்லை, மனப்பேதமாய் நெஞ்சம் படபடக்க, தேகம் நடுங்க, பெரும்பயத்தைத் தருகின்ற ஓர் கனவு கண்டு விழித்தேன்.

**உபாத்தியார் :**

அடடா! இதுவென்ன ஆச்சரியமாயிருக்கிறது. குழந்தை என்னவோ சொல்லுகின்றானே. (உறைத்த சத்தம்) அடே சங்கரா! ஏ பஞ்சாமகேசா! நரசிம்மா! நீங்களெல்லாம் இவனுக்குத் துணையாயிருந்து அவன் அன்னத்தைப் புசித்து பள்ளிக்கூடம் வரும்போது அவன் கொண்டு வரும் பட்சணங்களை ஏமாற்றி பிடிங்கித் தின்று கொழுப்பேறிய பசங்கள். நீங்கள் குழந்தையை சாக்ரதையாய் காக்க வேண்டாமா? அவனெங்கே சட்டாம்பிள்ளை? அடே சட்டான். (சட்டான்) ஏய் வரேன் வரேன்.

**உரை**

(சட்டாம்பிள்ளை வந்தவுடன்)

**வாத்தியார் :**

அடா சட்டாம் பிள்ளை! குழந்தை சீராளன் இந்தப் பசங்களுடன் படித்துக் கொண்டிருந்தவன் படுத்ததும் எனக்குத் தெரியும். நித்திரை செய்ததும் தெரியும். எழுந்ததுந் தெரியும். உடன் இங்கு வந்து இந்த பசங்கள் சொல்லக் கேட்டு குழந்தையை அழைத்து விசாரித்தால் அவன் அழறான்; வியர்க்கிறது; நடுக்கிறது. விசாரித்தால் என்னவோ கனவு கண்டேன் என்கிறான். அதை என்னவென்று கேளு.

**சட்டாம் பிள்ளை :**

ஏய்! நான் உனக்கு என்றைக்குங் கெட்ட பிள்ளை. சொன்னால் உனக்கு கோபம் வரும். அவனோ ப்ரபுவின் வீட்டுக் குழந்தை. நீயோ அவர்களிடம் கூலி வாங்கிப் பிழைப்பவன். அல்லாமலும் உன்னிடம் படிக்கும் இத்தனை குழந்தைகட்கும் உன்னிடம் இருக்குமட்டும் அவர்களுக்கு வரும் ஆபத்துகளறிந்து கண்போல் காக்குந் தாய் தந்தைக்கு ஒப்பானவன். நீயே அதைவிட்டு அழறான். நடுக்குது; வியர்க்குது என்கிறாயே; போ போ. நீ நல்ல விவேகி. குழந்தையை மடியில் எடுத்து வைத்து உபசரித்து திடப்படுத்திக் கண்ட கனவின் விபரத்தைக் கேட்பாயா? என்னைக் கூப்பிட்டால் நான் என்ன செய்யட்டும்; உன் சூத்துக்கு முள்ளு வைக்கத்தான் எனக்குத் தெரியும். அவன்றான் சாகப் போகிறான்; உன்னிடம் படிக்க வந்தவன் எவன்தான் உயிருடனிருக்கின்றான். அவனைக் கேள்.

**உபாத்தியாயர் :**

அப்பா குழந்தாய்! இங்குவா. என் மடிமீது வீற்றிரு.

நடை - மடியில் வைத்தல் - வஸ்திரத்தினால் கண்துடைத்தல் - வியர்வையை ஆற்றல் - நெஞ்சில் தட்டிக் கொடுத்தல் - தழுவி அணைத்தல் - கன்னம், தலையைத் தடவல். இதை செய்து பின், அப்பா குழந்தாய்! நீ கண்ட கனவைப் பயப்படாமல் சொல் பார்ப்போம்.

**பாட்டு**

**சீராளன் :**

ஹரி. ஓம் நமொத்து
202. சிந்தமென் றறைந்த மெய்க்குருவே - பர
அறிவளித்து இருளறுத்த அதவடுருவே.

**உரை**

**உபாத்தியாயர் :**

அப்பா குழந்தாய்! உலகில் தான் பெற்ற மக்களை உபாத்தியாயர் பாத்தியத்தில் கொடுக்கும் ஆரம்பத்திலேயே விக்னேஸ்பரர் சன்னிதியில் குழந்தைக்கு முன்னே குருப்ரம்ம மந்திரத்தை போதித்த பிறகுதான் உயிராதி எழுத்துக்களைக் கற்பிக்கிற வழக்கம். அவ்வுபாத்தியாயன் நல்லறிவைப் பெற்று கல்விச் செல்வத்தையுடையவனென்றும், அச்செல்வத்தை வஞ்சமற்று மாணாக்கருக்கும் போதிப்பவன் குருவாகும் என்றும் சொல்லுவார்கள். குழந்தாய்! அதினாலென்ன? இன்னுஞ் சொல்வாய்.

**பாட்டு**

**சீராளன் :**

அறிவே தனரன் அன்னைத் தந்தை யாமுடல் நீயே
எனதா ருயிரும் போதகுரு வானதும் நீயே
ஆனதும் நீயே கரு வானதும் நீயே.

**உரை**

**உபாத்தியாயர் :**

அப்பா குழந்தாய்! மாணவனுக்குக் குரு முகமே என்றும், ப்ரம்மா விஷ்ணு உருத்திரன் போலும், உடல் பொருள் ஆவி போலும்,

அன்னை தந்தை அவர்களெல்லாம் குருமூர்த்தியே தவிர மற்றுமில்லை. தந்தை தன் முற்பிறப்பிலும் கருணைநாதனாகிய குருநாதன் அகத்தில் விளங்கிக் கொண்டிருக்கிறானென்றும், அக்குருபக்தியினாலேயே உலக விளக்கமென்றுஞ் சொல்லுகிறாய். இன்னம் என்ன கண்டாய்.

பாட்டு

**சீராளன் :**

சிற்றறிஞன் குற்ற மாற்றுள் தேசிக பதமே - புவி
சிற்பதமு மாற்றிக் காக்கும் தெய்வதப் பதமே
தெய்வதப் பதமே தெய்வதப் பதமே.

உரை

**உபாத்தியாயர் :**

ஆ என் அருமைச் செல்வமே! நீ வாசிக்கும் வசனமெல்லாம் மிக்க அருமையே. இளமையாகிய பருவத்தையுடைய சிறியேனிடம் என்றன் உபாத்தியாயர் கட்டளைக்கு மாறிய குற்றங்கள் எத்தனை இருக்கினும் அத்தனையும் பொறுக்க அழகிய பொற்பாதமே கெதி யென்றும், அதுவே எனக்கு ஆனந்தம் என்றும், அதுவே தனக்கு மோட்சம் என்றும் செப்புகின்றாய். அது உண்மையே. அது என்னவெனில் குருபக்தி சிவபக்தி ஜீவகாருண்யமென்று மூன்றில் எவனுக்கு குருபக்தியில்லையோ அவனுக்கு சிவபக்தியும் ஜீவகாருண்யமும் எந்த சென்மத்திலும் வர மாட்டாது. எவனிடத்தில் குருபக்தி விசேஷித்து சென்மங்கள் தோறும் தொடர்ந்து கொண்டே வரும்? என்று வேதம் முறையிடுகிறது. உன் வாக்கிலும் அதே திருத்தமாய் வருகிறதைப் பார்த்தால் மிக்க ஆச்சரியமே. இன்னும் என்ன? சொல்வாய்.

பாட்டு

**சீராளன் :**

உற்ற தேக வயர்வினால் நல்லுள மறந்திட்டேன்
கற்க ஓய்ந்து சாய்ந்து துணைவர் பக்கம்
உறங்கியும் விட்டேன் உறங்கியும் விட்டேன்
சற்று உறங்கியும் விட்டேன்.

உரை

**உபாத்தியார் :**

அப்பா ஞான சிந்தாமணி! என்றும் இருந்த மனோதிட மொழிந்து சரீரம் கஷ்ட வாதைக்காளாகி நான் கொடுத்த பாடங்களில் ஞாபகமற்று அறிவுயிழந்து நித்திரை செய்து விட்டேனென்கிறாய். அதுவுஞ் சரியே. அது என்னவெனில் நோயில்லா வாழவே வாழ்வென்பது போல மனிதராய்ப் பிறந்தவர்களுக்குத் தாய் உண்ணும் உணவினாலேயே சுகம் யென்பார் மேலோர். அது போல உலகில் நோயில்லாமலிருப்பவர்கள் அருமை. உனக்கும் உணவு பேதம் இருந்திருக்கலாம். அதனாலென்ன? இன்னும் சொல்வாய்.

பாட்டு

**சீராளன்:**

அற்புதமோர் சொப்பனத்தை அருமையான் கண்டேன் - அதில்
அரண்டு வெருண்டு உடல்
நடுக்குற அழுதெழக் கண்டேன்
அழுதெழக் கண்டேன் அழுதெழக் கண்டேன்.

உரை

**வாத்தியார் :**

ஹே வேதக் கொழுந்தே! நீ சொல்லச் சொல்ல எனக்கு மிக்க ஆனந்தமே. நித்திரை காலத்தில் சொப்பனாவஸ்தையிலும் சாக்கிராவஸ்தையிலும் என்றும் அறியப்படாத மிக்க வினோதம் பிரகாசிக்கக் கூடும். அதனால் மனஞ்சலனித்து சரீரமும் மதன் செயல் கெடக் கண்டேனென்கிறாய். இருக்கலாம். அது எவ்வாறு எனில் ஒரு பிராமணன் யாகாதி கர்மத்தில் மந்திரோச்சாடனத்தால் நெய் யாகுதி அக்கியை அர்ப்ணம் பண்ணுகின்றபோது தேகபீடையால் நித்திரை வந்து சொப்பனத்தில் தன் தேகத்தில் ஒரு வேங்கைப் புலியைக் கண்டு பயந்து யாகாகக்கனியில் தடுமாறி வீழ்ந்து இறந்தானென்றால் நீ சிறு குழந்தை என்ன செய்வாய்? பயமாகத்தானிருக்கும். போகட்டும். இன்னுஞ் சொல்குவாய்.

### பாட்டு

**சீராளன் :**

விற்பனா நிமித்த நூலின் விதிவகை யுரைப்பீர்
அதில் வெருண்ட மனதை
திரண்டு தெளிய வெறுத்திடா துரைப்பீர்
வெறுத்திடா துரைப்பீர் வெறுத்திடா துரைப்பீர்.

### உரை

**உபாத்தியார் :**

அப்பா புண்ணிய பூஷணமே! கல்வி கலைக்ஞானத்தில் விசேஷியான தேசிகா! கண்ட சொப்பனத்தின் அதிசயமும் அதின் விற்பனமும் அதினால் நடக்கும் நுட்பமும் தெரிவிக்க வேண்டுமென்றும், ஆசிரியர் முன்னில் மாணவன் எதிர்மாறு பேசுகிறானென்றுங் கோபங் கொள்ளப்படாதென்றுஞ் சொல்லுகிறாய். குழந்தாய்! அது மேலான வாக்கியமே. அது எவ்வாறு எனில் தர்க்கம் குதர்க்கம் என்பது அநியாயவியாகரணம். தர்க்கத்தைப் பேசினால் பெரியாருக்கும் கோபம் வராது. குதர்க்கத்தைப் பேசினால் பெரியாருக்குஞ் சிறியாருக்கும் கோபம் வராமல் போகுமா? நீ சொல்வதில் எனக்குக் கோபமில்லை. இப்படியே பேசிக் கொண்டு இருந்தால் சொப்பனத்தின் பலன் தெரிந்து கொள்வது எப்படி? நீ கண்ட கனவைச் சொல்வாய்.

### பாட்டு

**சீராளன் :**

வெள்ளி மலை யாண்டவர்
என் மனைவரக் கண்டேன் அவர்
வெம்பசிக்கும் நரபலிக்கும் வினவவுங் கண்டேன்
வினவவுங் கண்டேன் வினவவுங் கண்டேன்.

### உரை

**வாத்தியார் :**

நல்லது மைந்தா! வெள்ளிமலையாகவும், அதிலிருந்த பெரியார் இறங்கி வந்து தங்கள் சத்திரமாகவும், அதின்முன் வந்து நின்று தான்

அருந்தபிச்சைக் கேட்டதாகவும், அந்த பெரியார் சத்தமிக்க இனிமையாக இருந்ததாகவும், அவர் திருவடியையுங் கண்டே னென்றுஞ் சொல்லுகிறாய். அது மிக்க விசேஷ பலன்றான். இன்னும் என்ன கண்டாய்.

### பாட்டு

**சீராளன் :**

தெள்ளமுது இடவெ னன்னை
சேனவயுங் கண்டேன் மனை தெருவில்
மூவர் விகற்ப வாதஞ் செய்வதுங் கண்டேன்
செய்வதுங் கண்டேன் செய்வதுங் கண்டேன்.

### உரை

**வாத்தியார் :**

கண்மணி! தியாகித்த அப்பெரியாருக்கு நயந்து உன் அன்னையார் வணங்கித் தெள்ளிய அமுதுண்ண வேணுமென்று பிரார்த்தித்தும் அவ்விடத்தில் பல நியாய வழக்குகளும், மேலும் அப்பெரியார் வஞ்சனசம்பாஷணையையுங் கண்டேனென்கிறாய். இருக்கட்டும். இன்னும் என்ன கண்டாய்?

### பாட்டு

**சீராளன் :**

நன்றி தவிர்த்துத் தென்றல் வனத்தின்
நறுநிழல் கண்டேன் - அவர் நாட்டம்
வஞ்சம் வைத்தமர்ந்த நன்னிலை கண்டேன்
நன்னிலை கண்டேன் நன்னிலை கண்டேன்.

### உரை

**வாத்தியார்**

ஹே மறைகுல மாணிக்கமே! வஞ்ச மனதுடைய அப்பெரியார் பிச்சையேற்றுக் கொள்ளாமல் தடுத்துரைத்து அதிக வேகமாய்ச் சென்று, வனத்திலே பசிய மரத்தடியில் அமர்ந்த லட்சணமும் அவரால் உன் தாய்க்கு மேலிட்ட துக்கமுங் கண்டேனென்கிறாய். இருக்கட்டும். இன்னுமென்ன கண்டாய்?

பாட்டு

**சீராளன் :**

தந்தை அன்னை சேதி கேட்டு
　　தயங்கவுங் கண்டேன் பின் - தவசிபாதஞ்
சேவித் துணர்ந்து தான்வரக் கண்டேன்
　　தான்வரக் கண்டேன் தான்வரக் கண்டேன்.

உரை

**வாத்தியார் :**

செல்வச் சிரோன்மணி! துக்கமே வீட்டிருந்த உன் தாயின் வாக்கியங் கேட்டு வனமரத்தடியில் அமர்ந்த பெரியாரைத் தேடி வந்து வந்தித்த உன் தந்தையார் விசுவாசித்து அமுதருந்த அழைத்ததைக் கண்ட பெரியார் வாய் கூசாமல் தந்திரத்தோடு தான் அருந்துவது பிள்ளைக்கறி யென்றும், அப்படி அளித்தால்தான் வருவேனென்றுஞ் சொல்லியதைக் கேட்ட தந்தையார் கிரகத்திற்கு வந்ததாகக் கண்டேனென்கிறாய். இன்னும் என்ன கண்டாய்?

பாட்டு

**சீராளன் :**

அன்று தாதை அன்னை பால்
　　அடுத்திடக் கண்டேன் - அவர்
அகத்தின் நிலைமை இகலிலாத தறிந்திடக் கண்டேன்
　　அறிந்திடக் கண்டேன் அறிந்திடக் கண்டேன்.

உரை

**வாத்தியார் :**

தவச் செல்வமே! வந்த உன் தந்தையார் உன் அன்னைபால் சென்று தந்திரமாக அன்னவள் மனஞ் சோதித்ததையும், அச்சோதனையைக் கேட்ட தாயின் விஸ்வாஸமும் இருவர் மனமும் ஒன்று பட்டதையுங் கண்டேனென்கிறாய். மேலும் இன்னும் என்ன கண்டாய்.

பாட்டு

**சீராளன் :**

ஒன்று பட்ட இருவ ரென்ன
உற்றிடக் கண்டேன் வாளை - ஓங்கிவெட்டி
பாகஞ் செய்த யோகமுங் கண்டேன்
யோகமுங் கண்டேன் யோகமுங் கண்டேன்.

உரை

**வாத்தியார் :**

ஹே குணமணியே! ஒருமனப்பட்ட இருவரும் அருமையாகிய உன்னைக் கலக்கமில்லாம லறுக்கவும், அறுத்த உடலை சித்ரவதை செய்யவும், மேலும் பல கதைகள் கண்டதாய்ச் சொல்கின்றாய். ஆமாம். இன்னும் என்ன கண்டாய்.

பாட்டு

**சீராளன் :**

தாய்கை பாகம் தவசிக்கிட்டு தயங்கவுங்
கண்டேன் பின் தனையன் வரவும்
இருவர் மகிழ்ந்த சமயமுங் கண்டேன்
சமயமுங் கண்டேன் சமயமுங் கண்டேன்.

உரை

**வாத்தியார் :**

அடா நவமணியே! அப்படி பக்குவஞ் செய்த மாமிசத்தை உன் தாயின் கை பாகமாய் சமையல் செய்து வந்த பெரியாருக்கு அமுதளித்த பெருமையும், அந்தப் பாகத்துக்கும் உன் தாய் தந்தை இருவர் மீதும் பெரியார் வைத்த அன்பின் பெருமையும், அப்பெரியார் முன்னில் நீ வந்ததுங் கண்டதாய்ச் சொல்கிறாய். சொல்லி வந்த வரையில் பலன் விளக்கப்படவில்லை. முடிவு தெரிந்தால்தான் சொல்லலாம். இன்னும் என்ன கண்டாய்.

## பாட்டு

**சீராளன் :**

தூய அறிவா னந்தன்
பாதஞ் சூட்டவுங் கண்டேன்
காட்சி போற்றி நால்வர் வீட்டைச்
சார்ந்த சுகமதுங் கண்டேன். (202)

## உரை

**வாத்தியார் :**

ஹே தெய்வசிரோன்மணி! நீ வந்ததும் அன்பார்ந்த உங்கள் நால்வருக்கும் கருணைகொண்டு, திவ்ய சேவடி தெரிசனம் தந்து, ஆதிமத்யாந்தம் வரையில் நடப்புக்குச் சாட்சி நானே என்றும், பரிபூரணபரமதத்தில் நால்வரையுஞ் சேர்க்கக் கண்டதாகவுஞ் சொல்கின்றாய். மிக்க சந்தோஷம். இவ்வளவுதானா, மற்றுமுண்டா?

**சீராளன் :**

இவ்வளவுதான் சாமி.

## பாட்டு

(தாயே நான் அறுத்துகோ என்ற மெட்டு)

**வாத்தியார் :**

203. பாலா நீ பயப்படாதே - நல்ல
பாங்கு இல்லை தீங்கு - மனம்
பதற விடாதே கேளு (பாலா)

ஆலமுண் டோனை உந்தன்
அருங்கன வினிற் கண்டாய்
அன்றுடன் முன்வினை வென்றனை வென்றனை
நன்று நன்று சுகம் இன்றுடன் பெற்றனை. (203) (பாலா)

## உரை

கண்மணி! நீ கண்ட அரிய சொப்பனத்தில் நீலகண்ட பெருமானுடைய தெரிசனமானதால் அதுமுதல் உனக்கு முப்பிறப்பாலும்

ஏற்பட்ட வினைகள் ஒழிந்து, நல்ல சென்ம சாபல்ய சுகமே உண்டாகும் அல்லது தீங்கு ஏற்படாது. நீ அச்சப்பட வேண்டாம்.

### பாட்டு

**சீராளன் :**

203. சுவாமி! நான் சிறுவ னென்று சொல்லாதீர் வெல்லாதீர்
அதின் சூதெடுத் தோதுவீர் (சுவாமி)

ஈமத் தாடியைக் கண்டால் எளியேன் றனையறுத்தால்
என்ன பலனோவதின் திண்ண மறியும்படி
தன்னுள் மறைக்க வேண்டாம் அண்ணலே உரைத்திடீர்.
(204) (சுவாமி)

### உரை

சுவாமி! இவன் சிறுகுழந்தை யாயிற்றே. இவன் கண்ட சொற்பனம் பொல்லாததாமே. அதன் பலனைச் சொல்ல வேண்டாமென்றும் குழந்தை பயப்படுவானே; உண்மையைச் சொல்லப்படாது என்றும் மறைத்து சொல்லுகிறதா, அல்லது சாத்திரஞ் சொல்லுகிற சமாதானமா சுவாமி? கனவிலே சுடலையாடியைக் கண்டேன். அவருக்காய் என்னை அறுத்து அளிக்கவுங் கண்டேன். இதற்கு என்ன பலன்? அதன் விபரத்தை ஒளிக்காமல் சொல்ல வேண்டுகிறேன் தேசிகா.

### பாட்டு

**வாத்தியார்:**

205. பாம்பு கடிக்கக் கண்டால் அது பாம்போ
மன வீம்போ அதைப் பார்த்தவர் இறப்பாரோ?
நாம் கண்ட சொற்பனமே
நமக்கென்று எண்ண வேண்டாம்
நன்மையெலாந் தின்மை தின்மையெலாம் நன்மை
தன்மனப்படி பித்த வன்மை நடக்கு முண்மை. (205)

### உரை

குழந்தையாய்! நீ பேசுவதெல்லாம் வெகுவிசித்திரமாக இருக்கிறது. கனவிலே சர்ப்பந் தீண்டித் திகைக்தெழுந்தால், பெரும் இரைச்சலிட்டால்

அந்தச் சத்தங் கேட்டவர்கள் ஓடிப் பார்த்தால் அவனை சர்ப்பந் தீண்டி இருக்குமோ? விஷந் தலைக்கேறிச் செத்தேயிருப்பானோ? போ போ. பயித்தியக்கார குழந்தாய், பலன் நமக்கே வருமென்றல்ல, பிறருக்கு வந்தாலும் வரும்; அல்லது கனவில் கண்ட நன்மை தீமையாகும். தீமை நன்மையாகும்; அல்லது பித்தஞ் சிரசுக்கேறி விட்டால் பலவாதங்காட்டும். இதெல்லாம் ஒரு நிச்சயமா போ போ.

## பாட்டு

**சீராளன் :**

206. குழந்தை யான் கண்ட கனா கொல்லாதோ
செல்லாதோ இந்தக் குவலயம் பொறுக்காதோ (குழந்தை)

வழவழா வென்றுரைத்தீர் பிழையன் றல்லோ மறைத்தீர்
வள்ளலே கனவிலுங் கள்ள கனவு முண்டோ
தெள்ளுஞ் சுருதியிலும் உள்ள புரட்டு முண்டோ? (குழந்தை)

## உரை

சுவாமி! சிறுகுழந்தையாகிய யான் கண்ட கனா கொல்லமாட்டாதோ? அப்படி கொன்றுவிட்டால் இந்தச் சரீரமென்ன நிச்சயமோ? பிறந்தவர்களெல்லாம் இறக்காத வரம் பெற்றிருக்கின்றார்களோ? கனவிலும் மாயக் கனவு என்றுஞ் சுருதியில் உண்டோ? அந்தச் சுருதியும் பொய்யுரைப்பதும் உண்டோ? இதில் என்ன பிழை வருமென்று இந்த வழவழத்த பேச்சு பேசுகிறது? சாத்திரத்தை மறைக்கிறது? எதார்த்தமாய்ச் சொல்லுங்கள் சுவாமி.

## விருத்தம்

**உபாத்தியார் :**

207. ஏதடா குழந்தா யிந்த இஷ்டம்போல் பேசப் பெற்றாய்
வேதத்தின் சூத னைத்தும் வெள்ளைவாய் போச்சு துன்பாற்
போதகாச் சாரி யென்ற பொறுமை யுன்னிடத்தி வில்லை
வாதிட வேண்டாங் குற்றம் வருமென்று நூலிற் காணேன். (207)

## உரை

குழந்தாய்! நன்றாயிருக்கிறது! என்னமோ துணிந்து உன் மனம் போல பேசுகிறாயே! சாத்திரத்தில் சொல்லிய சூக்குமங்களெல்லாம்

வெகுசுலபமாய்ப் போச்சு. உபாத்தியாயரென்றும் மாணாக்கனென்றும் பேதங்காட்டாமல் அச்சமென்பதும் சாந்தமென்பதும் உன்னிடத்தில் லேசமுமில்லை. எல்லா மறிந்தவனைப்போல் வாதாடுகிறாய். வீண்வம்பு வேண்டாம். நீ கண்ட கனவின் பலன் விசேஷமே. எவ்வித கலகமுங் கிடையாது. இன்றைய பாடங்களைப் போய்ப்படி. அப்பா மனநிலை தவறாதே.

### பாட்டு

**சீராளன் :**

நிலைதவறாது என்றீர் அய்யாவே அய்யா - என்ன
நேரிடுமோ நானறியேன் அய்யாவே (குழந்தை)

### உரை

அய்யனே! நான் கண்ட சொற்பனத்தினால் நிலைதவறாது என்றும், அப்படி தவறினால் சாத்திரமுஞ் சத்தியமும் பொய்யாகு மென்றுஞ் சொல்லிற்று. இதனால் இன்னதுதான் வருமென்று அறியாமல் மயங்குகின்றேனே சுவாமி.

**உபாத்தியாயர் :**

குழந்தாய்! அதனாலே மயங்க வேண்டாம். நான் சொல்வதைக் கேள். ஒருவனுக்குப் பெருந்துக்கம் உண்டானால் அதையே நினைத்து நினைத்து உருகாமல் தாம் நம்பி இருக்குந் தெய்வத்தையாவது கருதி துதித்து அத்துக்கத்தை ஆற்ற வேண்டும்; அல்லது ஏதாவது ஒரு தொழிலைச் செய்து மறக்க வேண்டும்; அல்லது ஏதாவது ஒரு புத்தகத்தை எடுத்து அதில் படித்து தன் மனதை நிறுத்த வேண்டும் என்று முன்னோர் சொல்லுவது போல நீ உன் பாடத்தைப் படி; அந்த நினைவை மாற்று.

### பாட்டு

**சீராளன் :**

கலைகளுணரச் சொன்னீர் ஐயாவே ஐயா - எந்தன்
கருத்தினில் மாயவில்லை ஐயாவே. (குழந்தை)

### உரை

சுவாமி! பாடத்தைப் படிக்க வேணுமென்றால் என் மனம் படிப்பில் பதியவில்லையே. அடிக்கடி திகில் திகில் என்று இந்த நினைவு எழும்பினபடியே இருக்கின்றது சுவாமி.

**உபாத்தியார் :**

மைந்தா! அது என்ன சங்கதி. கனவில் அறுக்கக் கண்டேனென்றாயே. அப்படி அறுத்து விடுவார்களோ என்னும் அச்சமோ?

### பாட்டு

**சீராளன்:**

மைந்தனை அறுப்பாரென்று ஐயாவே ஐயோ - பாலன்
மனதில் வருத்தமில்லை ஐயாவே. (குழந்தை)

### உரை

தேசிகா! என்னை அறுத்துவிடுவார்களே; என் பிராணன் போய்விடுமே; என் வாழ்வு போய் விடுமே; ஐயோ நெடுங்காலம் இருந்து வாழலாமே; இந்தச் சரீரத்தை நிச்சயப் படுத்துவது எப்படி? என்று லேசமும் மனதில் சஞ்சலமில்லை சுவாமி.

**வாத்தியார் :**

ஹே பாலகா! இவ்வளவு திடமாய்ப் பேசுகின்ற உனக்குத் திகில் வருவானேன். எந்த சந்தேகத்தால் இப்படி உளறுகிறாய்?

### பாட்டு

**சீராளன் :**

தந்தைதாய் செய்தர்மத்தில் ஐயாவே ஐயா - வந்த
தாட்சி என்னவோ காணேன் ஐயாவே. (குழந்தை)

### உரை

சுவாமி! என் மாதா பிதாக்கள் எடுத்து வந்த நீடிய தருமத்தில் என்னவோ பெருங்குற்றம் ஏற்பட்டு தர்மதாட்சியாகிப் பின்னும்

முன்போலாகுமோ என்றும், இன்னும் என்ன குற்றமோ என்றும் சந்தேகமடைகின்றது ஐயனே.

**வாத்தியார் :**

போடா போ. தேக சோம்பேரித்தனமாய் நித்திரை செய்தானாம்; கனவு கண்டானாம்; தாய் தந்தைகள் செய்த தர்மத்தில் என்னமோ குற்றம் வரப் போகுதாம்; ஞாயம் நான்றாயிருக்கிறது. அனுபவமறியாத சிறுபிள்ளை கண்ட கனவு நிச்சயமா?

**பாட்டு**

**சீராளன் :**

உத்தமன் கண்டகனவில் ஐயாவே ஐயா - இதில்
ஒன்றும் பிசகிராது ஐயாவே. (குழந்தை)

**உரை**

சுவாமி! மனிதர்களுக்கு வயது 100. அதில் உத்திம வயதென்றும் மத்திப வயதென்றும் அதம வயதென்றும் அதாமா அதம வயதென்றும் சொல்லப்படும். அதில் உத்தமம் 15 மத்திபம் 40 அதமம் 75 அதாமா அதமம் 100 என்றுஞ் சொல்லப்படும். இதில் உத்தமபருவம் அனுபவம் அறியாத காலம் மத்திபபருவம் அனுபவ ஆசை கால யானந்த காலம் அதம பருவம் முன்பின் அனுபவ விசனகாலம். அதமா அதம பருவம் 15க்குள் மகா உத்தமனென்றும் அதர்மனென்றுஞ் சொல்லப்படும். இதில் இந்த வயதுடையான் மகா உத்தமன். நான் கண்ட கனவு பொய்போகாது சுவாமி.

**வாத்தியார் :**

ஆஹா! இவன் மகா உத்தமனாம்; கனவு கண்டு விட்டானாம்; அது பொய் போகாதாம். என்ன சட்டதிட்டமாய்ப் பேசுகின்றான். குழந்தாய்! நீ சொல்வது போல கண்ட கனவிற்கு அனுபவத்தில் உண்மை எப்படி அறியக் கூடும்? வீணாய் ஏன் பிதற்றுகிறாய்? இது என்ன நிச்சயம்? போ போ.

**பாட்டு**

**சீராளன் :**

சற்றுநேரத்தில் பாரும் ஐயாவே - பெற்ற
தந்தைவர காண்பிப்பேன் ஐயாவே. (206) (குழந்தை)

### உரை

ஞானதேசிகா! நான் கண்ட சொற்பனத்தின் பலனை இன்னுஞ் சற்று நேரத்தில் என்னைப் பெற்ற தந்தையர் வரக் காண்பிக்கிறேன் பாருங்கள்.

**வாத்தியார் :**

கண்ணே! சரி அப்போதுதான் உன் கனவு நிச்சயம் குழந்தாய். இதில்தான் நீ இதுவரையில் சொல்லி வந்த விபரம் தெரியும். பார்க்கிறேன் போ. உன் பாடத்தைக் கவனி.

### பொதுநடை

இப்படிக்குப் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயரும் சீராளனும் சொற்பன விசேஷத்தை தர்க்க சம்பாஷனை செய்து கொண்டு இருக்கிறார்கள். இதுவும் உதையாதி மணி 11க்கு முதல் 1 மணி வரையில் நடக்கும் சம்பாஷனை - பள்ளிக்கூடத்தில் பிள்ளைகளும் ஆசிரியருந் தவிர இதனுள் உள் நுழையப்படாத எவர் வந்தாலும் வெளிநின்றுதான் பேச வேண்டும். பள்ளிக்கூடம் நாயனார் சத்திரத்திற்குக் கீழ்பால் அரை மைலுக்குள்ளாகும். அத்தருணம் நாயனார் வந்து வெளிநின்று பள்ளிக் கூடத்துள் எட்டிப்பார்க்கிறார். அப்பாரைக் கண்டவுடன் மற்ற பிள்ளைகள் ஓடிப் போதகர் அருகிலிருக்கும் குழந்தைக்குச் சொல்லுகிறார்கள். குழந்தை திரும்பிப் பார்க்கிறான். தந்தை கை காட்டி அழைக்கிறார்.

### பாட்டு

(என் முகம் பார்த்தருளையா என்ற மெட்டு)

**நாயனார் :**

208. கண்மணி சீராள தேவா - என்
கருணை தவகுழந்தாய் இங்கு நீ வா வா (கண்மணி)

தண்மலர் பாத கிண்கிணி சிலம் பொலித்திடத்
தாரளமாக நம் எண்ணம் பலித்திட (கண்மணி)

### உரை

**சீராளன் :**

அப்பா! என்றுமில்லாத வழக்கம் போல் இந்த வெய்யலிலே வந்த விசேஷமென்ன?

### பாட்டு

**நாயனார் :**

பொன்ன ரண்மனை போவோம் வாராய் - பெரும்
புகழுஞ் சுகமும் யோகங் கிடைக்குது நேராய்
இன்னேரம் நீ வரும் வழிபார்த்து - கண்கூசி
இங்கு வந்தே னெக்கில்லை யோவுயிர் பசி (கண்மணி)

### உரை

**சீராளன் :**

பிதா! எனக்குப் பசிதான். என்றைக்குமேல் இன்று நேரந்தான் ஆகிறது. ஆனாலென்ன? தோழர்களில்லையா? எப்போதும் போல வருகிறேன். அவசியம் வீடு போக வேண்டுமென்கிற விசேஷமென்ன? இது வரையிலுமில்லா புகழும் சுகமும் யோகமும் எங்கிருந்து கிடைக்கின்றது? வந்த கருத்தைச் சொல்லட்டும்.

### பாட்டு

**நாயனார் :**

சீராரும் வடதேசத் துரியோர் - நம்மை
தேடி நம்மனை தன்னில்வந்தா ரோர்பெரியோர்
ஏராரும் உன்னைப் பார்க்க இச்சை கொண்டிருக்குறார்
இணையடி தொழுதவர் அட்சதை தரிக்கநேர் (கண்மணி)

### உரை

**சீராளன் :**

அப்பா! சிறப்போங்கிய வடதேசத்திலிருந்து நாம் என்றுங் கண்டு மகிழாதவோர் அரிய ஞானியார் நம் கிரகத்திற்கு வந்தாரென்றும், அது கிடைக்கத் தகாத அனுக்கிரக காட்சி என்றும், தாங்கள் அந்தப் பொற்பாத சேவை செய்து கொண்டோமென்றும், அந்தப் பெரியார் என்னைப் பார்க்க இச்சைகொண்டு இருக்கிறாரென்றும், அப்போது யான் வர வேண்டும் என்றும் சொல்லுகின்றது வாஸ்துவம். இப்போது என்னால் செய்ய வேண்டியது என்ன?

## பாட்டு

**நாயனார் :**

தீதறப் பாடங்கள் யாவும் சொல்லித்
தெளிவுறப் பதில்கேட்டுக் கொண்டாயோ - கலைமேவும்
நீதிகொள் வாத்தியார் திருவடி துதிகொண்டு
நீவிடை பெற்றுவந்தால் நன்மைக ளுண்டு (208) (கண்மணி)

## உரை

**சீராளன் :**

தந்தையே! எனக்குள்ள தின காலபாடங்களைப் போதகர்பால் ஒப்பித்து, விசாரணையில் தெளிந்து, பதில் கேட்டு, பின்னும் வேண்டிய பாடங்களைக் கேட்டுக்கொண்டு நம் குருநாதர் ஆசிபெற சீக்கிரம் வந்தால் சுகமே கிடைக்குமென்றுந் தெரிவிக்கின்றது வாஸ்துவம். இன்று பாடம் எவ்வாறு இருக்கினும் எனக்கு யேற்பட்ட இன்றைய சந்தேகங்களை முக்கிய விசாரணை செய்து கொண்டேன். வந்த பெரியார் தரிசனைக்காக எனது ஆசிரியருக்கும் நண்பர்களுக்குஞ் சொல்லிக் கொண்டு விடை பெற்று இதோ வருகின்றேன். சற்று பொறுத்திருங்கள்.

## பாட்டு

(வால சித்த யிந்தே என்ற மெட்டு)

209. நிர்க்குண விநோதா விமலானந்த பிரக்கியாதா (நிர்க்குண)

சற்குரு நின்னருள் பாதம்
மெய்க்க பணிந்தே னிப்போதும்
தர்க்க மில்லாமலே சந்தம்
சாற்றுவேன் மாமறை போதும் (நிர்க்குண)

## உரை

சாந்த சத்துவத்தில் சத்துவனாகவும், மும்மல மற்றவனாகவும் சொல்லுதற்கரிய பூரணனாகவும் பரமத்தைப் போல அடியேனுக்குக் குருமூர்த்தங் கொண்டெழுந்தருளிய தேசிகா! அரிய பொற்பாதம் அணுந்திக்க இதோ வந்திருக்கின்றேன். அருமைக்கு எவ்வித குதர்க்க முமில்லாமல் ஆசீர்வதிக்க வேண்டும் குழந்தையாகிய யான் சாற்றுவதைக் கவனிக்க வேண்டுகிறேன்.

**வாத்தியார் :**

குழந்தாய்! என்ன விசேஷம்? என்ன தெரிவிக்கின்றாய்?

### பாட்டு

**சீராளன் :**

மைந்தன் கண்ட சொற்பனம் போல்
இந்தோ பாருந் தேவர் கண்ணால்
தந்தை வந்திருப் பதினால்
சங்கதி யறியேன் பின்னால். (நிர்க்குண)

### உரை

தேசிகா! சிறுவனாகிய யான் கண்ட சொற்பனம்போல் இன்னுஞ் சற்று நேரத்தில் என் தந்தையார் வர நேரே காண்பிக்கிறேனென்று சொன்னபடி இதோ என் தந்தை வந்திருக்கின்றார். பாருங்கள்.

**வாத்தியார் :**

ஆஹா! இது மிக்க ஆச்சரியமே. ஹே உத்தம சிகாமணி! வந்தது என்ன விசேஷமென விசாரித்தனையா?

**சீராளன் :**

சுவாமி! அதை விசாரிக்க வேண்டிய அவசியமில்லை. கண்ட சொற்பனத்தின் சாட்சிக்கு இதுவே முதல் ஆரம்பம். பின்னால் என்ன ஆகுமோ அறியேன்.

**வாத்தியார் :**

ஹே கண்மணி! நீ அவர்பால் சென்று சம்பாஷித்ததில் அவரால் தெரிவித்தது என்ன?

### பாட்டு

**சீராளன் :**

தாட்டீ கமன முடையோர்
வீட்டுக் கென்னை அழைத்தலால்
வாட்ட மடையாமலே நேர்
கேட்டு கொள்ளு மடியேன்மேல் (நிர்க்குண)

மெத்த தயை புரிந்து
உத்தரவு தருவீரேல்
புத்திர னிதோ பரிந்து
பிதா மகிழ போய்வாறேன். (209) (நிர்க்குண)

### உரை

சுவாமி! திடசித்தமுடைய எனது பிதாவானவர் சீக்கிரம் வீட்டுக்குப் போக வேண்டுமென்று அழைக்கிறார். தங்கள் மனதில் கொஞ்சஞ் சந்தேகிக்காமல் மிக்க தயைசெய்து உத்தரவு அளித்தால் பாலனாகிய யான் அவர் மனம் ஆனந்திக்கப் போய் வருகிறேன்.

### விருத்தம்

**வாத்தியார் :**

210. சரவணப் பெருமான் றானோ தன்வந்திரி யாமோ உன்னைப்
பிரகலா தனனென் றேத்த பின்வரு மாரோ காணேன்
தரமுந் தன்கனவின் சாட்சி தந்தையைக் காட்டக் கண்டேன்
வரும்விதி யறியே னப்பா வாழிமேல் வாழி சொல்வாய். (210)

### உரை

ஹே குணமணியே! உன்னை எல்லாமுந் தானாக இருந்து தகப்பனாகிய ஞானோபதேசஞ் செய்து வைத்த சிவசுப்ரமனியக் கடவுளே என்பேனோ? அல்லது பாற்கடலில் அமுதங்கடைந்தெடுத்த காலத்து அவதரித்த பகவானுக்கு ஒப்பிடுவேனோ? எதிர்கால நிலமை அறியாத மூடனாகிய யான் என்ன திடத்தைக் கொண்டு செப்புவேன்? எவ்வகையிலும் என் மனந் திடப்படவில்லையே. கனவில் கண்ட உண்மை விளங்க நேரே உன் தகப்பனைக் காட்டினாய். என்னால் இன்னதுதான் ஆகுமென்று எனக்குத் தெரியவில்லை. பெற்ற தகப்பனே வந்து கூப்பிடுங் காலத்து என்னால் தடுத்துப் பேச என்ன திடம் பெற்றேன்? சந்தோஷமாய்ப் போய் வா.

(தோழர்களிடம்)

### பாட்டு

இராகம்: தில்லாந்திரி

**சீராளன் :**

211. அப்பா எனக்கிஷ்ட முள்ள அரிய குல விளக்கே
தப்பா மொழிவாய் திறந்து என்சொல்வே னுங்களுக்கே

எப்பாரின் எக்குலத் தோரினும் நம்மைப் போல இஷ்டம்
ஒப்பாரவே யிருந்தா ருண்டோ இல்லையது கஷ்டம் (அப்பா)

எள்ளும் எண்ணை கண்ணின் மணியாக இருந்தோரைத்
தள்ளித் தனித்தரவின் வாயின் தவளையாகப் போறேன்
பள்ளி வந்த நாளாய் நீங்கள் பார்த்திருக்க உண்ணேன்
உள்ளந் துணிந்தெப்படி நான்வீடு போவே னண்ணே (அப்பா)

போறேனிங்கு பின்னும் வருவேனோ வாசிப்பேனோ
ஏராளவென் தந்தை தாயார் இஷ்டம் நேசிப்பேனோ.
(211) (அப்பா)

## உரை

ஆ! எனது ஆருயிர் துணைவர்களே! அந்தண குலத்து செல்வர்களே! பொய்யாத என் வாய் திறந்து நீங்கள் என்பாலிருந்த அருமையை எப்படி வசனிப்பேன்? நண்பர்காள்! எந்த உலகத்தினும் எந்த குலத்தவரினும் நம்மைப் போல ஒருமைப்படாக இஷ்டமாய் இருந்தவர்கள் இல்லை. ஐயோ நாம் இருந்த நிலைமை எப்படி என்றால் எள்ளும் எண்ணை போலும், கண்ணின் மணியைப் போலும் பேதமற்று இருந்த உங்களைத் தனித்துப் பாம்பின் வாயின் தவளைபோல் எப்படி பிரிந்து செல்வேன். அப்படி போகிற யான் மறுபடியும் பள்ளிக்கூடம் வருவேனா? எப்போதும் போல வாசிப்பேனா? தெரியவில்லையே ஆகையால் மனோதையிரியத்துடன் என் தந்தையுடன் போக உத்தரவளிக்க வேண்டுகிறேன் அண்ணன்மார்களே.

## விருத்தம்

**தோழர்கள் :**

212. அன்னை தந்தையர்கள் தாரம் அருஞ்ச கோதரர்க ளிஷ்டந்
தன்னையே யிழந்த பாவி தனியனா யானோ மப்பா
முன்னை நீமொழிந் ததேபோல் முகமிலுன் பிதாவைக் காட்டிப்
பிள்ளைநீ போறே னென்றாய்ப் பிழையென்னோ அறிந்தி லோமே
(212)

## உரை

**நரசிம்மன் :**

ஹே கண்மணி! நீ சொல்லக் கேட்க எங்களுக்குப் பயமாய் யிருக்கிறது. ஐயோ தக்க காலத்தில் தாய் தந்தையை யிழந்த பாவி,

சகோதரரை யிழந்த பாவி, தாரம் இழந்த பாவி, இஷ்டர்களை யிழந்த பாவி, தனையர்களை யிழந்த பாவி இவர்களெல்லாம் பாவிகளல்ல; இவர்களிலும் பெரும்பாவி நாங்களே ஆனோம். ஐயோ நீ கண்ட கனவின் பயனை ஒக்க நேரே உன் தகப்பன் வரக்காட்டி அவர் பின்னே நீ போறேனென்கிறாய். இது என்ன மோசம்! நாங்கள் என்ன செய்வோம்?

## பாட்டு

**தோழர்ககள் :**

213. மைந்தா உனைபிரிந்து எப்படி பொறுப்போம்
இந்த வயதிலயன் எழுதின குறிப்போ
அந்தர் யாமி யமைத்த செயலிதோ. (மைந்தா)

ஐயருன்னை யழைக்க வந்தாரோ
ஐந்து வயது குழந்தை பேசிடும்
அருமை கவிகளைக் கேட்க வந்தாரோ
அற்புதம் நீகண்ட சொற்பனம் போலே (மைந்தா)

தப்பி லாமலுன் அப்பன் வந்திடச்
சாட்சி காட்டினைக் காட்சி என்னவோ
எப்படி மன தொப்பி வாழுவோம்
ஈஸ்பரன் செய்யுந் தீமை என்னவோ (மைந்தா)

கூவி யழவும் எங்கள் ஆவி சிதறுதே
பாவி பிரமனிப் பரிதா பங்களைப்
பார்க்கத் தானோ குறை தீர்க்கானோ உனை
தாவி ஏமனும் வந்து அழைத்தானோ (மைந்தா)

நேசர்களை விட்டு போறாயோ அப்பா
தேசிகா எங்கள் முகத்தைப் பாரடா
சேர்த்த ணைத்துமோர் முத்த மீயடா
ஆசை நீங்க உபாத்தி யார்க்கடா
அடிபணிந் தையருடனே போய்வாடா. (213) (மைந்தா)

## உரை

ஆ! என் அருமை சிகாமணியே! எங்களை விட்டு பிரிந்து போகுறேனென்கிறாயே. எப்படி நாங்கள் தனித்திருப்போம்? ஐயோ

ப்ரம்மன் இப்படியா எழுதினான்? ஈச்சுரனும் அதற்கு உடன்பட்டானா? அடா கண்மணி! உன் தகப்பனார் எதற்காக வந்தார்? நீ படிக்கக் கேட்க வந்தாரா? அல்லது எமனாக வந்தாரா? ஐயோ என்ன செய்குவோம்? உனக்கு வந்த ஆகாத காலம் போல் எங்களுக்கு வரப்படாதா? நீ அழும்போது எங்கள் வயித்தை எரிகிறதே -ஆ- ஆ -ஆ- தம்பி எங்களை இருகையாலும் அணைத்து முகத்தை ஒரு தரம் இன்னும் ஒரு தரம் பாரடா. அந்த பாவி பிரமனுக்கும் உன் பரிதாபம் பார்க்கத் தயவில்லையா? அய்யோ மனந் துணியவில்லையே. ஆ!

## விருத்தம்

**சீராளன் :**

214. வாழ்வினை சதமென் றெண்ணி மாயையிற் சிக்கி னோர்கள்
தாழ்வுடன் வாழ்வை மேவாய் சஞ்சலிப் பார்க எல்லால்
ஊழ்வினை யறிய மாட்டார் உண்மையாச் சொன்னேன் இஃதை
கேள்வி யாலறிந் திலிரோ கேளுங்க ளண்ண மாரே. (214)

## உரை

ஆருயிர் செல்வங்களே; அன்புமிக்க அண்ணன்மார்களே. உங்களைப் போல வாய்பேசிகள் எங்குமில்லை. உலகில் இந்த சரீர வாழ்வை சதமென எண்ணி, மாயா கற்பனையை சதமாகப் பாவித்து, அறிவீனத்தால் உலக வாழ்வை மேலாக நம்பி காயமெல்லாஞ் சரிபார்க்க மாட்டார்கள். இருவினைப் பயனால் வந்ததென்று மனதை ஒறுக்க மாட்டார்கள். நான் சொல்வது சத்தியம். இந்த ஜென்மம் வந்த வகையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

## பாட்டு

இராகம்: கை தோடி

**சீராளன் :**

215. ஓகோ அண்ணமாரே கேளுங்கள் - ஒரு
உத்த சேதி சொல்லுகிறேன் நத்தி வாருங்கள் (ஓகோ)

ஜென்மம் வந்த சேதி யறியீரோ - நீங்கள்
தேம்பி தேம்பி சோம்பி யழுதென்ன கண்டீரோ (ஓகோ)

காய மநித்யம் இதல்லவோ - சிவன்
கட்டி வைத்த கட்டுசோத்து மூட்டை யல்லவோ (ஓகோ)

வீரர் ஐவர் விளையாடுங் காடு - எமன்
வெட்டுங் கட்டை யித்துண்டம் வீண்குப்பை மேடு
கூடி யிருந்தோ மிதுகாலம் - உயிர்க்
கூடு விட்டோடும் போது துணையாமோ யிக்கோலம் (ஓகோ)

என்னை நம்ப வேண்டாம் நண்பரே - அந்த
ஈசன் நேசன் தேசிகன்றாள் இருந்தாளப் போறேன்
சொன்னேன் எந்தன் றோளை விடுவீரே - தந்தை
சுக்கிலத்தால் வந்த பிள்ளை சுகமாய்ப் போய்வாறேன். (215) (ஓகோ)

## விருத்தம்

**சங்கரன் (தோழர்கள்) :**

216. பாங்கனே உன்னைப் பெற்றோர் பசப்பியே அழைக்கும் போது
நாங்களென் செய்வோ மப்பா நவின்றனை எமக்கு புத்தி
வேங்கை வாய்பட்ட கோவை மீட்கவும் போமோ இன்று
நீங்கினோம் இருந்த இஷ்டம் நேசனே போய்வா றாயே. (216)

## மேற்படி உரை

தம்பி! அரிய தவத்தைச் செய்து வேண்டுமென்று உன்னைப் பெற்ற தந்தையே பிள்ளை யாசையை அறுத்து, இப்போது உன்னை ஜாலமாய் அழைக்க வந்திருக்கின்றார். மத்தியில் எங்களால் என்ன செய்யக் கூடும்? எங்கள் மதியீனத்திற்கு நீயே புத்தி கற்பிக்கின்றனை. வேங்கை வாயில் அகப்பட்ட பசுவை மீட்கத் தகுமோ? தகாது. இன்றோடு நாம் கூடியிருந்த இஷ்டத்தை மறந்து விடுங்காலம் வந்தது. சந்தோஷமாய்ப் போய் வா.

## பாட்டு

**சீராளன் :**

217. அந்தணகுல அண்ணன் மார்களே
வந்தனம் போய் வருகின்றேன். (அந்தண)

## உரை

அப்பா! போதகாச்சாரியாரிடத்தும் தோழர்களிடத்தும் விடைபெற்றுக் கொண்டு வந்துவிட்டேன். சூரிய வெப்பத்தை என்னால் தாங்க முடியாது. கால்கள் கொப்பளித்துப் போகும். வந்த பெரியார் காத்திருப்பார். காலம் போக்காமல் தங்கள் தோளின் மீது தூக்கிச் செல்லுங்களப்பா.

## பாட்டு

**சீராளன்**

தந்தையே என்னைத் தோளிற் றூக்கவே ஓ அம்மா
  தாங்கலிற் றும்மல் கேட்குதென் செய்வேன்
முந்தி ரெண்டடி பேர்த்து வைக்கவே ஓ அய்யா
  முழக்குதே பல்லி என்ன புதுமையோ (அந்தண)

காகம் எதிரில் கட்டி விழுகுதே ஓ அய்யா
  கைம்பெண் ணொருத்தி அழுது புரளுறாள்
கூகை குளறி ஆந்தை அலறுதே ஓ அய்யா
  குற்ற மென்னவோ பட்ட பகலிலே (அந்தண)

சந்தியில்லொரு சர்ப்பத்தைக் கண்டீரோ ஓ அய்யா
  தாதருஞ் செக்காருந் தச்சருஞ் சக்கிலி
வந்த நரன்தனைக் காண கிடைக்காதோ ஓ அய்யா
  மர்ம மறியேன் தர்ம குறையுண்டோ. (217) (அந்தண)

## உரை

பிதா! இந்த அபசகுனத்தால் என்ன குற்றமோ தெரியவில்லை. வந்த பெரியவர் இருக்கின்றாரோ இல்லையோ? அல்லது செய்து வந்த தர்மத்திற்கு என்ன குறையோ தெரியவில்லை.

**நாயனார் :**

ஆ என் அருமை செல்வமே! கண்டு வந்த சகுனமெல்லாம் கட்டுச்சகுனமே தவிர குற்றமாகத் தெரியவில்லை. உள்ளத்தில் ஒன்றும் குறையாது. பேசாமல் வருவாய்.

## பாட்டு

இராகம்: சங்கராபரணம்

**நங்கை :**

218. பாலகனே வா பண்டிதனே வா - நாம்
பண்ணுந் தவத்தால் வந்த புண்ணியனே வா
சீலனே நான் பெற்ற செல்வமணி விளக்கே (பாலகனே)

சித்திரமே எந்தன் புத்திரனே
சாலமா யெனக்கின்ப காவலனார் கினிக்கத்
தத்துவங்கள் படிக்க முத்தந்தனை கொடுக்க
அப்பா மகனே உன்னை எப்போ வருவாயென்று (பாலகனே)

அன்னையாள் காத்திருந்தே னிந்நேரம்
முப்பழமொரு அன்னம் அப்பளம் வடையுண்ண
உள்ளபடி பெருக்கக் கிள்ளை மொழிபடிக்கக் (பாலகனே)

கண்ணே மணியே நல்கனிரசமே தெய்வந்
கற்பகமே எனக் கற்புதமே பாலா
விண்ணவனே ஒரு வண்ணப் பண்களைக் கூறு
வித்தகனே விளம் ரெத்தினமே எந்தன். (218) (பாலகனே)

## உரை

**நங்கை :**

ஆ! என் அருமை செல்வமே! நாங்கள் உன்னைக் காணுதற்கு அரிய தவங்களைச் செய்து, என் வயிற்றில் அவதரித்துப் பத்து மாதஞ் சுமந்து, அதனால் படவேண்டிய கஷ்டங்களைப் பட்டு, உன்னைப் பெற்றெடுக்குங் காலத்து எமவாதைக்கு ஆளாகிப் பெற்று, இன்னாள் வரையில் உன்னை வளர்க்க என்ன பாடு பட்டேனோ அந்தப் பிள்ளையாசை பாடெல்லாம் இன்றுடன் ஒழித்தேன் மகனே. உன்னை வேண்டுமென்று பெற்ற தாய் தந்தைகள் நீடித்து எடுத்த தவம் உன்னாலேயே அதின் லாபத்தை அடைய வேண்டிப் பெருந்தவத்தைத் தாங்கி வந்த மிக்க வாசனையுடைய பூச்செண்டே! தெவிட்டாத தேனே! கசக்காத கற்கண்டே! மாசிலாத மரகதமே! ஒப்பில்லாத முத்தே! அடங்காத ஆனந்தமே! அப்பா காலம் போகாமல் தீர்த்தமாட வருவாயடா கண்ணே.

## பாட்டு

இராகம்: காதல் நீலாம்புரி

**நங்கை தாலாட்டல்**

219. *ராராரோ ராரிரரோ ராரிரரோ ராராரோ*
*ராரிரரோ ராராரோ ராராரோ ராரிரரோ*

சீராகுஞ் சோழநகர் செங்காட்டாங் குடிதனிலே
பேரோங்க வந்துதித்த பிரபலனே கண்ணுறங்காய் (ராராரோ)

சீர்காழி சம்பந்தர் திருவாழி பாடல்பெற்று
நேர்பதவி தேடுகின்ற ரெத்தினமே கண்ணுறங்காய் (ராராரோ)

## மேற்படி பாட்டு

இராகம்: நீலாம்புரி தாளம்: சாப்பு

சிறுத்தொண்டர் தானதர்மம் செழித்தெங்கும் பேரோங்கு
வெறுத்தலிலா தாளவந்த விண்மணியே கண்ணுறங்காய்
(ராராரோ)

கண்ணே என்கண்மணியே கட்டிமுத்தே என்மகனே
திண்ணமிலா தேசிகனே சீராள கண்ணுறங்காய். (219) (ராராரோ)

## மேற்படி பாட்டு – லாலி

இராகம் : ஆனந்த பைரவி

**நங்கை :**

220. *லாலி சர்வாத்ம லாலி ஜகனாத லகுனேச விஸ்வ லாலி*
*லாலி புருபார்த லாலி சீவபத நாதகரு ணேச லாலி*

மதி முத்த பதசத்தியா உனதன்பு
எதி சித்து விதமொத்தவா
துதி சித்த மெது நத்தியோ அரிய
சுய பதன நத்து வதை யொத்ததோ. (220) (லாலி)

## வேறு பாட்டு

தாளம்: அடதாளம்

**நங்கை :**

221. ஜய லாலி மெய்ய லாலி - பக்தி
ஆவர்த்தனமா யொத்து பிணித்த லாலி
பரம லாலி தரும லாலி - கர்ம
நஞ்சை விஞ்சை நெஞ்சுடை குஞ்சித லாலி (லாலி)

வேத லாலி போத லாலி - கண
விஞ்சையர் அரி மாமர் போற்று லாலி
தேகி லாலி யோகி லாலி - அன்பர்
சித்த சாதன மயக்கொழிக்கும் லாலி. (221) (லாலி)

## பாட்டு - ஏசல் சீர்

இராகம்: சேதனாமிர்தம்

222. பூதகண நாதரடி யோது - துதி
சகசமுற் போது
சத்த தாதுருகி ஞாதியர்பால் வாது - செய்
பேதுற்றதோ சாது (பூதகண)

செம்மை செயும் அம்மை யுளம்
எம்மையு மறந்தனளோ சீறி - அருள்
செம்ம ஞனைப் பொம்மலிட
அம்மையிலும் வரவேற்றோந் தேறி (பூதகண)

ஒப்பரிய கண்ணப்பன்
உளமறிந்ததும் போதாதோ - நேசம்வைத்து
உண்மையினும் உண்மையினை
உலகறிய யேற்றனையோ - பாகம்
அப்பரிய முப்பழம் போல்
அருந்தினதுங் காணாமல் - வேகங்கொண்ட
அன்பரகம் அம்மை யகம்
ஆதரவா யேற்றனையோ தியாகம். (222) (பூதகண)

## ஏலப் பாட்டு

இராகம்: சேதனாமிர்தம்

223. ஏலேலோ ஏலிலலோ தத்தையா
ஏலிலலோ ஏலேலோ

வித்தாரமா யெழுந்து பரந்துலக
வெளியேறி மேல் தழைந்து
நத்தாத விடங் குழைந்து
நிலைத்தொழிலில் நாடு மறிவானந்தா. (223) (ஏலேலோ)

## முடுகு

224. பற்றாததெலாம் பற்றிப் பாங்கினில் வைத்துப்
பரிவாக வெல்லாமுந் தானாக வொத்து
கற்றோர்ப் பதத்தைத்தன் தலைமேலும் வைத்து
கமல ரத்தினமேடை யரசாளுஞ் சித்து
கண்ட வெலாங் தையேந்தித் தன்னினைவின்
காதலராய் அகச் சாந்தி
கொண்ட வெலாஞ் சித்தாந்தி உண்ணறிய
குணமறி வார்யார் காந்தி. (224)

## முடுகு

225. அகண்டிதா காரபர அசல ப்ரகாச
ஆனந்த தானந்த மறியாச்சா பேச
சகண்டைநேர் வேதவழி சகலத்தின் நாச
சாட்சியாய் நின்றடிமை கொன்றும் கைவாச. (225)

## விருத்தம்

**நாயனார் :**

226. மதன சிந்தாமணி பொறுக்கிக் கோர்த்தார்போல
வர்ணிக்கும் பாங்கியுரை விலக்கித் தொண்டர்
அதனை யெடுத்தினி தவணை யாகாதென்று
சுடர்வாள் கைதாங்கி யுள்ளறையிற் சென்றார்
அதனை மடிதாய் வாங்க அன்பர்பக்தி
தொடுத்திட்டார் அறிய தலைபிடித்திட் டாரே. (226)

## பாட்டு

**நாயனார் :**

227. பிடிபடி மாமானே கைகால்களைக்
கொடியா மற்றானே
வடிவுள்ள மகனுயிர் மாய்க்க வேணுஞ் சத்தம்
பிடிவிடாமற் பிடிக்க வேணும் ரத்தம். (227)

## விருத்தம்

**எழுந்த சீராளன் :**

228. ஆகாகாக எனைப டைத்தவா அழலாடி உன்னி மித்தம்
ஓகோகோ யிவர்கள் செய்யும் யோக்கிதை என்ன வாச்சு
நோகாமல் எனைஅ றுத்து நுண்மையை அறிவா ரானால்
சாகாமற் சாகும் நானுஞ் சாபல்யம் பெறக்கூ டாதோ. (228)

## உரை

**சீராளன் :**

அரகரா அரகரா! சிவசிவா சிவசிவா! ஆஹாஹா! சிறுவனாகிய எனக்கு இச்சென்மாவைக் கொடுத்து அனுப்பாய். சோதி சொரூபா! உன் திருவடிக்கி அடிமையாகப் பற்றிய புல்லறிவைக் கொண்டு இருவரும் எண்ணிய எண்ணம் எவ்வாறாயிற்று? ஓகோகோ மனிதராய்ப் பிறந்தவர்களிலே இப்பரந்த உலகத்தின்கண் இந்த அறிவைப் பெற்றவர்கள் உண்டெனச் சொல்லப்படுமா? நன்றாயிருக்கிறது. பெற்ற குழந்தை என்றும், மதலை என்றும், ஜீவ வதை என்றும், எந்த மார்க்கத்திலும் ஒப்பத் தகாது என்றும் ஆராய்ந்து நிச்சயப்படுத்தாமலும் நோகாமல் என்னை அறுத்து தன் தவத்தை முடித்துக் கொண்டார்களே யானால் சடத்துடனிருந்து தன் மரணகர்மத்தால் விட்டுவிலகும் யான் உன்னுடைய திருவடியைக் குற்றமில்லாமல் வந்தடையப்படாதோ. ஏ ஈசா! இதுவும் நான் செய்த பாவமா? இதுவும் ஒரு தர்மமா? போகட்டும். மாதா பிதாக்களுடைய தவமும் நினைவும் எவ்வாறென விசாரித்துப் பார்க்கிறேன்.

### பாட்டு

**சீராளன் :**

229. அன்னை தந்தையர்களே என்னை நீர் பெற்றீர்களே
அதுமுதல் சொல்லுவீர்களே ஆ ஆ ஆ (அன்னை)

### உரை

அன்னையே! தந்தையே! நாம் எண்ணிய எண்ணம் பூரணமாகாமல் பங்கம் வந்துவிட்டதே. இனி எப்படி நமது எண்ணம் நிறைவேறும் என்ற நினைவைக் கொண்டு சஞ்சலத்தை மேலீட்டிராமல் சற்று நேரம் தாங்கள் இருவர்களும் மனதை ஒரு நிலைப்படுத்திக் கவனித்துக் கேட்கப் பிரார்த்திக்கிறேன்.

### பாட்டு

சின்னஞ் சிறுவன் நானே என்ன குற்றஞ் செய்தேனே
தேக தண்டனை செய்வானேன் ஆ ஆ ஆ (அன்னை)

### உரை

மாதா! பிதாக்களே! குழந்தைப் பருவத்தையுடைய யான் பெற்றோருக்குச் சகிக்க முடியாத குற்றத்தை என்ன செய்தேனென்று இந்த சரீர தண்டனை செய்வதற்குத் துணீந்தீர்கள். எவர்கட்கும் இது சம்மதமாகுமா? ஆஹா.

### பாட்டு

பிள்ளையைப் பெற்று மென்ன தெள்ளிப் பேசிட்டு மென்ன
பள்ளியில் வைத்ததா லென்ன ஆ ஆ ஆ (அன்னை)

### உரை

பிதாவே! அன்னையே! உலகத்தவர்கள் ஒரு புத்திரப் பேற்றை அடைய விரும்பி எத்தனையோ தவம், தான தருமம், யாத்திரை, தீர்த்தம், திருப்பணி முதலியவை செய்து அதினாலும் சென்மாந்தர வினைவசத்தால் பயன் கிட்டாமல் புத்திர பாக்கியத்திற்கு வறுமையை அடைபவர்களும் உண்டு. சென்மாந்திர புண்ணிய வசத்தால் வரும் பயனால் ஒரு மகவைப் பெற்று, அம்மகவை தங்கள் ஆயுள் வரையில் அப்புத்திரனை நேத்திராசனத்தில் வைத்துக் கண்ணுறங்காமல்

காவல் காப்பிட்டு, ஈ எறும்பு முதலிய ஆபத்தில் துன்புறாமல் முடிவில் எமனிடத்தும் வாதாடுவார்கள் என்றும், பிள்ளை ஆசை கொள்ளக் கிடைக்காது என்றும் சொல்வது உண்டு. அவ்வித பாகங்களிலே எள்ளத்தனை கூட உங்களிடத்தில் இல்லை என தெற்றென விளங்குகிறது.

தாய் தந்தையே! வேண்டுமென்று பிள்ளையைப் பெற்று, ஆசைக்கிசைந்த அருமை பெயரிட்டு அழைத்து, உலகத்துக்கு ஒப்ப பள்ளிக்கூடத்தில் வைத்து விவேகம் விளங்க படிப்பிக்கச் செய்வதினாலே உங்களுக்கு வந்த பயனென்ன?

### பாட்டு

கள்ள தனத்தி னாலே பிள்ளை யென்றெண் ணாமலே
கொல்லவுந் துணிந்தீர்களே ஆ ஆ ஆ (அன்னை)

### உரை

ஐயோ! நான்கு வருணத்தாரிலும் மேலாகிய பிராமண குலத்தில் பிறந்து, வமிச விளக்க லட்சணங் கூட இல்லாமல் திருட்டு எண்ணத்தைக் கொண்டு பெற்ற பிள்ளை வம்சம் குலங்கோத்திரம் செல்வம் முதலியவைகளுக்கும், நீடுழி காலம் கருமக்கிரியாதிகளுக்குப் பேர் சொல்லவும் வேண்டும் என்று எண்ணம் இல்லாமலும், ஜீவகாருண்ய சிந்தை யில்லாமலும், மூர்க்க குண மூடர்களைப் போல இருட்டறையில் மறைவாகக் கொண்டுவந்து கொல்லுவதற்கு எத்தனப் பட்டீர்களே. இந்தச் சங்கதி உங்களுக்கும் உலகினருக்கும் சாத்திரங்களுக்கும் தெய்வத்துக்குஞ் சம்மதியாகுமா? ஆஹா.

### பாட்டு

வீணாயிச் சென்முங்கட் கேனோ ப்ரம்ம னளித்தான்
நாண மென்பதும் இல்லையே இ இ இ (அன்னை)

### உரை

பெற்றோர்களே! வேத குலத்திலே பிறந்து, வேத குலத்திலே வளர்ந்து, வேதாதி சகல கலைக்யானங்களுங் கற்று, தனுர் வித்தை சிரோட்டனாகி, கௌட மகாராஜனுக்கு மந்திரித்துவம் பண்ணி, அவனா லளவிடப்படாத சன்மானங்களைப் பெற்று சிறப்போங்கிய நற்பேறடைந்தவர்களென்றும், கற்பு வழுவாத பத்தினி என்றும், கலைவாணிக்கு ஒத்த கல்வி சிகாமணி என்றும், சகல மாதர்களும்

தன்னிடத்தில் பதிவிரதா தர்மம், ஒழுக்கத்தின் போதங் கேட்டுக்கொள்ளும் சதுரஞானசீவி என்றும் சொல்லுந் திறமையைப் பெற்று, இவ்வளவு நாளாய் இந்த ஜென்மத்தை வளர்த்து வரவும் ஆயுளைக் கொடுத்த ப்ரம்ம தேவனானவன் நல்லறிவைக் கொடுக்க மதிசெய்தால் சம்மதிக்குமா என்கிற வெட்கம் லேசங் கூட இல்லையெனத் தெரிகிறது. மிக்க நன்றா யிருக்கிறது.

## பாட்டு

வாணாள் தொலைக்க இதுதானா தெரிந்தவழி
நானோ படுதற் றெல்லையே ஆ ஆ ஆ (அன்னை)

## உரை

என்னைப் பெற்றோர்களே! மனிதராய்ப் பிறந்தவர்கள் தன் பிறப்பை யொழித்து நற்கெதியை அடைய வேண்டமென்று சத்கருமங்களைச் செய்ய வேண்டியது அவசியமே. அது எப்படி செய்வது என்று தெரிந்தீர்களா! பிராட்டியாரால் சொல்லி யிருக்கும் முப்பத்து இரண்டு தருமம், பதினாறு தாளம், யாகாதி கருமங்கள், சரியை கிரியை யோகம் ஞானம் சமாதி நிஷ்டை என்பவற்றைச் செய்து, பிறப்பை யொழிக்க ஜீவகாருண்யமும், அதற்கு ஆதாரமாகிய சாந்தமும் வேண்டுமென்பார்கள். இவைகளிலே எவையுமில்லாமல் ஜீவ வதை செய்து, அதினாலே புண்ணிய பலனைப் பெற வேண்டுமென்று எந்த சாத்திரத்திலுஞ் சொல்லப்படவில்லை. அல்லாமலும் இந்த ஜீவ வதையிலும் சித்ரவதை செய்து நீங்கள் அடைவது நற்பலனே என்றாலும் பிள்ளையாகிய யான் உயிருடனிருந்து நீங்கள் செய்யும் கொலையினால் அவஸ்தை யடைவது ஞாய விரோதமல்லவா?

## வேறு பாட்டு

(ஆதாரம் யாருமில்லை என்ற மெட்டு)

230. ஞாயம் உமக்கழகோ யிந்த வேலை செய்யலாமோ
தாயுந் தந்தை நீர்கூடி உபாயமா என்னை நாடி
சேயனென்று எண்ணாமல் தூய புத்தி பண்ணாமல் கொடுந்
திருடரைப் போல் இருட்டறையில் முரட்டுதனங் காட்டும் (ஞாயம்)

பாவியா னிவ்வயதில் தாவி யென்செய்தேன் பிழைகள் - என்
ஆவியது சோர மெய்நோவுதடு மாற - கொடும்
அச்சமின்றி இச்சை கொண்டு லச்சைபழி வாங்கும் (ஞாயம்)

விளக்கைப் பிடித்துக் கொண்டீர் கிணற்றில் விழத் துணிந்தீர் - இந்த
தளிக்கி வென்ன ஆமோ அருள் விளக்கங் கேட்போமோ - உங்கள்
தருமத்தில் நானுரிமை பட்டால் வருமோ பெரும்பாவம் (ஞாயம்)

உள்ளதைச் சொல்லி என்னை மெள்ள அறுத்து - பிள்ளைசுகங்
கொள்ளவுங் கூடாதோ மனக்கள்ளம் விடப்படாதோ - உங்கள்
குறைதா னென்ன சிறுவன் முன்னே உரைத்தால் மறுப்பேனோ
(230) (ஞாயம்)

## உரை

ஹே மாதா பிதாக்களே! எத்தனை சொல்லியும் இனி ஆவதொன்றுமில்லை. கண்ணிரண்டும் விளக்கமாய்த் தெரிந்திருந்தும் விளக்கைப் பிடித்துக் கொண்டு கிணற்றில் விழுந்து விடுபவனைப் போலவும், தரித்திரவானுக்கு பிரளய சிந்தை என்பது போலவும், அவசரக்காரனுக்குப் புத்திமட்டு என்பது போலவும் நீங்கள் செய்யுஞ் செய்கை முழுமையும் அறிவின்மையே. போகட்டும். புண்ணியத்தால் சுவர்க்க பதத்தை அடைய வேண்டுமென்று எண்ணம் உங்களுக்கு இருந்தாலும் பிள்ளையாகிய யானும் அப்பதவியை அடையக் கூடாதா? உங்களுக்கு மட்டுந்தானா அந்தப் புண்ணியம் வேண்டும்? உங்கள் இருவர்களுக்கும் தெரிந்தது போல அன்னியமாயிருக்கின்ற செவிலித்தாயாகிய சேதனாவும் உங்களுக்கு உடன்பாட்டுதானே இருந்து இருக்கிறாள். உங்கள் எண்ணத்தை வெளியிட்டுச் சொல்லுங்கள். சொல்லாவிடில் நம் நால்வருக்குச் ஈச்சுரகடாட்சம் கிடைக்குமென்பது சத்தியமில்லை. எனக்குள்ள சம்மதத்தை வெளியிடுகிறேன். தெரிவிக்க பிரார்த்திக்கின்றேன்.

## விருத்தம்

**நாயனார் :**

231. ஆண்டிகளுக் கனுதினமும் அமுத ளித்தோம்
அதிற்றோஷ மேதோ யின்றொருவர் காணேன்.
வேண்டிபல யிடந்தேடி அருமை யான
விஞ்ஞானி யொருவரகப் பட்டா ரன்னோர்
ஈண்டு நரபசு வளித்தாவது புசிக்க
இஷ்ட மென்றார்க்கு உடன்பட்ட தாலே
வேண்டி வினைசெய் யாமலுனை யறுத்து
வித்தகனே தவமுடிக்கச் சித்த மானேன். (231)

## உரை

ஆ என் அருமை கண்மணியே! அதன் விபரம் உண்மையாகச் சொல்கிறேன். கேட்பாயாக. நமது மடாலயத்தில் அனுதினமும் வந்து கொண்டிருந்த அரிய சாதுக்களுக்கு அவரவர் இஷ்டம்போல திருப்பணிகள் செய்து அமுதூட்டி வந்ததும், அது நேற்றைய வரையில் குறைவற நடந்ததும், இன்று சன்னியாசிகளைத் தெரிசனம் பண்ணவும் திருத்தொண்டு புரியவும் கிடைக்காமல் போனதும் உனக்குத் தெரிந்ததுதானே. உன்னைப் பள்ளிக்கூடம் அனுப்பிவிட்டு நான் பல யிடங்களில் சன்னியாசிகளைத் தேடித்தேடி அலைந்துங் கிட்டாமல் அருமருந்தாக ஒரு பரமசாது என்னை அறியாமல் வந்திருக்க, அவர் தெரிசனை சேவைசெய்து உணவேற்றுக் கொள்ள பிரார்த்தித்துக் கொண்டேன். அவர் தனக்கு நெடுநாள் அனுபவ அயனாதி விரதம் நரபசுபார்கப் பக்குவத்துடன் சாப்பிடும் வழக்கமென செப்பினார். அப்பாகப்படி நான் செய்து அளிக்கிறேனென்று ஒப்பினேன். அப்படி ஒப்பிய வாக்கியத்திற்குத் தப்பிதமில்லாமலும், செய்துவந்த புண்ணியத்துக்குப் பின்னமில்லாமலும் உன்னை அறுத்து பாகஞ்செய்து பெரியாருக்கு அளித்து, அவர் பசியை ஆற்றி, நமது தவத்தை நிறைவேற்றிக் கொள்ளுவோ மென்றுஞ் சம்மதத்தால் நாங்கள் மூவர்களும் இந்த காரியத்தையும் யிருமைப் பயனையும் உணர்வதற்குத் திடமில்லாத மதலையென நிச்சயித்து உன்னிடம் இந்த ரகசியத்தைத் தெரிவிக்காமலும், உன் சம்மத துணிபு மேற்காமல் இக்காரியத்தைச் செய்ததே குற்றம். இதுதான் நடந்த சங்கதி. உண்மையைத் தெரிவித்தேனப்பா.

## விருத்தம்

**சீராளன் :**

232. சிவசிவா என்ன செய்வேன் பரமலோபி
செகமுளோ ரிலையொருவன் நானே யானேன்
இவர்கள் செய்யுந் தவமழிய லாமோபிள்ளை
என்னாலே பிழைவந்த தென்ன லாமோ
நவதுணையும் மலஜலங்கொள் நாற்ற மெய்க்கு
நாதனிச்சை கொண்டாரோ அம்மா அப்பா
தவணையிலை கறிசமைக்கும் விதத்தைக் கேளும்
சாற்றுவே னுங்கள் மனநதேற்று வேனே. (232)

**உரை**

சிவசிவா! சிவசிவா! நான் சிவத் துரோகி என்பதற்குச் சந்தேகமே இல்லை. உலகில் என்னைப் போலும் மாதா பிதாக்களுக்கு உற்ற பிள்ளை என்றும் பேரில்லாத பெரும்பாவியானேனே. என்னவோ அறியாமையைக் கொண்டு அவர்கள் இந்த துர்க்கருமத்தைச் செய்தாலும் அக்கருமத்தில் புத்திரனாகிய என்னாலே குற்றம் வந்ததென்று சொல்லத் தகுமோ. தாய் தந்தைகளே! உலகின்கண் மனிதராய்ப் பிறந்தவர்கள் பிரார்த்த கர்ம வசத்தால் தன் பிறவியை ஒழிக்க வேண்டி நித்தியானந்த வஸ்துவின் நிர்ணய கைங்கர்யத்தைக் கைக்கொண்டு, அதற்கு யேதுவான ஜீவகாருண்யம் சாந்தம் இதில் அனுபவப்பட்டு, சத்து சன்மார்க்க சர்ச்சன சங்கம சாதுக்கள்பால் நெடுநாள் சார்ந்திருந்து, மேல் சற்குரு திருவடி தெரிசனங் கண்டு, அவர்கள் திருவடி திருப்பணிக்கு ஆளாகி, சிவ கைங்கிரியம் விஷ்ணு கைங்கிரியங்களைக் குறைவறச் செய்து, சிவாகம, விஷ்ணு ஆகம புராண இதிகாசங்களைத் தெள்ளற உணர்ந்து, அனுதினமும் பக்தி வைராக்ய கடலில் மூழ்கி, உணவாதி அறுசுவை யின்பமற்று, பிரபஞ்ச பந்தமற்று, சொந்தமற்று, ஜாதியற்று, ஆசையற்று, சத்குருமூலமாய் தத்துவாதி சாத்திரங்களை அளவற அனுதினமுங் கேட்டுச் சிந்தித்து, அனுபவழியே தான் கசந்து நேதிபண்ணும் ஆறு தத்துவங்களைடைய சடத்தாசையற்று, கன்மேந்திரிய ஞானேந்திரிய அந்தகரண பஞ்சபூத முக்குண இருவினை முதலிய சூட்சும சரீர கருவிகளை விசாரணை பண்ணி, அறிந்தமட்டும் ஒவ்வொன்றையும் பொய்யெனத் தள்ளி, தனித்த தானாகிய ஆன்ம சொரூப ஆனந்தத்திலிருப்பவர்களே சுத்த தத்துவ சத்துவ ஞானமூர்த்திகளென்று ஆன்றோர்களால் மொழிந்திருக்கப்பட்ட வேத நூல்களை நீங்கள் பார்த்திருந்தும் வந்த பெரியார் நரபசு வளித்தால் புசிப்பேனென சொல்லுவது மிக்க ஆச்சரியமே தாய் தந்தைகளே! அப்படிப்பட்ட மகாத்துமாக்களுக்கு நர மாமிசத்தில் என்ன விசேஷமென்று அதற்காக ஓர் விரதத்தைக் கைக்கொண்டார்?

பிதாவே! உங்களிடம் பிச்சைக்கு வந்த பெரியார் இந்த அவலட்சண விகார சலிப்பேறிய நாற்ற உடலைப் பாகஞ்செய்து உண்ண வேணுமென்று இச்சைகொண்டு உங்களிடங் கேட்டாரா?

**நாயனார் :**

ஆ என் தவச்செல்வமே! கேட்டாரடா கண்ணே.

**சீராளன் :**

அரகரா! அரகரா! வாதாபி வில்வலன் இருவரின் கதை உங்களுக்குத் தெரிந்த விஷயந்தானே. ஆகையால் சாதுக்கள் சாபத்திற்கு ஆளாகி மோசம் போகாதீர்கள். ஆயினும் பெரியாரும் நீங்களுங் கொண்ட விரதம் தடையில்லாமல் முடியும் பொருட்டு ஓர் தந்திரஞ் சொல்கிறேன். கேளுங்கள்.

சிறியேனுக்கு போதகாச்சாரியாய் எழுந்தருளிய எனது குருமூர்த்தியின் திருவடியையும், தெட்சண பாஷையாகிய தமிழுக்குக் கர்த்தனான அகஸ்திய மாமுனியின் திருவடியையும், மனிதப்பிறப்பில் சகல வருணாச்சிரமங்களுக்கும் நடுநிலைமை கண்டு ஓங்கும் சங்கராச்சாரிய சுவாமிகளின் திருவடிகளுக்கும், வாக்கு மனதுக்கு எட்டாத பொருளறிந்த பிரமஞானி முனிவர்கள் அருட்பாதங்களுக்கும் சகல கலைகளுக்குந் தாயாகி விளங்கும் வேதங்களுக்கும், உலக விளக்கம் பெற்ற அஷ்ட மூர்த்திகளுக்கும், உங்கள் திருவடிக்கும் திரிகரண சுத்தியால் சென்னிமலர் சூட்டி நமஸ்கரித்து என் உட்கருத்தை வெளியிடுகின்றேன்.

## விருத்தம்

233. ஐம்பூ தத்தினை யடக்கி யாறாதாரம்
அதுவறிந்து ஆக்கினை யின்நிலை கண்டோடி
ஒன்பது வாசலு மடைத்துள் வீட்டிற்சென்று
ஓங்காரத் திரைமூடி உறங்கி ருப்பேன்
அம்மகிமை அறிவதெனை மூன்று சத்தம்
அழைத்திடுவீர் யான்பேசா திருத்தல் பார்த்துத்
தென்புடனே எனையறுத்துப் பாகஞ் செய்து
தேசிகருக் களித்துப் பதஞ் சேருவீரே. (233)

## உரை

மாதா! பிதாக்களே! உங்கள் கருத்து முடியும் வண்ணம் என்னைப் பெற்ற தாயின் சக்திபீடமாகிய படியென்னுங் கமலபீடத்தின்கண் அமர்ந்து கால்களைக் கமலாசனப் படுத்தி, இரு கைகளையும் சின் முத்திரை தாங்கி, பஞ்ச பூதத்தின் முக்குண பேதத்தினால் உண்டான சட்கோச தத்துவத்தால் பிரமனாலமைக்கப்பட்ட இச்சவத்தின் நவத்துவாரங்களை அடைத்து, அதனுள்ளடங்கிய மூலாதாரம்,

சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய அறுசக்ர பீடத்திலமர்ந்தருளிய வினாயகர் வல்லபை, பிர்ம்ம சரஸ்வதி, விராட்டு லட்சுமி, உருத்திர உரத்திரி, மகேஸ்பர மகேஸ்வரி, சதாசிவ மனோன்மணி என்றும் ஆறு கர்த்தாக்களைத் தியானித்து எனது ஞான பூரணியான மனோன்மணித் தாயினால் அமைக்கப்பட்ட ஆத்மானந்த ஊஞ்சலிலே படுத்து, பிணரவமாகிய கவசத்திரையினால் மறைவுகொண்டு, தியான சமாதி நித்திரையாலிருப்பேன். அந்த பக்குவம் நீங்கள் அறிய வேண்டுமே. எப்படி யறிவீர்கள்?

**நாயனார் :**

கண்மணி! அறியாமையாகிய இருட்கடலில் மூழ்கியிருக்கும் நாங்கள் எப்படி அறியக்கூடும்? தெரிவிக்க வேண்டும் விவேக விளக்க மாணிக்கமே!

**சீராளன் :**

தந்தையே! அந்தப் பக்குவமும் அறிய வேண்டுமென்றால் நான் தியான சமாதியிலமர்ந்து பத்து நிமிஷம் பொறுத்து பெற்றவள் வாக்கால் அவனுக்கு அளித்த பெயரைச் சொல்லி மூன்று தரங் கூப்பிட, நான் பேசாதிருப்பேனானால் அந்தப் பக்குவம் அறிந்து உங்கள் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளுங்கள்.

### அகவல்

இராகம்: தியான நமாதி

234. பார்க்கடல் கடையப் படுங்கடு வெண்ணையைத்
திருமிடற் றடக்கிய சிவனே அடைக்கலம் (பார்க்)

அடங்கலு மடங்கிடும் கடுங்கொலைக் காலனைக்
காலெடுத் தடுக்கிய கடவும் நின்னடைக்கம் (பார்க்)

உலகடங்கலும் படைத்துடைய வன்றிளைப்பறித்
திடக்கையி லடைக்கிய இறைவநின் னடைக்கலம்
ஐயநின் னடைக்கலம் அடியநின் னடைக்கலம் (பார்க்)

நடுவன் வந்தழைத்திட நடுங்கிடும் ஆக்கையைப்
பிணமென படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
வெளியிடை யுருமிடி யிடித்தென வெறுத்தெழுங்
கடுநடை வெள்விடை கடவுள் நின்னடைக்கலம் (பார்க்)

இமையா நாட்டாத் திரையே யடைக்கலம்
அடியார்க் கெளியாய் அடைக்கல மடைக்கலம் (பார்க்)

மறையவர் தில்லை மன்றுள் நின்றாடிக்
கருணை மொண்டிலை யெறிகடலே அடைக்கலம் (பார்க்)

தேவரும் முனிவரும் சென்று நின்றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெரு மானின் இணையடிக் கபையம். (234) (பார்க்)

## பொது நடை

இப்படி சொல்லிய குழந்தை தாயின் மடியில் தியான சமாதியில் இருக்குங் காலம் நாயனார் குழந்தை சொல்லிய அரிய தத்துவ வாக்கியத்தைக் கேட்டு மனமுருகி இந்த இளமை காலத்தில் இந்த விவேகந்தானாய் விளங்கி அருமையாகப் பேசப்பட்ட பிள்ளையை எப்படி துணிந்து அறுப்பது என்று மன மயக்குற்று, தன் பக்தி வைராக்கியங்களை மறந்து, தவத்தையுந் துறந்து, இதுவரையில் புத்ர வாஞ்சையில்லாதவர் இப்போது பேசிய வேத வாக்கியத்திற்கு இறங்கி சர்வேஸ்பரனைச் சிந்தித்து கண்ணீர் விட்டார்.

## பாட்டு

**நாயனார் :**

235. கூ கூ பரம னீசா
குசு மகுந்த னாம்பிகா (கூ கூ)

கொலையாளி யானேன் நம்பிகா
அய்யையோ ஆகாகா தெய்வமே
கொலையாளி யானேன் நம்பிகா (கூ கூ)

மறையோனான் செய் தவமோ
மங்கை செய்த அவமோ
மதனைப் பண்ணிய பவமோ
அய்யையோ ஆகாகா தெய்வமே
மதனைப் பண்ணிய பவமோ (கூ கூ)

இந்தக் குழந்தை தன்னை
ஈன்றாள் வளர்த்தாள் முன்னே

எப்படி அறுப்பேன் சிவமே
அய்யையோ ஆஹாஹா தெய்வமே
எப்படி அறுப்பேன் சிவமே (கூ கூ)

பைம்பொன் வடிவழகன்
பசுங்கிள்ளை சொல்லழகன்
பார்த்தோர் மதிக்குங் குழகன்
அய்யையோ ஆஹாஹா தெய்வமே
பார்த்தோர் மதிக்குங் குழகன் (கூ கூ)

வல்லிகொடி போலையோ
வளர்த்த பிள்ளை யீதையோ
வாள் கொண்டறுக்க விதியோ
பிள்ளையைப் பெறாதவரும்
பொறுப்பாரோ யித்துயரம் (கூ கூ)

பின்னென் வருமோ தவறாம்
அய்யையோ ஆகாகா தெய்வமே
பின்னென் வருமோ தவமே
சொன்ன சொல் தவறினால்
சுவாமிக் கென்ன யிதனால் (கூ கூ)

துணிந்த றுப்பனே வாளினால்
அய்யையோ அகாகா தெய்வமே
துணிந்த றுப்பேனே வாளினால். (235) (கூ கூ)

## பொது நடை

இவ்விதமாக மனமலைந்து புத்ர வாஞ்சையினால் சர்வேஸ்வரனைத் தியானித்து கண்ணீர் விட்ட நாயனார் பின்னும் மனதைத் திடப் படுத்தி, வீணாய்ப் பந்த பாசத்தில் சிக்கி, கெடுமதி கண்ணுக்குத் தோணறாது என்னும் வாக்கியம் போல் வீணாய் அறுத்திய வஸ்துவை நினைந்து அலறினேனே; இப்படி நினைவுற்றால் என் தவம் நிறைவேறுவது எப்படி என திடசித்தம் பண்ணித் திரும்பினார். அப்போது பத்து நிமிஷமாயிற்று. அம்மையாள் குழந்தையின் பேரைச் சொல்லி மூன்று தடவை கூப்பிட அது பேசவில்லை. கால தாமதமாகிறது; குழந்தை மதயான சமாதியில் உறங்கிவிட்டான். வாருங்களென்று அழைத்தாள். உடன் நாயனார் நித்யானந்த வஸ்துவை

நினைந்து கையில் வாளேந்திக் குழந்தையினிடம் வந்து பெற்றாளுக்குத் திடஞ்சொல்லி அறுக்கத் தொடங்கினார்.

(இந்தயிடத்தில் அடியடி தோறும் 'நமப்பார்பதிபதையே' போடவேண்டும். அடியடிதோறும் சூடம் எரிக்கவேண்டும்)

பாட்டு

**நாயனார் :**

236. பிள்ளையே மானே பிடியடி துள்ளாமற் றானே
எள்ளளவு மறதேக்கம் வைக்காமலே
தெள்ளறத்திலோர் செதுங்கல் செய்யாமலே (பிள்ளையே)

நாம் கொண்ட இல்லற தர்மம் விசேஷித்து
நானில மெங்கும் பரவ ப்ரகாசித்து
ஓம் நமசிவாய மென்றருள் நேசித்து
உண்மை நிலைபெற மிக்க சந்தோஷித்து (பிள்ளையே)

(நமப் பார்வதி பதையே)

இந்திர ஜாலம் உலக வைபோகமே
என்றோ ஒருதின மழியு மித்தேகம்
சிந்திக்கும் நிதிய வஸ்து நிர்வாகம்
சிவயநம வென்றால் கிட்டுமே யோகம் (பிள்ளையே)

(நமப்பார்வதி பதையே)

ஞானம் யோகம் நிஷ்டை செய்யவும் வேதம்
நாடிப் பரீட்சித் தறிய ப்ரமாதம்
தானத்தினு முண்ணி தானமே வேதம்
தரும் ஓம்ய நமசிவ னருட்பாதம் (பிள்ளையே)

(நமப்பார்வதி பதையே)

செம்மையாய் மைந்தனை நின்மடியில் வைத்துச்
செங்கை பொற்றாள் கள்அசையாம லணைத்துச்
சைவம் பண்ணாமல் பிடித்தருள் வந்தித்து
தலையறுத்தேன் மசிவயந ஓம் என்றொத்து (பிள்ளையே)

(நமப்பார்வதி பதையே)

சிந்தாமல் ரத்தம் பிடித்து நீமேலட்டிச்
செய்யாமல் செல்வ னவையவங்கள் வெட்டி
சந்தோஷமாய்ப் பல சம்பாரங்கள் கொட்டிச்
சமையல் செய் வயநமசி ஓமென்று கட்டி
(236) (பிள்ளையே)

(நமப்பார்வதி பதையே)

## விருத்தம்

237. அறிந்த மைந்தர்தலைக் கறியும் அமுதுக்காகா
தாகையா லியல்புடை சந்தன மாதேகேள்
பொருந்து மிந்தஊரார் களறியா வண்ணம்
பொறுமை யுடனிதை மறைத்து விரைவாயிங்கே

## உரை

சேதனா! குழந்தையின் தலைப்பாகம் செய்தால் பெரியவர் விரதத்திற்குத் தடைப்படுமோ என்னவோ? ஆகையால் இதைப் பிறர் அறியாமல் மறைவு செய்து சீக்கிரம் இங்கு வருவாய்.

## விருத்தம் - தொடர்ச்சி

பரிந்தரிய விரதம் அனுட்டித்த பெண்ணே
பாலனவை யவங்கள் கறிவெவ் வேறாக
விரைந்து பலசுவை பொருந்த சமைத்துஎன்முன்
வின்னுவாய் அருள்வடிவைக் கொள்ளு வாயே. (237)

## உரை

அன்புடன் அரிய விரதத்தை அனுட்டித்துக் காத்து வந்த எனதாருயிர்க் காதலி! அருமையான பிள்ளையின் சரீர உறுப்புகளை வகைவகையே சிதைத்துப் பிரித்துக் கொடுத்திருக்கிறேன். உனக்கும் உன் தாதியாகிய சந்தனத்தாளுக்கும் தெரிந்து கற்பனையான கைபாக சமையல்கள் செய்து வைப்பீர்கள். சீக்கிரம். நான் சென்று ஞான பரமான்மாவை அழைத்து வருகின்றேன்.

(நாயனார் ஆத்தியடிக்கிச் செல்லும் வழிநடை தியாம்)

## பாட்டு

238. சங்கர சங்கரனே - சிவ
சம்போ சதா சிவனே
அங்கார கற்குவணை சாபம் - நீக்கி
ஆண்ட மானு பவனே (சங்கர)

என்வினை கண்டாயோ - கண்டு
இக்கணந் தீராயோ பவ
புன்மையைப் போக்கி நன்மையைத் - தாக்கியுன்
பொன்ன தாராயோ (சங்கர)

மனைமகனால் நொந்தேன் - அவர் வசமாகினார்
மகிழ்ந்தேன் இனி
எனைவரச் சொல்லிய சங்கமரைத் - தேடிச்
செல்ல மனந் துணிந்தேன் (சங்கர)

சுவாமி இருப்பாரோ - நான்
துதிக்கப் பொறுப்பாரோ அல்லாமல்
தாமத மாச்சு உண்ண நண்ணே - னென்று
சங்கடஞ் செய்வாரோ (சங்கர)

எந்தத் துயர டைவேன் - எவர்
இஷ்டத்துக் காளாவேன் என்
சிந்தை துயரற மாதவ ராத்தி - இருக்கச்
செய்முன் படர்வேன் (சங்கர)

செய்வினை முன்னிட்டதோ - எந்த
சென்ம வினைதொட்டதோ அருட்
தெய்வ சீற்றத்தினால் கைதவம் - பேதித்துச்
சிந்தை நிலை கெட்டதோ. (238) (சங்கர)

## (சுவாமியைகண்டு) தோத்திரம்

இராகம்: தாண்டகம் தோடி

239. நீர்மலிந்த விரிசடையாய் நீல கண்டா
நிருமலனே நிராமயனே நிருவி காரி
வார்மலிந்த கனதனத்து வாலை பாகா
மழுவேந்தி அழலாடி அறிவா னந்தன்

நேர்மலிந்த அன்பரடி நினைவில் வைத்து
நீணாள்செய் தவக்குறை நன்னிறைவு பண்ணிப்
பேர்மலிந்த நின்விரதம் பெட்புற் றோங்கப்
பெருமானே தயைசெய்து வருகப் போற்றி. (239)

## பாட்டு

இராகம்: தோழிதா ரூபகம்

240. வந்தமு துண்டிட வேளையிது
மனமகிழ்ந் தெந்தன் மடம் (வந்தமு)

பந்த பாசங்கள் குறைத்த இறைவனே
இந்திரிய சேட்டை களற்ற பெரியோனே
தொந்தங்க ளெல்லாந் துறந்த குரபனே
பரனே துரவரனே நிரந்தரனே அரகரனே - யருள் (வந்தமு)

சுவாமி உன் பொன்னடியில் பணிந்தேன்
தேவாதி தேவாதிப சுவாமி
உன் பொன்னடியில் பணிந்தேன் (வந்தமு)

காம தகனன டியவரே - உன்
கருத்துக் கிசைந்த விதமே அமுதிடத்
தாமதில் லாமல் வந்தருள் செய்திடுங்
கருணாகர பொரு ணேசனே
பரிபூரண குரு நாதனே (வந்தமு)

வாடி வதகி யுடல்குறுகி
ஓராறு மாதமாய்
வாடி வதகி யுடன்குறுகி
நாடிய சந்து தள்ளாடி வைரவ
நாதனேயிங் கோடி நீவர லானது
தேட கிடைக்காத சர்சீவ வந்தது
திடமானது வட தேசனே
இட பாகர நடராஜனே (வந்தமு)

கால தாமதஞ் செய்யா தையனே
வந்தருள் செய்திடுங்

காலதாமதஞ் செய்யா தையனே
வாலை மனோகர லோல னடிபரி
பால நற்றேவ னரைத்த குறிபடி
பாலன் கறி நளபாகம் முடிந்தது (வந்தமு)

பசி யாறிடப் புசி வாருமே
பிசகாமலே விசுவேசனே. (240) (வந்தமு)

## உரை

மகாத்துமா சமுகந் தெரிவித்து வண்ணம் சென்று வேண்டிய காரியங்களை யெல்லாஞ் செய்து பிள்ளைக்கறியாக முடிந்து அடியேன் வந்திருக்கின்றேன். தேவரீர் பசி ஆறி, இன்று விரதமும் பூரணமாகி ஆனந்தமடையும்படி எழுந்தருள வேணுமென்று நமஸ்கரிக்கின்றேன் தேவா.

## விருத்தம்

சுவாமி : (கண்விழித்து)

241. கள்ளனே உனது செய்கை காண்கிலே னெனது முன்னே
துள்ளியே மகிழந்து பாடிச் சோறுண்ண வாரு மென்றாய்

## உரை

ஹே துஷ்டா! மகாயோக்கியனைப் போல என் முன்னால் வந்து ஆடிப் பாடி அமுதருந்த வரவேணுமென்று அழைத்தனை. நீ நடித்த நடைகளைப் பார்த்து, உண்மை என நம்பி நான் சொன்னதற்கெல்லாஞ் சரி சொல்லிப் போனவன் நீ இப்போது வந்த யோக்கியதையை நினைக்குங் காலத்து வெகு நன்றாயிருக்கிறது. எவர்களுடைய சங்கதையும் அனுபவத்தில்தான் தெரியுமே யன்றி உடன் தெரியமாட்டா. ஹே யோக்கியா! உன் திருட்டு, சால வித்தைகளெல்லாம் இப்போதன்றோ தெரிந்தது. என்ன செய்து வந்திருக்குறேனென்னு சொன்னாய்?

## உரை

நாயனார்:

சுவாமி! தேவரீர் சொன்ன வண்ணம் பிள்ளைக்கறி பாகஞ்செய்து வந்திருக்கிறேன்.

## விருத்தம்

**சுவாமி :**

பிள்ளையை அறுத்தா லென்ன பெருங்கறி செய்தா லென்ன
அள்ளியே உண்ணும் நேரம் ஆச்சுதே பேச்சேன் போடா. (241)

## உரை

அடே அயோக்கியா! நீ செய்தது உனக்கே மகுத்துவமாயிருக்கிறதோ? ஆஹா! நீ பிள்ளையை அறுத்தால்தான் எனக்கென்ன? அந்தக் கறியை நளபாகம் வீமபாகம் குறைவரச் செய்தால்தான் எனக்கென்ன? செய்த அன்பிற்கிசைந்தபடி உடன்சென்று நீயும் செய்கை பாகஸ்தர்களுமாகத் தேக்கமற உண்டு களைப்பாறலாம்? போ. போ. என் விரதத்திற்கு அன்னம் எடுத்து உண்ணும் நேரம் ஆய்விட்டது. வீணே பேசுவதினால் என்ன பயன்? போ போ.

**நாயனார் :**

சுவாமி! தாங்கள் சொல்லுவது உண்மையே. காலத்தில் செய்யாத நன்றி விசேடமாகாதுதான். ஆனாலும் சுவாமிகள் சொன்ன கெடுவுக்குத் தவறி வந்தேனென்று கோபிப்பது தர்மமல்ல. தயவுசெய்து வரவேண்டுங் க்ருபாநிதி.

## பாட்டு

இராகம்: சுருட்டி

**சுவாமி :**

242. சீச்சீ போ போ
என்ன பயித்தியம் கொடுந்
திருடனிலுன் திருட்டுன்
நிரட்டிப் பிதற்ற லென்ன (சீச்சீ)

தசாதிதாசா னென்று கூசாமலே பேசிப்
பாசாங்கு வித்தை படிக்குறாய் கை வீசி (சீச்சீ)

## உரை

ஹே மூடா! திருடனுக்குத் திருடனைப் போல முன்னால் நின்று கொண்டு பல்லு இடுக்காலே நிரண்டி நிரண்டிப் பேசி

அடியார்களுக்கு அடியார் போல பின் வாங்காமல் நீ கற்ற ஜால வித்தைகளையெல்லாம் யாரிடங் காட்டப் பார்க்குறாய்? உன் கை வரிசைகளை என்னிடங் காட்ட வேண்டாம். சீச்சீ போ போ.

**நாயனார் :**

சுவாமி! நான் கற்ற கற்பனை வித்தைகளை எல்லாம் பெரியாரிடத்தில் காட்ட வேண்டுமென்று இச்சையுமில்லை. நான் காட்டப்பட்டவனும் அல்ல. எத்தனை கோபத்தைக் கொண்டாலும் அமுதருந்த வரத்தான் வேண்டும் சுவாமி.

### பாட்டு

**சுவாமி :**

சத்தியவா னென்று சாத்திய திட்டம்
சரியென்று உன்னாலே யான்படுங் கஷ்டம்
எத்திசை பெறுமுனக் கேனிந்த பட்டம்
ஏழைக் காசை மொழிபேசும் புரட்டன் (சீச்சீ)

### உரை

அப்பா தர்மவானே! சாத்திரங்களில் வரையப்பட்ட கள்ள ஞானத்தினால் கொள்ளையடிக்குந் தர்மவான் நீயல்லாமல் வேறல்ல. ஏனென்றால் நித்தியம் வாயில் வைத்துப் பேசுவது தத்துவ ஞானம். இந்த உலகமெலாம் அறியச் செய்வது அன்ன தானம். அதை அறிந்து வந்தவர்களைப் பண்ணுவது அவமானம் என்றால் இதற்கு மேல் என்ன வேண்டும். நீ மிகவும் அகங்காரனென்னும் நிதானம் இப்போதுதான் தெரிந்தது. சீச்சீ போ போ.

### பாட்டு

சாதுக்கள் உயிர் வாங்கிடும் அறிவீனா
சம்பந்த னுனக்கு இப்பேர் கொடுத்தானா
போதுமுன் குணமறிந்தவன் வருவானா
பொருந்தும் பசியுமின்று பொறுத்திருக் கேனா (சீச்சீ)

### உரை

ஹே அயோக்கியா! இப்படியே பல நாளும் நம்பி வந்த சாதுக்களின் பிராணனைக் கொள்ளையிடும் அறிவுகெட்டவனே!

உனக்கு வந்த சம்பந்த மூர்த்தியும் என்ன விசேஷத்தைக் கொண்டு இந்த பேர் கொடுக்கப்பட்டதோ தெரியவில்லையே. அடே அப்பப்பா போதும். என்றும் வந்தவர்கள் இன்று ஒருவராவது வரக் காணேனென்றால் இப்படிப்பட்ட துர்க்குணமுள்ளவனென்று அனுபவத்திலறிந்தவன் எவன்தான் வருவான்? எனக்கு ஏற்பட்ட பசியை இன்று பொறுத்திருக்க முடிகிறதா? இதற்காக நீ கஷ்டப்பட வேண்டாம். போ போ.

## பாட்டு

எனது விரதபாங் கறிந்தவர் தேடி
எத்தனை பேர்காத் திருப்பர்கொண் டாடி
மனிதர் சொல்வாழ்த்தினால் வந்தேனிங் கோடி
மதிப்பிலா தவருடன் வருவேனோ கூடி. (242) (சீச்சீ)

## உரை

அடே அப்பப்பா! புண்ணியவானே! உன்னால்தான் என் பசி தணிந்து கொள்ள வேணுமென்று நான் நினைக்கவில்லை. நீதான் சுவாமியை ஆதரிக்கிறவன் என்று நீ நினைக்க வேண்டாம். எனது விரத விசேஷத்தைத் தெரிந்தவர்கள் என்னைத் தேடிக் காத்திருப்பவர்கள் உலகில் அளவில்லை. உனது பேரும் பெருமையும் குணமும் நடையும் கண்ட பல பேரால் கொண்டாடிச் சொல்லப்பட்ட வார்த்தையைக் கேட்டு இங்கு ஓடிவந்தேன். அந்தப் பெரும்பேறும் இல்லாவிட்டால் இங்கு வருவேனோ. இப்பவும் மதிப்பில்லாதவருடன் போவது சரியன்று. உன்னுடன் கூடி வரமாட்டேன் போ.

## விருத்தம்

இராகம்: தேசிக கமாராகம்

**நாயனார் :**

243. நானென தென்றிடும் உலகநாட்ட காட்சி
நலமென்றே மதித்து மடநடையால் வஞ்சன்
ஆனமனை மக்கள்சுற்றம் ஐம்பொன் பூமி
அவமானங் கல்வி உத்தியோகம் ஆண்மை
ஊன்உடம்பங் வாழ்விலறு பகைக்குள் ளாகி
உரந்தடித்து ஜாதி மதஉயர் உரைப்பான்

நானலவே அறிவா னந்தச் சாட்சிக்கும்
நல்லார்க்கும் நன்குணர்த்தும் நாயேன் கண்ணே. (243)

### பாட்டு

இராகம்: தேசிக கமாஸ்

244. இத்தனை கோபமேன்
ஏழைநான் ஏழைநான் ஏழைநான் (இத்தனை)

### உரை

**சுவாமி :**

ஓய் தர்மாதிபதியே! உன்னிடம் எனக்குக் கோபமிருக்கிறது. நானோ பிச்சைக்காரன். என் கோபம் உம்மை என் செய்யக் கூடும். இந்த ஜால ஒழுக்கத்தினாலே ஒரு பலனும் அடையப் போகுறதும் இல்லை. நீர் ஏழை என்று சொல்லத்தக்க தல்ல. பதினாறு செல்வத்திலே எந்த செல்வம் உமக்கு குறைவு. அதனால் ஏழை என்குறீர். நீரோ ப்ரபு. என்னை மதிக்க வேண்டியது எவ்விதத்திலுமில்லை. போம் போம்.

### பாட்டு

**நாயனார் :**

அத்தா உனக்கு பரிசுத்த தொண்டு புரிவேன்
குற்றம் பயில வறியேன் அறியேன் அறியேன் (இத்தனை)

### உரை

**சுவாமி :**

ஹே சீமானே! நீர் எனக்குப் பண்ணுந் திருத்தொண்டு லட்சணம் உமக்கே நன்றாய்த் தெரிந்திருக்க நீர் குற்றவாளியல்ல வென்குறீர். காலங்கழித்து வந்தும் இந்த ஜாலத்தினாலே வாயில் வந்ததெல்லாம் உளறுகுறீரே. உம்மிடம் பேசுவதற்கு நான் தக்கவன் அல்லேன். அதிகப் பேச்சு வேண்டாம். போம்.

### பாட்டு

**நாயனார் :**

தர்மனே பிள்ளைகறி தீமை யில்லாமற் செய்தேன்
சுவாமி வேறில்லை தாமதம் தாமதம் (இத்தனை)

உரை

**சுவாமி :**

ஓய்! நீர் சொல்லும் வார்த்தை மிக்க ஆனந்த மாயிருக்கிறது. பசி வந்த வேளையில் கிடைக்காத அன்னம் வேண்டுவதில்லை. என்றால் பிள்ளைக்கறி பாகங் குறைவறச் செய்தேனென்குறீர். ஒரு பிள்ளை ஒரு அடுப்பு ஒரு சட்டி ஒரு நெருப்பு ஒரு வேக்காடு. இதற்கு எத்தனை நேரமாகுங் காணும்.

பாட்டு

**நாயனார் :**

செய்யும்வகை திருந்த செய்திட வேண்டாமோ
பொய்யுரையேன் தேசிகா தேசிகா தேசிகா (இத்தனை)

உரை

**சுவாமி :**

அடே அப்பப்பா! கறிபாகம் திருந்த செய்தீரோ. ஏன் காணும், தராசு தேடி இடைகணக்கு பார்த்தீரோ? பாகபுடத்தில் பேதமில்லாமற் காத்தீரோ? உமது நாவிலே அணுவும் பொய்யே வராதுங் காணும். வீண்சம்பமாய்ப் பேச வேண்டாம். போம்.

பாட்டு

**நாயனார் :**

சாரும் பசிதணிய வாரும் அமுதருந்த
காருந் தாளிணை சரணம் சரணம் சரணம் (இத்தனை)

உரை

**சுவாமி :**

யே யோக்யா! என்னுடைய பசியை அறிந்தவனும் அமுதளிக்கப்பட்டவனும் நீ தானா? உன்னைக் காக்கப்பட்டவனும் நான்தானா? நீ நேரில் கண்டது முதல் கும்பிட்ட கும்பிடில் இதுவும் ஒரு கும்பிடு. இது மாத்திரமென்ன உண்மையான கும்பிடா. போடா போ.

## பாட்டு

**நாயனார்**

கள்ள மில்லாமற் சொன்னேன் தள்ளிக் குற்ற மென்றிடில்
வள்ளல் பொறுத்தல் கடனே கடனே கடனே. (244) (இத்தனை)

## உரை

**சுவாமி :**

ஆஹா ஹா ஹா! உன்னைப் போல் திருடன் உலகத்தில்லை என்பதற்கு ஐயமே இல்லை. நான் சொல்வதைச் செவ்வையாய்க் கேள். பிராமணனென்னும் உன் பார்வையுங் குற்றம்; கேட்குங் காதுங் குற்றம்; உன் மனமுங் குற்றம்; வரும் வாக்குங் குற்றம்; செய்யுங் ஒழுக்கமும் குற்றம் என்றே திடமாய்ச் சொல்கிறேன். ஏன் பார்ப்பானில் ஏழையும், பசுவில் ஏழையும், இடைச்சியரில் ஏழையும், தாசியரில் ஏழையும் இல்லை என்பார் உலகோர். வாய்ப் பேச்சிற்குப் பஞ்சமா? எத்தனை குற்றஞ் செய்திருந்தாலும் அதை மறைப்பதற்கும் தன் காரியஞ் சித்தி பெற வேண்டியும் குறி சொல்லும் பூசாரியும், சொல்லிசைக்கும் வித்துவானும், நளினத் தாசியும் தட்டான்களும் சவிளிக் கடைக்காரர்களும் பொய் சொல்ல, பொய் சத்தியம் பண்ணக் கொஞ்சமும் அஞ்சார்கள். அவ்வகையோரில் நீர் ஒருவர். உனது குற்றத்தை நான் பொறுத்துக் கொள்ளுவதாவதுங் காணும்.

**நாயனார் :**

சுவாமி! அடியேன் அளவிறந்த குற்றத்திற்குப் பாத்தியவானானாலும் அது என் மட்டிலிருக்கட்டும். சுவாமிகள் பெற்றிருக்கும் அரிய விரதத்தைச் சொல்லி அதற்கு ஏற்றபடி செய்தால் வருவேனென்று சொன்ன வாக்கியந் தடையானால் அது பொய்யாகுமே. அல்லாமலும் தாழ்ந்து இனி கெட்டேனென்று காலில் வீழ்ந்தால் தள்ளிவிடப் போகாது; தருமமல்ல என்ற வாக்கியப்படி எல்லாம் பொறுத்து எழுந்தருள வேணுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

## தோத்திரம்

245. கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின்னஞ் செறுத்தை

சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப் பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி யேகம்பனே. (245)

## விருத்தம்

**சுவாமி :**

246. பணிந்தமுதுக் கழைத்த சிறுத்தொண் டரேநின்
பாசாங்கு வித்தையெல்லாங் காட்ட வேண்டாம்
அணிந்தவென் நோன்ப னைத்தும் விரித்துரைத்தும்
அலட்சியஞ் செய்தாயென்னை அறிய மாட்டாய்
-------- ------- ------- --------
சாப்பிட்டுஞ் சுகமில்லைப் பாவி யென்றால்
துணிந்துரைத்த கடன்நீங்க வருவே னில்லை
சொல்லுவேன் நீர்வாருஞ் செல்லு வோமே. (246)

## உரை

**சுவாமி :**

ஓய்! நீர் பலகால் எனது முன்னில் விழுவதும் எழுவதும் தொழுவதும் அழுவதும் தோத்தரிப்பதும் நன்றாயிருக்கிறது. உன் பாசாங்கு வித்தையை என்னிடம் இன்னமுங் காட்ட வேண்டாம். எனது விரதமனைத்தும் விளங்கத் தெரிவித்திருந்தும் அலட்சியமாய் உனது பிராமண அகங்காரத்தைக் காட்டி விட்டாய். இதோ என்னைப் பாரும். என்னை நீர் இன்னனென்று தெரிந்து கொள்ளவில்லை போலும். போகட்டும். பசியறிந்து பசியறிந்து பிச்சை யிடப்பட்டவன் நீயல்ல (காலத்தில் செய்யாத நன்றி ஞாலத்திலா ஆலத்தின் மேலாகுமாம் போல்). அந்த அன்னம் இனி சாப்பிட்டுத்தான் பலனென்ன (கண்ட அம்மானுக்குத் தங்கி முண்டை கர்ப்பிணி யானது போலல்லாது வேறல்ல). நிற்க. என்னால் நான் கெட்டுவிட்டால் உம்மை நோவதில் என்ன பயன்? பசியாளனாகிய நான் உன்னை நம்பி வருகிறேன் என்று சொன்ன கடன் கழிய இதோ வருகிறேன். வாரும் போவோம். உம்முடைய ஞாயங்களை எல்லாம் மடாலயம் போய்ப் பேசிக் கொள்கிறேன். வாரும்.

## ஆனந்த நடனம் (வரவேற்பு நோட்டு)

247. போற்றி போற்றி போற்றி அரஹர
போற்றி போற்றி போற்றி சிவசிவ

போற்றி கரமேற்றி கரம் புனல்மதி
அணிமுடி தனிபெருந் தகை யடியோ (போற்றி)

சத்தன் சித்தன் நித்தன் பரிபுர
சுத்தன் சித்தன் நித்தன் பரிபுர
சுத்தன் அத்தன் கர்த்தன் அருடிரு
ஒத்த பொழில் புத்தன் எழில்
ஒலிமறை முடிநடித் துலகளந்த வனடியோ (போற்றி)

இங்கும் அங்கும் எங்கும் பரிவுறப்
பொங்கும் துங்கன் சங்கண் திரிபுரை
பங்காளன் கங்காளன் பகையுற
வறநெடு வகன்சுகள் நகை யடியோ (போற்றி)

வேத போத நாத நவரச
கீத நீத பேத செவிவச
ஓதி புற வாதை யற உயிருணர்
வினில்குடி செயும்பர குரு வடியோ (போற்றி)

எந்தா யெந்தை சிந்தா வியாபக
உந்தாய் சிந்தை தந்தே சாதக
முந்தறி வானந்த சிவா முதிர்சுவை
யுணபடி ததியரு ணிறைய யடியோ (போற்றி)

கண்டே கண்டும் உண்டேயடி பணி
கொண்டே பண்டோர் விண்டே நடிதுணை
செண்டேகை கொண்டேன் மெய்திரு
மமுதுண குடிவர பெருந்தகை யடியோ (போற்றி)

போற்றி போற்றி போற்றி சுயநய
போற்றி போற்றி போற்றி ஐயஐய. (247) (போற்றி)

## உரை

**சுவாமி :**

அன்பரே! இந்தத் தெருவில் நடக்கின்ற விசேஷத்தைப் பார்த்தீரா.

**நாயனார் :**

சுவாமி! வேறு விசேஷம் ஒன்றுமில்லையே.

**சுவாமி :**

ஓய்! தெருவில் விளையாடிய பிள்ளைகளை அவரவர்கள் அவசரமாய் இழுத்து வீட்டுக்குள் போகும்போது ஏன் காணும் என்னை நிந்திக்கிறார்கள்? அவர்களை நான் செய்தது என்ன?

**நாயனார் :**

சுவாமி! ஒரு குடும்பத்தில் பல பேர்கள் இருக்கிறார்கள். எல்லாருடைய மனமும் ஒருவர் மனம் போலவே இருக்குமா? அதுபோல உலகம் பல விதம் நடக்கும். அதை நாம் கவனிப்பானேன்.

**சுவாமி :**

அன்பேர! அப்படியல்ல. அதற்கு ஒரு கதை சொல்கிறேன் பாரும்.

### விருத்தம்

**சுவாமி :**

248. அருள்மிகுந்த சிவனடியார்க் கன்பர் அன்பர்
அறிஞர்சித்தர் யோகியர்கள் தம்மைக் கண்டு
பொருள்மிகுந்த ஆண்மையினால் வாய்ம தத்தால்
புகர்சொல்லி நிந்தையில் சொல்லோர் வாழ்வு
இருண்மிகுந்து பெண்டுபிள்ளை திங்க ளொன்றில்
தெருண்மிகுந்த யெமவாதை யிடைய றாமல்
-------- ---------- ---------- ---------
திகைத்துபடு குழியுடிலக் கடவர் தாமே. (248)

### உரை

**சுவாமி :**

அன்பரே! சர்வேஸ்வரனுக்கு அடிமைப்பட்டிருக்கும் ஜீவன் முத்தர்கள் சித்தர்கள் யோகியர்கள் அறிஞர்கள் பக்தி காண்டிகள் கர்ம காண்டிகள் கற்றோர்கள் புராணிகள் விபூதி தரித்த சாதுக்கள்

சிவச் சின்னம் அணிந்தவர்கள் இவர்களைக் கிரக ஆச்சிரமத்திலிருக்கின்ற ஆண் பெண் சிறியார் பெரியர் எவர்களும் அவர்களை ஈஸ்பரனாக பாவித்து, அடிபணிந்து, ஆசிபெற்றுக் கொண்டார்களானார் அச்சிவனடியார்களால் செய்யும் நற்புண்ணிய பலனைத் தானடைவார்களென்றும், அப்படியல்லாமல் தான் அடைந்த தனச் செருக்கினாலும் சதைத் தடிப்பினாலும் ரத்த ஊறலினாலும் ஆணுவத்தாலும் வாய் மதத்தாலும் முன்பின் பாராமல் அவர்கள் நடைக்குற்றஞ் சொல்லியும் நிந்தித்தும் பகைத்தும் அடித்தும் உதைத்தும் திருடியும் பெரியார் மனம் நோகச் செய்வார்களானால், செய்தவர்களும் செய்யத் தூண்டிவிட்டவர்களும் அதைப் பார்த்திருந்தவர்களும் அவர்கள் வாழ்வுகுன்றித் தரித்திரமிகுந்து பெண்டு பிள்ளைகளும் வம்சமுங் கெட்டு, சிவனடியார்களால் தவறி நடந்திருக்கும் பாவத்துக்கு உடன்பட்டு எமவாதைக்குள்ளாகிக் கொடும் நரகக்குழியில் கிடந்து கஷ்டத்தை அனுபவித்தும் மீளாமல் நாசமாவார்களென்று வேதம் முறையிடுகின்றது. இவைகளையெல்லாம் உலகம் அறியாமலா இருக்கின்றது. அன்பரே! போகட்டும். வாரும். போவோம். (மடாலயம்முன் வாயிலில் வந்து சேர்ந்தார்கள்)

## பொது நடை

சுவாமிகள் வர எதிர்பார்த்திருந்த அம்மையார் பாதபூஜைக்கு வேண்டிய சாமான்களோடும் சந்தனத்தாளுடன் வந்து சுவாமிகளுக்குத் திருவடி பூஜை செய்கிறார்கள்.

## தாண்டகம்

**நங்கை :**

249. நலமிகுந்த செயலறியேன் நல்லோர் பாதம்
நயக்கச்செய் முறைபணியு மறியேன் போத
பலமிகுந்த கல்வியறி வொழுக்க மில்லோன்
பாழானின் பொதிசுமந்த பெண்பேய் சென்ம
குலமிகுந்த வாழ்வைநம்பி வெகுளி காமக்
கொடியேற மயக்கமாங் கொழுகொம் பாகி
நிலமிகுந்த சிறியவள்நான் அறிவா னந்த
நித்தியபொற் பதப்பணிக்குச் சித்தஞ் செய்யே. (249)

## உரை

**நங்கை :**

சுவாமி! இந்தப் பொற்பலகையில் எழுந்தருளி அடியாள் செய்யுந் திருப்பணியை யேற்றுக் கொள்ள வேண்டும்.

## பாட்டு

(சீரார் சபையில் வாழும் என்ற மெட்டு)

250. திருபா னந்த கடலின்
திருவடி பூஜை செய்வேன்
திருவடி பூஜை செய்வேன்
இருண் மனமயை கொய்வேன் (திருபா)

சோக மணம் பூரிக்கத்
தூய கெங்கை நீராட்டித்
தூய கெங்கை நீராட்டித்
தோய நீர்சிரஞ் சூட்டிப் (திருபா)

பட்டு வஸ்திரத் தாலே
பத கமலந் துடைத்துப்
பத கமலந் துடைத்து
இதமா மென்கண் பதித்துக் (திருபா)

களப கஸ்தூரி பூசி
இனிய மந்திரம் பேசி
வாச மலர்கள் கொண்டு
அன்பா யற்சனை செய்து (திருபா)

அன்பா யற்சனை செய்து
இன்பாய்த் துதிகள் செய்து
தூப தீபங் கொடுத்தேன்
திவ்ய ஞான மாதேவா (திருபா)

திவ்ய ஞானடத அமவத
செய்வாய் கருணை செய்வாய். (250) (திருபா)

## உரை

பரமான்மா! திவ்ய திருவடிகளுக்கு அடியாள் செய்யவேண்டிய திருப்பணிகளைத் தெரிந்த மட்டும் நடத்தப் பெற்றதே பெரும்பாக்கியம். கருணை கூர்ந்து கிரகத்துள் எழுந்தருளி இந்த அரிய பொற்பலகை ஆசனத்தின்கண் அமர்ந்து பேதையாள் அளிக்கப்பட்ட திருவமுதை யேற்றுக்கொள்ள வேண்டும்.

## பொது நடை

அம்மையார் சுவாமிகள் திருவடி பூசைசெய்து, மடத்தில் அழைத்து, ஆசனத்தமர்த்தி அம்மையார் நாயனார் காதோடு ரகசியமாய்ச் சுவாமிகளுக்குத் திருவமுதளிக்க அவர்கள் விரதத்தின் வரிசை எப்படியோ? அந்த சந்தேகம் தெளிந்துகெண்டால் அமுதளிக்கலாமே என்று கூற, நாயனார் கேட்குறார்.

## உரை

**நங்கை :**

நாதா! உத்ரபாகவாசியாகிய அறிவானந்த சுவாமிகள் நெடுங்காலமாய் அனுபவித்து வரும் அயனாந்த உபவாசத்துக்கு யேற்ப திருவமுது அளிக்கும் நிவேதன க்ரமம் எவ்வாறோ? அதை விளக்கமாகக் கேட்டுக் கொண்டால் அவ்விதமே செய்யலாமே? இது ரகசியம்.

**நாயனார் :**

சுவாமி! அடியேங்கள் தவம் பூர்த்தியாகும் படி சுவாமிகள் கைக்கொண்டிருக்கும் விரதத்தின் வரிசையை விபரமாகத் தெரிவித்தால் அவ்விதமே செய்கின்றோம். திருவாய் மலர்ந்தருள வேண்டும்.

## பாட்டு

**சுவாமி :**

251. நல்ல நல்ல வாக்கு
  சொல்ல வந்தாய் ஷோக்கு
இல்லா ளுனக்குச்
  சொல்வ தென்ன சாக்கு. (நல்ல)

### உரை

அன்பரே! நீர் கேட்ட வாக்கியம் நன்றாயிருக்கிறதுங் காணும். இது இருக்கட்டும். உன் பத்தினியாள் நானறியேன் போல உன் காதோடு காது வைத்து என்னவோ ரகசியமாய்ச் சொன்னாளே! அது என்ன?

**நாயனார் :**

சுவாமி! தங்களைப் பற்றி எந்தத் தகவலுங் கிடையாது. எங்களின் காரியமாய் எனக்குத் தெரிவித்தாள்.

**சுவாமி :**

ஓய்! நீர் பிராமணன் அல்லோ, உண்மையைத் தெரிவிக்க மாட்டீர்கள்.

### பாட்டு

என்னடி நீ யம்மா
மன்னனுக்குச் சும்மா
என்னென்னவோ தெம்மாங்
கடிக்கு வியம்மா. (நல்ல)

### உரை

அம்மணி! என்னவோ புருஷன் காதிலே ஓதினது என்ன!

**நங்கை :**

சுவாமி! தாங்கள் விரதத்தின் படிக்கு அமுதளிக்கும் முறை தெரிந்துகொண்டால் அதன்படி செய்யலாமே என்று அவரிடஞ் சொல்லிக் கேட்கச் சொன்னேன். வேறொன்றுமில்லை.

**சுவாமி :**

அம்மா! இங்குப் பாரு. ஆரிடத்தில் இந்தத் தெம்மாங்கடிக்கிறாய். ஏன்காணும்? உன் மனையாள் சொல்வது உண்மையா?

**நாயனார் :**

சுவாமி! அந்த வார்த்தையைத் தவிர வேறொன்றுமில்லை. அவள் சொன்னது உண்மைதான் சுவாமி.

### பாட்டு

**சுவாமி :**

சகசில் யோடேண்டா
ரகசியம் ஏண்டா
வகுத்து சொல்லேண்டா
வகையறி வேண்டா (நல்ல)

### உரை

ஏன் காணும் அப்படி நீங்கள் இருவரும் யோசித்தது உண்மையானால் நேரிற் கேட்குறதுதானே. என்னைக் கேட்டால் உண்மை இன்னதென்று விபரமாய்ச் சொல்கிறேன். இதற்காக அவள் உன்னிடஞ் சொல்லவும், நீ என்னிடங் கேட்கவும், நான் உங்களுக்குச் சொல்லவும், எவ்வளவு சுத்துங் காணும் பண்ணுகிறீர்கள். போகட்டும்.

### பாட்டு

**சுவாமி :**

முன்னமே உன்னேராய்ச்
சொன்னதைச் செய்தீரா
பின்னங்கள் செய்வீரா
என்னை அறிந்தீரா. (251) (நல்ல)

### உரை

ஹே புண்ணிய சீலரே! பல நாளும் அனுபவித்தவருக்குக் கதைக் கேட்க வெட்கமில்லையே.

**நாயனார் :**

சுவாமி! பல நாளும் செய்து வந்த திருப்பணிகள் ஒருவாறு அனுபவித்து இருந்தாலும், இது அனுபவியாத திருப்பணியாதலால் சுவாமிகள் சம்மதங் கேட்கலாயிற்று.

**சுவாமி :**

போகட்டும்; என் மீது பாரம் வேண்டாம். நான் முன்னால் உமக்குச் சொல்லிய வரிசைப்படி பாகங்கள் செய்திருக்கின்றதா?

**நாயனார் :**

சொன்னபடி செய்திருக்கின்றது சுவாமி.

**சுவாமி :**

சரி! அது வெளியில் வந்து பரிமாறுகையில் தொட்டுச் சாப்பிடும் போதல்லவோ உங்கள் குட்டு வெளியாகும். இப்போது ஆகாது. போகட்டும். எனக்கு முன்னாக மூன்று இலை போட்டு வழக்கப்படி பரிமாறட்டும்.

## பாட்டு

சந்தம் : ஆனந்தக் களிப்பு

252. திருவமுது பரிமாறி னாரே - ஞான
தேசிக னுரைத்த விதமாகு மிகுசீரே
மரவுசிறுத் தொண்டரவர் நேரே - வாழ்த்தித்
திரு வெண்காட்டு நங்கை என்பரே (திருவமுது)

இனமாகத் தர்ப்பைகள் விரித்துமேல் - தீப
இணங்க வியிலா வாழையிலை வளமாய் விரித்து
முனமதில் சலமது புரோட்சித்து - சிப்பி
முத்து போலானவடி சாதமும் வைத்து (திருவமுது)

ஆக்கிய மரக்கறி யனேகம் - சாதத்
தண்டையினி லிட்டரிய பலகாரப் பாகம்
பூக்க மணம் ஐயரிட தேகம் - மிக்க
பூரிக்க வைத்தினிய வேணபரி பாகம் (திருவமுது)

அன்னத்தின் மேல் பருப்பிட்டு - குழித்தரிய
புத்துருக்கு நெய் தாராளப் பட்டு
பின்னன்ன மேல்வடிய விட்டு - பெற்ற
பிள்ளைகறி யாசையொடு கையினாற் றொட்டு. (252) (திருவமுது)

## உரை

**சுவாமி:**

அம்மணி! பொறு பொறு. இப்போது என்ன அளிக்கப் போகிறாய்?

**நங்கை:**

சுவாமி! தங்கள் விரதத்துக்கேற்ற பிள்ளைகறி அளிக்கப் போகிறேன்.

**சுவாமி :**

அப்படியா! சொல்கிறேன். ஹே தர்ம சீலா! நீர் என் பக்கத்திலிருக்க வேண்டும். உம்முடைய காது கேட்க அம்மையாள் செய்திருக்கும் கறி பாகங்களில் பிள்ளையின் உறுப்புகளில் பாதாதிகேசம் வரையில் விபரமாய் பேர் சொல்லிப் பரிமாற வேண்டும். அம்மணி உன் கைபாகங்களை ஒன்று ஒன்றாக உறுப்புகளின் பெயரைச் சொல்லி வைக்க வேண்டும்.

பாட்டு (நொண்டிச்சிந்து)

**நங்கை :**

253. திருவுளச் செயலறியா அடியாள்
செய்பாகங் கைபாக முண்ணும் பெரியார்
உருசியில் பேதங் கண்டெதைச் சினந்துரை
ஓதுகினுமெப் பிழைக்கும் வேதமே கெதி (திருவுள)

சித்திரச் சதங்கை யணிந்த பூம்பாதம்
திகழ்ந்த கணைக்காலு மிகத் திணிந்த
முத்தாத கெண்டைக் காலும் முழங்கால்
முடையில்லாம லெடுத்த துடை மேலும் (திருவுள)

இடையாதி உறுப்புகளும் புறக் கறியும்
இளங் கமலவிதழ் முன்னங் கரங்களும்
மெதுவான வயிறினொடு பெருங் குடல்
மெல்லிய மணிக்குடலுஞ் சொல்ல வின்பொடு
முதிராத யீரற்கறியும் ரத்தக் கறியும்
முட்டெலும்பு நெட்டெலும்புட் பட்ட கறியும் (திருவுள)

வகை வகையா யெடுத்துச் சம்பாரங்கள்
மட்டறவே சுவைகள் கட்டக் கொடுத்து
மிகபதமாய்ச் சமைத்துச் சுவாமிகள்
விருப்புக்கு வறுப்பு பொரிய லமைத்துச் (திருவுள)

சத்த சதைக ளெடுத்து யிதம்பெற
தூய கோளா உண்டைகளென பிடித்து
அத்தன் அடிகட் காக மயக்கறவே
அன்பாய்ச் சமைத்ததிது வெகு வாக. (253) (திருவுள)

*தனனா தனதனனா*

## விருத்தம்

**சுவாமி :**

254. தொட்ட ளித்திடுங் கறிப்பேர் சொன்னது சரிதான் உன்போல்
அஷ்டத் திக்கிலுங் கண்டில்லேன் அருமைசேர் அன்னை யேகேள்
மட்டற அளித்திட் டாயோ மைந்தனார்க் கறிக ளெல்லாம்
தட்டு கெட்டிருந்தால் சொல்லுந் தர்மனே அறிந்திட் டாயோ. (254)

## உரை

அம்மணி! பொறு பொறு. உன் கையினால் எடுத்து, உறுப்புகள் பெயர் சொல்லி வைத்தமட்டுஞ் சரியே. உன் வாக்குங் குணமும் நடையும் பொருந்திய அருமைக்கு எட்டுதிக்கிலும் ஆராய்ந்து பார்த்தாலும் உன்போல கிட்டாது தாயே. குழந்தையின் கறிகளெல்லாங் குறைவர வைத்துவிட்டாயோ!

**நங்கை :**

சுவாமி! செய்தவரையில் பாக்கியில்லாமல் பரிமாறிவிட்டேன்.

**சுவாமி :**

தாயே! அப்படியல்ல. நீ மறந்து போயிருந்தாலும் நான் ஞாபகப்படுத்துகிறேன். ஏதாவது தவறி இருந்தபோதிலும் கொண்டு வந்து வைத்துவிடு.

**நங்கை :**

சுவாமி! ஒன்றுந் தவறுதலில்லை செய்தவரையில் சரிவர வைத்து இருக்கிறேன்.

**சுவாமி :**

ஓய் தர்ம சீமானே! உன் பத்தினியாள் சொல்லுவதெல்லாஞ் சரிதானா? உறுப்புகள் பெயர்சொல்லி வைத்ததில் நீர் கேட்டு வந்தவரையில் பாக்கி இல்லையே!

**நாயனார் :**

சுவாமி! சொல்லி வந்த வரையில் சரிதான். தலைக்கறி மாத்திரம் சுவாமிகளுக்கு ஆகுமோ ஆகாதோ என சந்தேகத்தினாலேயே நான்தான் நீக்கிவிடச் சொல்லிவிட்டேன். தலைக்கறி ஒன்றுதான் பாக்கி.

**சுவாமி :**

ஓய் மறையோரே! உமது செய்கைகளை எல்லாம் நினைத்துப் பார்க்குங் காலத்து மிகவும் ஆச்சர்யமாகத் தானிருக்கிறது. அனுபவ திருப்பணிக்காரனென்றும், அடியார்கள் மனப்பேதமில்லாமல் நடப்பவரென்றும், சிவபக்தியில் சிறந்தவரென்றும் வைராக்கியத்திற்கு வம்பனென்றும், தர்மத்தில் தாதா வென்றும் சகலரும் புகழ பேர் வைத்துக் கொண்டு காட்டிலே வந்து தங்கள் விரதத்திற்குக் குறைவில்லாமல் செய்ய பாத்தியவான் என்று வெகு நாணயக்காரனாய் கை போட்டுக் கொடுத்த அவசரமென்ன? நீ இப்போது செய்தது என்ன? சரி சரி. உங்களிடம் வம்பாடுவதில் லாபமென்ன? தலைக்கறி கொண்டு வைத்தால் கையால் தொடுவேன். இல்லாவிட்டால் தொடமாட்டேன் போ.

## பொது நடை

சுவாமிகள் இப்படிச் சொல்லவும் நாயனாரும் அம்மையாரும் இருகை முறித்துக் கொண்டு, ஒருவரை ஒருவர் பார்த்து மோசம் வந்து விட்டதே; பட்ட பாடு வீணாச்சுதே; நான் மதி கெட்டுப் போனேனே. இனி என்ன செய்கிறது என்று நடுக்கத்துடன் நிற்கும்போது சுவாமிகள்.

## விருத்தம்

இராகம்: சங்கராபரணம்

**சுவாமிகள் :**

255. கண்சாடை காட்டி இருகைப் பிசைந்து கான்மாறி யாவிபோக்கிப்
பெண்சாதி வாயைப் பார்த்தாவ தென்ன பெண்ணோ அடபிசாசு

எண்சா னுடற்குச் சிரசே ப்ரதானம் எழில்முளை வஸ்துவெல்லாம்
உண்சார மென்றறிந் தொளித்தாயோ உன்ஜாதிக் கேற்கை யாமோ.
(255)

## பாட்டு

256. ஏண்டா வீணே முழிக்குறாய் தலைக்கறியால்
தாண்டா தவம ழிக்குறாய் (ஏண்டா)

பூண்ட உன் விரதத்தில் பிழைவரு மென்றறியா
நீண்டாய் தலைக்கறி அளிப்பாயோ இல்லையோ பேயா (ஏண்டா)

வாய்பேச்சு மலைஎன்ற வண்மை கொளா அசடா
காய்த்தமரங் கல்லடி வாங்குமடா கசடா. (256) (ஏண்டா)

## உரை

ஹே பிராமணா! அது என்ன இருவர்களும் ஒருவர்க்கொருவர் கண்சாடை காட்டிக் கொண்டு, இரு கையையும் முறுக்கிக் கொண்டு, இரு கால்களையும் முன்னும் பின்னுமாய் மாறி வைத்து, பெருமூச்சு விட்டு உனது பெண்சாதி வாயைப் பார்க்குறாயே. ஏன் அவளால் இதற்கு என்ன செய்ய முடியும்? அவள் என்ன பெண்ணா? பிசாசு. ஹே பிராமணா! பெருக்க முழிப்பதினால் பயனென்ன? இந்தத் தலைக்கறியால் உன் தவம் அழியலாமா? என் மேல் உனக்குக் கோபம் வேண்டாம். காய்த்த மரந்தான் கல்லடிபடும். வீணாய் நிற்காதே. உன் பத்தினியிடம் சொல்லித் தலைக்கறியை எடுத்து வரச் சொல்.

## விருத்தம்

இராகம்: மோகனம்

257. சமைத்திடும் போதில் சுவையறிந் தாயோ
சரிஎச்சில் பட்டு விட்ட
திமைத்திடும் முன்னிலென் செய்வே னுங்கள்
தீரமே என்ன தீரம்
உமித்தூசு உனக்கு ஒட்டாது பிள்ளை
ஊனோடு தலையி றைச்சி
அமைத்தா லருந்து வேனில்லையேல் எங்கள்
அப்பாணே உண்ண மாட்டேன். (257)

## பாட்டு

258. போ போ பயித்தியக்காரி கறியெடுத்து
வா போ நிற்காதே நேரில் (போ போ)

மாபக்தி மான்கள்தான் வந்தவர்களைச் சாட்டித்
தாபத்துடன் சமைத்துத் தனித்துண்ணுஞ் சீமாட்டி (போ போ)

கணவனுக் கேத்தாபோல் காதிலியானாய்ப் பேதை
முணுமுணுத்தவன் குடிமோசம் என்முன் னிற்காதே.
(258) (போ போ)

## உரை

**சுவாமி :**

ஏண்டியம்மா! இந்தப் பாகங்களை யெல்லாம் பண்ணினது யாரு?

**நங்கை :**

சுவாமி! அடியாளுடைய கை பாகந்தான்.

**சுவாமி :**

சரி சரி. அப்படியானால் எச்சில் பட்டு இருக்கலாம். பரிசியாமலிருக்க மாட்டாது. அடடா அம்மணி! கண் இமை கொட்டுவதற்குள் உன்னை இன்ன பாடுதான் படுத்தலாமென்று எனக்கு ஆங்காரமுண்டாகிறது. உன்னுடைய தயிரியந்தான் இதை எடுத்து மறைவு பண்ணினையோ? அப்படியானால் அதில் உமித்தூசு உனக்கு ஒட்டும்படி செய்வேனா? உடற்பாகத்தோடு தலைப்பாகமும் கொண்டு வந்து வைத்தால் நான் கைதொட்டு சாப்பிடுவேன். இல்லாவிடில் நீங்கள் என்ன சாமார்த்தியம் செய்தாலும் எங்களப்பனாணை உண்ணமாட்டேன். போ போ. பயித்தியக்காரி என் முன்னால் நிற்காதே. தலைக்கறி எடுத்துவா. போ போ.

**நாயனார் :**

சுவாமி! அடியேன் நமஸ்கரிக்கின்றேன். அடிமைகளால் சுவாமிகளுக்கு எத்தனை குற்றங்களைச் செய்திருக்கணும் அத்தனையும் பொறுத்துக் காக்க வேண்டும். அனுபவமில்லாததினால் சுவாமிகளுக்குத் தலைக்கறி ஆகாது என்று நான்தான் நீக்கிவிட்டேன். பொறுத்துக் கொள்ளவேண்டும்.

## பொது நடை

சுவாமியும் நாயனாரும் சம்பாஷித்துக் கொண்டு இருக்கையில் இதை எல்லாம் பார்த்துக்கொண்டு இருந்த சந்தானத்தாள் தலைக்கறி எடுத்து வந்து அம்மையாரிடங் கொடுத்துச் சொல்லுகிறாள் இதனை.

### பாட்டு

(ஆரண்யம் போய் அலைவதென்ன என்ற மெட்டு)

**சந்தனத்தாள் :**

259. சத்தியத்தை சுமந்தவர்கள்
தவித்தல் தர்ம மாமே
மித்தையாம் இவ்வாழ்வு விருப்பமேன் - அன்றே
வெறுத்ததும் நன்றே நாம்
வேண்டிநின்ற பொருளும் ஒன்றே
தவித்தல் தர்ம மாமே (சத்தி)

நன்மை கடைபிடித்த
நற்குண முளார்க்கும்
சாட்சி முன்னிற் பார்க்கும் - அன்
நாட்ட தர்மந் தலைகாக்கும்
தவித்தல் தர்ம மாமே (சத்தி)

கையேந்தும் போதே பின்
கடனாகும் என்றெண்ணிச்
சுவாமிகளை நண்ணி - நான்
கறிபாகங்களைப் பண்ணி
தவித்தல் தர்ம மாமே (சத்தி)

ஆனதும் ஆச்சுது
ஆவதேனோ மிக்க
ஞானியாரும் மெய்க்க - நம்
அறிவானந்த மிருக்க
தவித்தல் தர்ம மாமே. (259) (சத்தி)

### உரை

**சுவாமி :**

அம்மணி! இது என்ன?

**நங்கை :**

சுவாமி! தலைக்கறி.

**சுவாமி :**

சரி வந்ததா! பரிகலத்தில் வை. அரஹரா சிவசிவா. இப்போதன்றோ சிவபதிக்குச் சம்மதம். உங்கள் தவத்துக்கு விரோதமாகத் தலைக்கறியை ஒளித்து வைத்துக் கொண்டீர்களே. ஞாயமா? எங்கே பார்க்கலாம். அம்மணி இது யாருடைய கை பாகம்.

**நங்கை :**

சந்தனத்தாள் கை பாகம்.

**சுவாமி :**

அப்படியா! சந்தனத்தாள் செய்ததா? அல்ல அல்ல. பொய் பொய். (சந்தனத்தாளை நோக்கி) தாயே உன் கை பாகமா இது?

**சந்தனம் :**

அடியாளுடைய கைபாகந்தான் ஸ்வாமி.

**சுவாமி :**

சரி சரி. அம்மையாள் ஒரு பாகமும் நீ ஒரு பாகமும் செய்வதற்குக் காரணம் என்ன?

**சந்தானத்தாள் :**

சுவாமி! தர்மாதிபதியவர்கள் தலையை என் கையில் கொடுத்து சுவாமிகளுக்கு இது ஆகாது; எவருமறியாமல் மறைத்துவிடு என்று சொல்லிற்று. அதை கையில் வாங்கிக் கொண்டு செல்லுங் காலத்தில் நலம் இது என்று எண்ணினாலும் பின் தலைக்கறி கேட்கப்படும் என்று என் சம்மதமாய் பாகஞ் செய்து வைத்தேன்.

**சுவாமி :**

ஆனால் அவர்கள் இருவருக்கும் நீ பாகஞ் செய்தது தெரியாதோ?

**சந்தானத்தாள் :**

சுவாமி! அவர்கள் இருவருக்கும் நான் பாகஞ் செய்தது தெரியாது.

**சுவாமி :**

அம்மா சத்தியமாய் தெரியாதோ?

**சந்தானத்தாள் :**

சத்தியமாய் தெரியாது ஸ்வாமி.

**சுவாமி :**

ஆஹா! அம்மணி! உன் புத்தி சாதுர்யத்திற்குச் சரஸ்பதியைக் கூட ஒப்பத்தக்கதல்ல. உன் பெயர் என்ன?

**சந்தனம் :**

ஸ்வாமி! என் பெயர் சந்தனத்தாள்.

**சுவாமி :**

ஆஹா! தகும் தகும்! அம்மணி சந்தனத்தாளென்பது உனக்கே தகும். இப்படி என் பக்கத்திலேயே நில்லு.

தாயே! அது என்ன பாகஞ் செய்திருக்கிறது. இது வறுவல், அது துவட்டல். இது பொரியல். அது புரட்டலோ? சந்தோஷம். சரி இலையில் அன்னத்தின் மேல் வை.

## பாட்டு

இராகம்: செஞ்சுருட்டி  தாளம்: ஏகம்

**நங்கை :**

260. சுவாமி தயை செய்யுமையா
சரணஞ் சரண மய்யா (சுவாமி)

கோமள சகியாள் தங்கள்
குணமறிந் தாளோ காணேன்
தாமதமிலா தளித்தாள் தலைக்கறி
இந்தோ வைத்தேன் (சுவாமி)

கண்டங்கு பாலமுதி
லுண்டான வஸ்து வெல்லாம்

வண்ட மின்றி வைத்தேன் பாரும்
மாதவனே கோபம் வேண்டாம் (சுவாமி)

சீராய் நிவேதனங்கள்
நேராகவே சமைத்து
ஆராதனைகள் செய்தோம்
அரும்பசி தீரு மெங்கள். (260) (சுவாமி)

## பொது நடை

### நிவேதனம்

தேங்காய் பாக்கு வெற்றிலை பத்தி சர்க்கரை மாவிளக்கு அவல்கடலை வாழைக்கனி மாங்கனி பலாக்கனி வடை பாயசம் அப்பளம் வகைகளை நிரப்பி, சாம்பிராணி தூபங் கொடுத்து, கற்புர தீபம் ஏத்தி ஆராதனை செய்து வைத்து பிறகு சுவாமியார் நாயனார் நங்கை தாதி நால்வரும் கையில் ஜலம் ஏந்திச் சொல்லும் சிவார்ப்பண மந்திர சுலோகம்.

### பாட்டு

(சிவாக்கியர் சந்தம்)

**நாயனார்**

261. ஓம் சிவாய நாத விந்து
வற்பவச் சிவோ சிவ
ஸ்ரீம் சகத் நமோ நமச்சிவாய
ஜீவ ஐக்கிய
ஆம் ப்ரதான பூத மைந்தில்
ஆடுஞ் சத்தி சித்தியா
ஊம் சிசேட அன்ன தாது
ஒப்பவுஞ் சிவார்ப்பணம் (ஓம்)

சகம் விளக்கு ஆத்தும ப்ரயோசனஞ் சிவார்ப்பணம்
மகம் விளக்கு தெய்வ தர்ம மாண்டனஞ் சிவார்ப்பணம்
யுகம் விளக்குஞ் சாட்சி ப்ரம்ம ஓதனஞ் சிவார்ப்பணம்
சுகம் விளக்கும் புண்ணியத்தின் சூட்சி நீள் சிவார்ப்பணம் (ஓம்)

சீவ தாதுப் ராணனாதி வாயுவின் சிவார்ப்பணம்
சீவ கரண தத்துவங்கள் த்ருப்தியாஞ் சிவார்ப்பணம்
சீவ பாவதோடி மற்று தோற்றவுஞ் சிவார்ப்பணம்
சீவ கர்ப்ப பாகம் அர்த்த அட்சயஞ் சிவார்ப்பணம் (ஓம்)

பரசிவான்ம சத்து சித்து பாக்கியஞ் சிவார்ப்பணம்
பரசிவங் கணேபரம் பரிவதாஞ் சிவார்ப்பணம்
பரசிவ ப்ரசாத பாக பக்குவஞ் சிவார்ப்பணம்
பரசிவங் கண்வைத்து வொத்த பதமதாஞ் சிவார்ப்பணம்.
(261) (ஓம்)

## வேறு பாட்டு
(பலராமனையனே என்ற மெட்டு)

262. எல்லாஞ் சிவார்ப்பணமே செய்து
ஏதமற மனச்சாதனச் செய்கைகள் (எல்லாம்)

பொல்லாயிச் சென்ம மெடுத்தவன் நானே
பூமிசை நத்தி முத்தியதுங் கோளே
வல்லான் வகுத்த விதியறி வாளே
வாழ்க்கை தொலைக்கப் பரானந்தத் தாளே (எல்லாம்)

காமியத் தாலே கண்கண்டதின் மேலும்
காதலாள் பெற்று பெறாததி னாலும்
தாமதத் தாற்பல சங்கடம் போலும்
தாங்கிய துக்கஞ் சுகமிகுந் தாலும் (எல்லாம்)

நித்திய கர்ம நிஷேத மானாலும்
நிச்சய மென்று பொய்நூல் படித்தாலும்
சுத்துவ சுத்தந் தவறிப் போனாலும்
சன்மார்க்கங் கண்டு தவறி வீழ்ந்தாலும் (எல்லாம்)

லேசமுஞ் சத்தியந் தாண்டிக் கெட்டாலும்
நித்திய வஸ்து நிலைமை விட்டாலும்
ராஜத காரியம் நம்பப் பட்டாலும்
நாஸ்திக ரிஷ்டம் நயந்து தொட்டாலும் (எல்லாம்)

பொய்யை மெய்யென்று புகழ்ந்து வாழ்ந்தாலும்
பொய்ய ருறவிற் புதையச் சூழ்ந்தாலும்

மெய்யை மெய்யென்ற மெய்யரைத் தாழ்ந்தாலும்
மெய்யறி வானந்தம் அன்றி வீழ்ந்தாலும் (262) (எல்லாம்)

### பொது நடை

என்று புரோட்சித்து மணி சேங்கண்டி சங்கு நகார் சத்தங் கொடுத்து, பின்னுங் கற்பூர தூபமேந்தி, ஆராதித்து வைத்து, நாயனார் நங்கை தாதி விழுந்து நமஸ்க்காரஞ் செய்து எழுந்து சுவாமிகளுக்கு அமுதருந்த உத்தரவளித்து வேண்டி கேட்டுக் கொள்ளவும்.

### உரை

**சுவாமி :**

வேதியரே! கறி வகைகளில் பாக்கி இல்லாமல் வைத்து ஆகிவிட்டது; நைவேதனங்கள் நிறைந்தது; திருவாராதனை முடிந்தது; சிவார்ப்பணம் அற்புத மாச்சுது; தீர்த்த புரோட்சாடனம் முடிந்தது. சந்தோஷம் அன்பரே. என் விரதத்தை நிறைவேற்ற வேண்டுமென்றால் மூன்று பாகமாய்ப் பரிமாறி இருக்கும் அன்னம் நான் ஒருவனாய்ப் புசிக்கத் தகாது. தனியனாய்ப் புசித்தும் வழக்கம் இல்லை. என்னோடு கூட உண்ணுவதற்கு என்னைப் போன்று இருக்கும் பரதேசியைப் பார்த்து அழைத்து வாரும். போம்.

**நாயனார் :**

சுவாமி! இன்று உதையகாலந் தொட்டு சாதுக்களைத் தேடித்தேடிக் களைப்புற்ற நாயினேனுக்கு சுவாமிகள் கிடைத்ததே மிக்க அருமை. அப்படியே தேடினாலும் கிடப்பது அரிது. தயவு செய்து தங்கள் விரதத்தை நிறைவேற்றட்டும்.

**சுவாமிகள் :**

அன்பரே! கால தாமதஞ் செய்யாமல் போய் அழைத்து வாரும். துணையில்லாமல் அருந்துவது ஞாய விரோதம். போம்.

### பாட்டு

இராகம்: சாமா

**நாயனார் :**

263. சிவனே என்செய்வே னின்னந் திகைதெளிய படாதோ
தவசி யமுதுண்ணாமல் செய்வ தெல்லாம் அடாதோ (சிவனே)

மன்னுமித் தேச மெல்லாம் உன்னடியாரைத் தேடிச்
சினப்பட்டும் என்கண்ணில் தெரியனே இனிஓடி (சிவனே)

கண்ணுழையா காட்டிலுங் கருங்குகையும் புகுந்து
எண்ண மறத்தேடினும் கிடைக்கா அருமருந்து (சிவனே)

கோதறசெய்த தொண்டில் குற்ற மென்னவோ அன்னம்
நாதன்துணை யில்லாமல் உண்ணே னென்றாரே இன்னம்.
(263) (சிவனே)

உரை

**சுவாமி :**

பக்தரே! எங்கே பரதேசிகள் கிடைத்தார்களா?

**நாயனார் :**

ஸ்வாமி! எங்குத் தேடிப் பார்த்தாலும் பரதேசிகள் கிடைப்பதா யில்லை. அன்னங் கறிவகைகள் அலர்ந்து போகுன்றது. இப்போது சுவாமிகள் பசியாறினால் பின் வருவார்களுக்குக் குறை அன்னியில் அளிக்கிறேன். விரதம் முடியட்டும் சுவாமி.

**சுவாமி :**

ஹே செல்வச் சீமானே! உமது புத்தி தீட்சண்யம் நன்றாயிருக்கின்றது. ஏன் சிந்தை கெட்டு தவிக்கிறீர்? சாத்திரத்திலும் குணத்திலும் ஜாதியிலும் ஆசாரத்திலும் நேம நிஷ்டைகளிலும் விபூதியிடுவதிலும் உமக்கு மேல் அதிகமோ அன்னம் அலர்ந்து போகிறது? இதில் மிக்க சுகமிருக்கிறது. என் சொல்லைத் தட்டாமல் இந்த இலையில் உட்காரும். மயங்க வேண்டாம். உட்காரும்.

பாட்டு

இராகம்: எதுகுல காம்போதி

**நாயனார் :**

264. பெற்ற கலிதீர பிள்ளைகறி புசிக்கப் போறேன்
பிர்மகுலத்தில் வந்த நிரணய மிதுவென்ன பாரேன்
சாதி வரம்பினை சாமியா ரறியலா காதோ
தாட்சண்ய மின்றியே தன்னோடுண் ணென்று சொல்வதோ

மனிதசடம் நெருப்பு மண்ணுக் கிரையா மிதென்பாரே
மனிதனாய்ப் பிறந்தையோ மனிதனை உண்பதென்ன சீரே
காகங்கழுகு பருந்தோ நாய்நரி ஜென்மம் நானோ
காதலன் கறியைநான் கையா லெடுத்து உண்ணத் தேனோ. (264)

## பொது நடை

சுவாமியார் சொன்ன வாக்கியத்தைத் தட்டாமல் நாயனார் தன் ஜென்மக் குறையை நினைந்து, உள்ளுருகி, அம்மையாரைக் கூப்பிட்டு, ஜலம் புரோட்சிக்கச் சொல்லி, கை காலலம்பி, சுவாமிகள் வலப்பக்கத்தில் இலையில் உட்கார்ந்துத் தீர்த்த கவசம் பண்ணி, சிவார்ப்பணஞ் செய்து அன்னத்தில் கை வைக்க ஆரம்பித்தார். அப்போது சுவாமிகள் திடுக்கென கனைத்தெழுந்து.

**சுவாமி :**

ஆஹா! நன்றாயிருக்கிறது. ஹே மிலேச்சா! என்ன பண்ணிணாய் இப்போது?

**நாயனார் :**

ஸ்வாமி! சாப்பிட ஆரம்பித்தேன்.

## விருத்தம்

**சுவாமி :**

265. போடா போஉனது சேதி புல்லனே தெரிந்து கொண்டேன்
நாடெல்லா முற்றா ருண்டை நல்லமு தளித்துப் போற்ற
மூடா உன்வார்த்தை கேட்டு முழுமூட னானே னின்னோர்
நாடுண்டு வோடு முண்டு நானுண்டு இனிதங் கேனே. (265)

## உரை

போடா போடா அறிவு கெட்டவனே! உன்னுடைய அனாச்சார நடைகளெல்லாம் ஒன்று ஒன்றாய் விளங்குகிறது. நீதான் அன்னதான தாதா வென்றும், உன்னைவிட வேறேயில்லை யென்றும் நினைத்து இந்த மதிப்பில்லாத காரியத்தைச் செய்யத் துணிந்தாய். மூடா! அப்படி நினையாதே. உலக மெல்லாஞ் சாதுக்கள் அன்பு பாராட்டவும், அவர்களுக்கு ஏற்ற அமுது அளிக்கவும் கருணை வாய்ந்த தாதாக்கள்

அனேகருண்டு. அடே உன்னைச் சொல்வதில் பயனென்ன, உன்னை நம்பி யிருந்த நானே பெரிய மூடனென்று சொல்ல வேண்டும். போ போ. உன் உபசாரம் எனக்குப் பெரியதல்ல. நாடு இருக்க, ஒடு இருக்கு. இந்த சாண் வயிறு கழுகத் தொலையாதா? உன் மரியாதை இத்துடனிருக்கட்டும். நான் போறேன்.

**நாயனார் :**

ஸ்வாமி! என்னால் நடந்த குற்றமென்ன? இப்படி பதைத்தெழுந்து போறேனென்றால் தங்கள் பசி யாறியதாகவுமில்லை. என் தவம் முடிந்ததாகவுமில்லை. தயவு செய்து உட்காரட்டும் ஸ்வாமி.

## பாட்டு

**சுவாமி :**

266. என்ன யோசனை செய்தாய் கெட்ட
சின்ன மனித னானாய்
பொன்னிலமும் புகழ் மின்னும் அறங்கள்
புரிந்து வாழும் நல்லோரே - மேல்
என்னுங் கலைகள் எழில்தரு மாகமம்
வேத மோத வல்லோரே (என்ன)

விருந்தாளி யுண்டல்லோ தானுண்ப தென்றுயிம்
மேதினியோர் ஞாயம் - அது
பொருந்த வணுவேனு மில்லை தெரிந்ததுன்
புண்ணி யத்தினு பாயம் (என்ன)

தந்திரமா யென்னை ஆத்தியடி விட்டுத்
தான ழைத்து வந்தீர் - வந்து
இந்திர ஜாலமா யேற விட்டேணி
எடுத்திடவே துணிந்தீர். (என்ன)

அழுகள்ளன் தொழுகள்ளன் அன்பரைக் கும்பிடும்
ஆசாரக் கள்ளன் போலும் - கண்டு
ஒழுகும் நடத்தை யாலும் உண்ண விசைந்தேனான்
ஒப்பே னொருக்காலும். (266) (என்ன)

## உரை

**நாயனார் :**

சுவாமி! அமுதருந்துவதற்கு அடிமையுந் தன்னோடு உட்கார்ந்து அருந்தினால் தானும் உண்பேனென்று உரைத்த வாக்கியத்திற்கும் பேதமில்லாமல் உட்கார்ந்து, அன்னத்தைத் தொட்டு தங்களை உண்ணச் செய்ய வேண்டுமே என்று ஆரம்பித்ததல்லாமல் அடிமைக்குப் பிரியப்பட்டு செய்ததல்ல. தங்களோடு உட்காரவும் உண்ணவும் உள்ளத்தில் பயம் மாத்திரம் உண்டு. அந்தக் குற்றத்தைப் பொறுத்து தயைசெய்து அமுதருந்த வேண்டும் சுவாமி.

**சுவாமி :**

மறையவரே! போகட்டும். உங்கள் மூவர்க்கும் என்னைப் பற்றிய கோபம் உண்டோ? அப்படி கோபத்தைக் கொள்ள வேண்டாம். ஆனால் இன்னும் ஒரு மார்க்கஞ் சொல்லுகிறேன். கேளும். நம் இருவருந் தவிர ஒரு இலை பாக்கியிலிருக்கின்றதே. அதை என்ன செய்வது?

**நாயனார் :**

ஸ்வாமி! இருந்தாலிருக்கட்டுமே. காலம் போக்காமல் சுவாமிகள் பசியாறிவிட்டால் பின் வருபவர்களை அருந்தச் செய்கிறேன்.

**சுவாமி :**

அன்பரே! அது கூடாது. மூவரும் ஒன்றுபடத்தான் சாப்பிட வேண்டும். ஏன் வளர்த்துகிறீர். உமக்கு குழந்தை உண்டோ இல்லையோ?

**நாயனார் :**

ஸ்வாமி! குழந்தை உண்டு.

**சுவாமி :**

அவன் எங்கே?

**நாயனார் :**

அவன் இங்கு இல்லை.

**சுவாமி :**

அது சரியல்ல. அவனை அழைத்து வாரும்.

**நாயனார் :**

ஸ்வாமி! அவன் தங்களோடு அமுது அருந்த இந்த சமயம் உதவ மாட்டான். தடுத்துச் சொல்கிறானென்று கோபம் வேண்டாம். பசியாறட்டும்.

**சுவாமி :**

அன்பரே! நான் கேட்டதற்குக் குழந்தை இல்லை யென்று சொல்லி யிருந்தால் நான் கவனிக்கப் போவதில்லை. உண்டென்று சொன்ன பிறகு நாம் தனித்துச் சாப்பிடுவது தர்மமல்ல. அவனை அழைத்து வந்தால் மூவரும் கூடி உண்போம். இல்லாவிட்டால் ஒப்பமாட்டேன் போ.

## விருத்தம்

**நாயனார் :**

267. எற்றுக்கோ இந்த தீமை இன்ன தென்றறியே னீசா
முற்றுக்கோ இவர்கை பற்றி முழிக்கவோ விட்டா என்னை
ஒற்ற காரணரோ டுண்ண உதகானிச் சமையம் பாலன்
உற்ற சோறாவி போகா துண்ணுவீர் அண்ண லேறே. (267)

## உரை

ஹே சர்வேசா! எதற்காக என்னை இந்தக் கஷ்டப்படுத்தி பார்க்கின்றனையோ? முடிவு காலத்திற்குதான். இவர் கையில் கொடுத்துத் திகைக்க விட்டு பார்க்கின்றனையோ? இன்னதென்று அறியவில்லையே சுவாமி! தங்களோடு கூடி உண்ணுதற்கு இந்த சமயம் குழந்தை உதவ மாட்டான். அன்னம் அலர்ந்து போகிறது. விவகாரம் வேண்டாம். காலம் போக்காமல் பசியாறாட்டும்.

**சுவாமி :**

ஹே தர்மசீமானே! நான் சொல்லுவதெல்லாங் கேட்டு ஆச்சரியமடைந்து நினைத்து நினைத்து உள்ளங் குலைந்து களைப்பேறிப் பெருமூச்சு விடுகிறீர்கள். என் வாக்கை குற்றமாக எண்ண வேண்டாம். உங்களின் மூவரின் எண்ணமும் எனக்கு நன்றாய்த் தெரிகிறது.

என்னை மாத்திரம் இன்னானென்று இன்னுள் தெரிந்து கொள்ளவில்லை. போகட்டும். கவலை வேண்டாம். நீங்கள் மூவர்களும் என் சொல்லை நம்பி தெருவில் சென்று வாசற்படி ஏழு அடிக்கு அப்பால் நின்று குழந்தையின் பெயரைச் சொல்லி வாக்கும் மனமும் கோணாமல் பரிபூரணமாய்க் கூப்பிடுவீர்களானால் குழந்தை வருவான். அழைத்து வாருங்கள். அவன் வந்தால்தான் அமுது உண்ணுவேன். சந்தேகப்பட வேண்டாம். போய் கூப்பிடும்.

**நாயனார் :**

ஓ ஆபத்பாந்தவா! இது வரையிலுஞ் செய்து வந்த பரிட்சை பெரியாருக்குப் பத்தாதென்று இன்னமும் இவனை நாற்சந்தியில் விட்டுபார்க்க வேணுமென்று பூரணமாய்ச் சிந்தித்து விட்டீரோ? நங்காய் சேதனா! நம்மால் இனி செய்யப் போவதென்ன? பெரியார் வாக்கியத்தை நம்பி வாருங்கள். போகலாம். எந்தப் பலத்தினாலே நாம் துணிவை அடைகிறது. இது வரையில் நாம் செய்த புண்ணிய பலன் இதில்தான் தெரிய வேண்டும்.

### பாட்டு

(இவளாரோ யானறியேன் என்ற மெட்டு)

**நாயனார் :**

268. அரனே அருட் ப்ரகாச
அடியவர் கடியேன் நானே
திறமாய்த் தெருவில் நின்று
சீராளா வாஎன்றால் தானே
வருவானோ வந்தி டானோ
மைந்தன் நம்சீராள தேவன் (அரனே)

இறைவர் நின்னடி யருக்காய்
இன்ப மாய தெளிக்கக்
கறிவகை பரி மளிக்கக்
கலத்தினி விட்டிருக்கக் (அரனே)

கண்ட துண்ட மாகச் செய்து
கறிகறி யாகக் கொய்து
பண்டாரம் உறையா லெய்து
பார்க்க உருவாகச் செய்து

என்னவோ குறையினா லேய்து
பார்க்க உருவாகச் செய்து (அரனே)

என்னவோ குறையி னாலே
இப்படியாய் செய்தார் மேலே
சின்னஞ்சிறு பால னாலே
செல்வனே வாவென்ற தாலே (அரனே)

ஆதியோ னருளை நாடி
அன்ன மிட்டேன் மேலோர் தேடி
ஆதுல ருரையால் வாடி
அப்பனே வாவென்றால் ஓடி. (268) (அரனே)

## வேறு பாட்டு

இராகம்: தேசிக தோடி

269. ஏ சீராள தேவனே நீ வா
என தருமை கண்மணியே (ஏ சீராள)

தேக பெருமென் குலக் கொழுந்தே - யென
தாசைக் கடங்கா வமிர்த சிந்தாமணியே (ஏ சீராள)

மட்டில்லா வித்தை மலருமனோபவன்
மற்று முன்னெங்கள் மனக்கலி தீர்த்தவன்
முட்டு பட்டதிக் குறைதவிர்ப்ப தெவன்
முட்டுபட்ட பின்னுநீ எங்கள்பொதி தாங்குவன் (ஏ சீராள)

சங்கையறச் செய்தவத்தில் வந்த தொல்லை
தாங்குமோ சுவாமியா ருண்ணாமல் செயமில்லை
எங்குரைப்பேன் எண்ணும் எண்ணுங் கணக்கில்லை
எந்தலையில் நீபோடாதே பெருங் கல்லையே (ஏ சீராள)

ஐயர்க் கொன்றுமே செய்தில்லேன் சலித்திட
அப்பா உனையழை என்றார்க் கலித்திட
மெய்யோ பொய்யோ எமதெண்ணம் பலித்திட
மெய்ப்பாதக் கிண்கிணி மிக்க ஒலித்திட. (269) (ஏ சீராள)

(சீராளன் தரிசனக் காட்சி)

## பாட்டு

இராகம்: இங்கிலீஷ் நோட்டு

270. காட்சி தெய்வ காட்சி தவசிவ
காட்சி தெய்ய காட்சி தவசிவ
கண்மகிழ விண்புகழ (காட்சி)

கதிநதி மதிவிதி துதிநதி பதிதரு
மண்ணும் நிஷ்டை பண்ணும் முனிவரும்
மங்கைதெய்வ நங்கை அனைவரும்
மங்களமே எங்கினுமாய் (காட்சி)

வடிவிடை யொடிபடக் கடுநடை கொடுவரக்
கந்தன் அண்ணன் தந்தி துதி தரக்
கண்டோர் நின்று கொண்டான் அடிபடக்
கைமலர்கள் பெய்தொழிய
கலைதலை கலைசொல பல்தலை அலைவர
விந்தை அறிவா னந்தம்பெற புவி
வெய்யோன் மதிவான் பொய்யா வொளிதர
மெச்சுதவன் அச்சமற வினவின
முனிகன மனதனி நினைவெழ. (270) (காட்சி)

(இந்த யிடத்தில் நங்கை தாதி இவர் குழந்தையை மாறிமாறி வாங்கிக் கொண்டு இந்தப் பாட்டை பாடவும்)

## பாட்டு

271. பாலகனே வா பண்டிதனே வா
பண்ணுந் தவத்தால் வந்த புண்ணியனே வா. (271)

## பொது நடை

குழந்தை வரக் கண்ட மூவரும் அடங்கா ஆசையைக் கொண்டு இருகை நீட்டி வாரிக் கட்டி அணைத்துப் பலவாறு துதித்து ஆனத்தித்து சாமியார் இனி பசியாற சந்தேகமில்லை எனத்திடங் கொண்டு மடத்தினுள் நால்வர்களும் வந்து பார்க்கும்போது பரிகலத்தன்னமும் பரமான்மாவும் காணாமல் மறைந்த அதிசயத்தை நினைந்து குழந்தையைக் கீழே விட்டு சுவாமியைத் தேடுகிறார்கள்.

ஆஹா! இதுவென்ன மோசமாயிருக்கிறது. பரிகலத்தன்னமும் சுவாமியுங் காணோமே. அம்மம்ம எங்கே சென்றிருப்பார்? சுவாமி! சுவாமி! இது வென்ன மறைப்பு வித்தை வெகுசுருக்கமாய் வைத்திருந்தார்! இம்மடாலயத்தின் உள்ளறைகளெல்லாம் பார்க்குறேன். சுவாமி சுவாமி. உள்ளறை எங்கினுங் காணோமே. அம்மம்ம மேண்மாடிகளிலும் காணோமே! அந்தோ பக்கம் தோட்டங் கால்களிலும் பார்க்குறேன். சுவாமி! சுவாமி! இங்குமில்லையே. எங்குச் சென்றிருப்பார். மோசம் போனேனே. உள்ளுங் காணவில்லை. மேலுங் காணவில்லை. புறம் மேலுங் காணவில்லை. அவ்வளவு அவசரமாய் எந்த வழியே சென்றிருக்கலாம். ஏ நங்காய்! சந்தனா! குழந்தாய்! இனி என்ன செய்யலாம். சாதுக்களிலே இது சித்து விளையாடுகிற சுவாமியோ. ஓகோ மோசம் போனேனே.

### பாட்டு

272. இதுதானா கண்டகாட்சி இன்னம்
பார்க்கணுமோ உடைய சாட்சி (இதுதானா)

நிதம்பல தியாகிக் கிசைந்தன்னங் கொடுத்து
இதமுற கண்டுண்ண காணாமல் விடுத்து. (272) (இதுதானா)

**நாயனார் :** (மூர்ச்சை)

### பாட்டு

(சின்ன வயதிலிருந்த என்ற மெட்டு)

**நங்கை :**

273. சந்தனா இதுவென்ன மோசம் - கொண்ட
சுவாமி மறந்தார் எந்தன் நேசம்
வந்ததே ஐயோபெருங் கொள்ளை இதற்குத் தானா
மாபாவி காத்திருந்தேன் வேதா - இந்த (சந்தனா)

மார்க்கமுஞ் சம்மதமோ நாதா
அய்யோ தர்மத்தால் வந்த கொள்ளை - பெற்ற
அருமையால் ஏந்திக் கொண்ட சள்ளை
வையகம் நகைக்கவும் வானோர்கள் பகைக்கவும்
மன்னன்றனை யிழக்க லாச்சே - ஆண்ட
மஞ்சள் நூலுக்கும் பிழை யாச்சே (சந்தனா)

இப்படி வாறமென் றறிந்தாரோ தான்
இருந்தால் பழியென்று போனாரோ
எப்படி துணிந்திருப்பேன் செப்பெரும் அவயத்தாலே
இதயம் நடுங்குதடா மைந்தா - இனி
என்ன செய்வேனடா உன்தாய் (சந்தனா)

சுவாமி மூவருந் தனியானோம் - இனி
தாங்குவா ராரோ வீணாய்ப் போனோம்
நேமி அறிவானந்த சுவாமியைக் காணா தோஷம்
நினைவும் அழிந்துதான் வீழ்ந்தீரோ அல்லால்
நிமலனடி கண்டு வாழ்ந்தீரோ. (273) (சந்தனா)

## உரை

ஆ ஸ்வாமி! தொண்டை மண்டலாதிபதிபனாகிய கௌட இரணிய பூமானுக்குத் தலமையான மந்திரியும், வேதியர் குலத்துக்கு விளக்கமான விண்மணியும், பேதையான எனக்குப் பிராணமணியும், தர்மத்துக்குத் தாதாவாகவும் இருந்து உலகின் கண்ணுள்ள மாதர்களெல்லாம் என்னைக் கண்டு இதழ் விரிக்க, உன்னையும் எனக்குப் பறிகொடுத்துத் தவித்து நிற்க என் தலையில் பெரிய கல்லைப் போட்டு விட்டீரே ஹா.

## பாட்டு

274. அனாதியு மானேனே பணாதியு மானேனே - என்னை
ஆண்டவன் சோதித்து விட்டானே
அங்க வியர்வை தீரத் தங்குங் களைகள் மாற
சிற்றால வட்ட வாடை கொள்வீரோ (அனாதி)

தவமும் பொய்பட்டதே சிவமுங் கைவிட்டதே - என்னைச்
சாமியு மறந்து விட்டதே மூன்று
சந்தனா இனிநாமே எந்தகெதி யாவோமே - இந்த
ஜகமும் பழிக்க லானோமே (அனாதி)

குழந்தை முகம்பாரும் அழவின் துயர்தீரும் - இந்தக்
கோதை பயந்து தீர்ந்து முன்காடும்
உழைத்து உன்பால் காலங் கழித்து - வந்தோர்
கோலங் கண்டு உண்மைதிடஞ் சொல்லுவீர் (அனாதி)

மேலும் எனதுப் பிராண நேசா - வனிதை
துயர் லேசா இந்த ஏழைகள்
துணியவாய்ப் பேசாய் ஐயோ அறிவானந்த
ஐயரோடு மறைந்தாய் எங்கட்கு
ஆர்துணை முன்வாறோம் பதந்தா. (274) (அனாதி)

## பாட்டு

**சீராளன் :**

275. ஆறுமா அப்பா தனித்திருக்கவும் மனந்தேறுமா
அந்தோ முன் வந்தே யுன்
சிந்தைகண் டன்தான் செய்த (ஆறுமா)

மறத் துயரளித்து வானேறினா னொளித்து என்ன
வஞ்சம் தான் தஞ்சம் என்
நஞ்சி னாரைக் கெஞ்சச் செய்த (ஆறுமா)

வந்தார் பெரியோ ரென்றீர் மைந்த
வருக வென்றீர் அந்த மாதவனிரு
பாதமுமறி யாதவனெனை பேதமுஞ் செய்த (ஆறுமா)

நரபசுக் கிச்சை என்றும் விரதமெனக்
காமென்றும் சொல் நாட்டி அதைக்கேட்டு
எனைவாட்டி அதில் போட்டி செய்த (ஆறுமா)

பட்சத்தா லெனைப் புசித்து இச்சை யுங்கள்
மனங்களித்து நேர் பார்க்கக் கலிதீர்க்க
சுகந்தாக்க லின்றிம் மார்க்கஞ் செய்த (ஆறுமா)

குறையாத கல்மனத்தன் அறிவா னந்த
ப்ரசித்தான்செய் கோலம் இதுகாலம்
அனுகூல மின்றி ஜாலஞ் செய்த. (275) (ஆறுமா)

## பாட்டு

(சீராளன் மூர்ச்சை)

**சந்தன நங்கை :**

276. நாதச் சங்கீதப்பொன் சச்சிதானந்த குருபர நாதா
சகலக் கலையும் புகழும் வினோதா (நாத)

சர்வ வுயிர்களு முன்னரு ளாலே
தந்ததுங் காப்பதும் நீமென் மேலே
தனிமுதலே தனிமுதலே சதுர்
வேதங்களுந் துதிப்பது மெதிலே (நாத)

அன்பர் அகத்திலே விளையாடும் பேயாகா
அருளிறை பூரணி யணைந்த பாகா
அன்ப ரிவரலவோ அலர்பாதம்
ஆட்கொண்டால் தகுத்திடுமோ வேதம் (நாத)

அருட் ஜோதி அருட் ஜோதி
அறிஞ ரகத்தில் வளர்பரஞ் சோதி
ஆன்றோர் மனமிதனாற் றழையாதோ
அறிவானந்த மெனும் பேர் பிழையாதோ (நாத)

அடுமை நான் எனக்கருள் தரக் கெடுமோ
ஆனாலுங் கால்சுற்றிய பாம்பு விடுமோ
அற்புதமே அற்புதமே அடைக்கலந்
தந்தருள் பொற் பதமே. (276) (நாத)

## உரை

ஹே ஜீவ ரட்சகா! தீனதயாளு! சிவபக்தர், சிவ வைராக்கியர், சிவ அன்பர், சிவ கைங்கிரியர், சிவச் சிந்தையர், சிவானுட்டான பூதியர் முதலானவர்களுக்கு மிக்க கருணை கூர்ந்து அவர்களுக்கு வேண்டிய அனுக்ரகஞ் செய்து, ரட்சித்து காக்குக் கருணாநிதி என்று வேதமுறையில் சொல்லி இருக்கும் படி உலக ஜீவர்கள் உன் திருவடிகளை முன்னிட்டு பலவித கைங்கிரியங்களைச் செய்கிறார்கள். அதுபோல ஒரு நடையைக் கைக்கொண்டு செய்து வந்த எங்களால் ஸ்வாமிகளுக்குப் பொருந்தாத காரியத்தை என்ன செய்தோம்? அப்படி செய்திருந்தாலும் இந்தப் பிள்ளைக்கறிக்கு இச்சையென சொல்ல வேண்டியதில்லை. சொன்னாலும் அறுக்க வேண்டியதில்லை. அறுத்தாலும் பாகம் பண்ண வேண்டியதில்லை. பாகம் பண்ணினாலும் பந்தியில் குந்த வேண்டியதில்லை. குந்தினாலும் புசிக்காமல் போக வேண்டியதில்லை. தந்தாலும் நீ மறைய வேண்டியதில்லை. இத்தனையுஞ் செய்த மாயா விநோதசித்தன் நீ யல்லாது வேறல்ல. ஹே பக்தரட்சகா! உன் திருவடியை நம்பின இந்த மூவர்களும் வீண் போகப்படாது. உன்னை நம்பிய

இம்மூவர்பாலிருந்தும் பிழைபோகப்படாது. ஹே! ஜகன்னாதா! உன் திருவடித்துணையைக் கொண்டு நம்பி, நீ இப்போது நேரில் வந்திருப்பதாகச் சொல்லி இந்த திவ்ய தேவ தாசந்தனாதியை அவர்கள் முகத்திலும் தேகத்திலும் புரோட்சாடனஞ் செய்கின்றேன். என் வாக்கியம் பொய் போகாமலும் உன் சத்தியம் விளங்கும்படி நித்திரை விட்டெழுவது போல் எழுந்திருக்க வேண்டும். பரம தயாநிதி! உன் தரிசனந் தர வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.

ஸ்வாமி! காணமால் போன பரமான்மா இதோ வந்திருக்கின்றார். கண் விழித்துப் பாருங்கள்.

## பொது நடை

இவ்விடத்தில் பனிநீர் சம்பந்தப்பட்ட சந்தனக் குழம்பு மூர்ச்சித்துக் கிடக்கும். மூவர்கள் பேரிலும் தெளித்தல்.

**நாயனார் :**

ஆ ஸ்வாமி! ஸ்வாமி! எங்கே ஸ்வாமிகளைக் காணோமே!

**சந்தனம் :**

இதோ தங்கள் முன்னில் நிற்கிறதே. தெரியவில்லையா!

**நாயனார் :**

ஸ்வாமி! சேதனா! எனக்குத்தான் கண்ணில்லையா? ஏன் பொய்யைச் சொல்ல வேண்டும்.

**தாண்டகம் :**

277. கூற்றுதைத்தோம் தசக்ரீபன் றன்னால் வெள்ளி
குன்றுதைத்தோம் வல்லாளன் றேவி நெஞ்சில்
வீற்றுதைத்தோம் முயலகனின் வலிதோள் நித்தம்
விரைந்துதைத்தோம் மாலேறு நாவுள் தொங்கச்
சீற்றுதைத்தோம் மெய்கா ணாதவரை நாளும்
சினந்துதைத்தோம் அவன்மகவின் கறியின் பாகம்
ஏற்றுதைத்தோம் பழிசுமந் தோம்பிழை தவிர்ந்தோம்
இனிஉதைக்க லாகா தென்றேதி னீரோ. (277)

## உரை

ஆ சிவமே! உன் எண்ணம் நன்றாய்த் தெரிகிறது. முன் மார்க்கண்டேயருக்காய் எமனை உதைத்து வீழ்த்தினோம்; பார்பதியின் அச்சம் நீங்க வெள்ளி மலையைத் தூக்கிய ராவணன் உரமழிய மலையை உதைத்து அமிழ்த்தினோம்; வல்லாள மகாராஜனும் அவன் தேவியும் நெடுநாளாய் வைத்திருந்த புத்திர ஆசைக்குக் குழந்தை வடிகொண்ட அவர்கள் நெஞ்சில் ஏறி உதைத்து எழுந்தோம்; தாருகா முனிவர்கள் விடப்பட்ட முயலகனின் வலிய தோளொடிய அனுதினமும் விடாமல் உதைத்திருந்தோம்; திரிபுர தகனத்தில் அகச்செருக்கடைந்த விண்டுவாகிய ரிஷபத்தின் நாக்குத் தொங்க உக்கிரத்துடன் உதைத்து அமிழ்த்தினோம்; வேதத்தின் உண்மை அறியாத பொய்யரைப் பல நாளும் கரையேறாமல் கோபத்துடன் உதைத்துத் தள்ளினோம். இவையல்லாமல் இவன் கொட்டமடங்கப் பிள்ளைகறி பாகம் வேணுமென்று அளிக்க நாம் பெரும் பழி சுமந்தோம் அந்தப் பழி நீங்கப் பெரும்பாடு படுத்திக் குழந்தையையுங் கொடுத்து விட்டோம். நாம் தூக்கிய பாரந் தீர்ந்துவிட்டது. இனி அவனை உதைக்கத் தக்கதல்ல. என்ன செய்யலாம்? ஒருவருமறியாமல் ஓடிப்போகுறதே நல்லதென்று என் கண்ணில் காணாமல் ஓடி வீட்டீரோ! ஹே ஞானதேசிகா!

## பாட்டு (முன்பாக்கி)

278. பிள்ளைக்கறி கேட்டும் இல்லை யென்றேனோ
வள்ளலே என்றும் பழிக்காரன் என்றேனோ
உள்ளபடி பிழை செய்தவன் நானோ
கள்ளன்போல் மறைந்தாய் நீநல்லவன் றானோ

மந்திர மைஜாலஞ் செய்பவன் போலே
இந்திர ஜாலங்கள் செய்ததி னாலே
மைந்தன் கறியென்ற ளித்ததி னாலே
வந்தென்ன இந்த அபாயம் முன்னாலே

தம்பிரான் என்றெண்ணி யானினைந் தேனே
எம்பிரான் வந்தது முன்னறி யேனே
அம்பலந் தன்னி லலையச்செய் தானே
தெம்பு குலைந்து திகைக்கிறேன் நானே

சேற்றில் நட்டகம்பந் தலைசாய்தல் போலே
கூற்றன்கை உயிரென செய்தா யிப்பாலே
ஏற்றும் பஞ்சுபொதியில் அனலிடல் போலே
சாற்றி எரியுதே சடலமென் மேலே

பாவியான் செய்தது குறைஎன்ன சொல்லும்
தேவியால் வந்ததோ தீவினை புல்லும்
போவது தானென்ன புகன்றுபின் செல்லும்
மூவு லகும்வசை யானது நில்லும். (278)

## விருத்தம்

279. கல்லாலின் கீழ மைந்த காரணா உம்மை எதிர்த்து
வில்லாலும் பிரம்பி னாலும் விரைந்து கல்லாலுஞ் சாடிக்
கொல்லாமற் கொன்ற வர்க்குக் கொழுக்கவே முத்தி யீந்து
மல்லாடி என்பால் கண்ட வஞ்சத் திற்கெதிர் காணேனே. (279)

## பாட்டு

இராகம்: பியாய்கு தாளம்: ஏகம்

280. தேசிகனே உன்னைக் காணாமற் றேடித்
தியங்கி தவிக்குதெந்தன் சிந்தையும் வாடிப்
பாசமுள்ளவன் போல மடத்தினிற் கூடிப்
பரிகலத்தன்னம் புசியா தென்ன மோடி (தேசிகனே)

என்னென்னவோ மனதி லெண்ணுகுதறி சிதறி
இப்படி செய்வது னக்கழகல்ல கதறித்
தன்னந் தனியனாகத் தவிக்கிறேன் சிதறி
க்ஷணமதி லோடு மென்னாவியும் பதறிப் (தேசிகனே)

பாவியான் செய்திடுந் தருமத்தி னாலே
பலனடைய லாமென் றிருந்தேனிக் காலே
தேவன் வந்தெனக் கருளளித்தவன் போலே
திடுக்கே மறைந்தது என்னத்தி னாலே (தேசிகனே)

மீண்டும் வில்லவன்செய்த கொடுமையைக் கொண்டோ
மித்ர ஜகன்றீதுற அரக்கன் செய் தொண்டோ
வேண்டிவினை யேதேறுஞ் செய்தது கண்டோ
வெளிப்பட்டீர் மெய்யடியார் வீண்போவ துண்டோ (தேசிகனே)

அறுத்து சமைத்த பாலன் வந்திடு வானே
அண்ணலென் கண்ணிற்காணா தொளிந்திடு வானே - உன்னை
வருத்து வதினாலென்ன காரணந் தானே உடை
வாளினா லென்னுயிரைப் போக்கிடு வேனே.
(280) (தேசிகனே)

## பாட்டு

(வந்தான் செயராமன் என்ற மெட்டு)

**சுவாமி :**

281. வந்தேன் வந்தேன் எனதன்பரே
என்பிழை மன்னிக்கப் பதறாதே - இந்தோ
வாள்விழி யாளுமை யாளொடு
தெரிசனந் தந்தேன் பதறாதே

தந்திமுகனைப் பார் கந்தவேலனைப் பார்
எடுத்தாடும் பதமிருக்க எனக்கு
பஞ்சம் என்ன வென்று
அதற்காக எண்ணு கேனே. (281)

## பாட்டு

(செந்திமேவலை கந்தவேல் என்ற மெட்டு)

282. சோதி சிற்பரானந்த பதஞ் சுகமே
சுக சூரிய மெய்க்குருபரன் திருவருள்
அருகிருந்த புடைவது மிகநகை தரு (சோதி)

மாநிதி புரகனா காதல்காம தகனா
மதித்துப் பல துதித்து
மகஞ் சிதைத்த வகன்விதிப் பொடிசெயுஞ் (சோதி)

சீயவடிமை துயரறுத்துத் தேசிகனின் திருவடித்
தினமே பணிவது மிக கடனே
அகமுகம் படவுடனே செயலோச்சித் (சோதி)

தயவேற்றிக் குணவயட் சேத்ர நயமணி
சுய சோதி தந் முகன் கந்தனருகே
நந்தி கண முந்தி பெறவே. (சோதி)

தந்தை மகிழ்ந்து உடன் வந்திட
சுந்தரி சிந்தை மகிழ்ந்து - ஒளிர்
முத்தனாம் சித்தனாம் நித்தமும் (சோதி)

நத்திடு தாள்முனி அறிவா னந்த
தாள்ஜகை முனிவர் தொழுதாள்
முதிரா லகமும் பணிதாள்

நிதமடி யவர் அகத்தாள்
முதிய தாள் பதும தாள்
வதன சீத தாள் தாள். (282) (சோதி)

## உரை

**நாயனார் :**

ஹே சர்வ ரட்சகா! பிரளுத்த வசத்தால் இந்தப் பிறவியைப் பெற்று மாயா கற்பனையினால் விளங்கும் இவ்வுலகத்தில் பதின்மூன்று விகார விந்தைகளில் செல்லும் ஆசை துடிப்பில் உல்லாசித்து எழுந்து விளையாடுந் திரிகரண சேட்டைகளைத் தடுத்து ஆட்கொள்ள வந்த சர்வேசா! நின் திருவடி கமலங்களுக்கு வந்திக்கின்றேன். எடுத்து உடுத்த அடங்காத இந்த உலக ஆசையைப் பற்றுதற்கோ உனது திருவடிக்கு நான் அடிமைப்பட்டேன். ஹே அறிவானந்த ப்ரபு! இம்மண்ணுலகத்தும் விண்ணுலகத்தும் ஏக சக்ராதிபதி பட்டமும் தனலட்சாதிபதி பட்டமும் அடுத்தடுத்துப் பிறந்து இறக்குங் கஷ்டமும் வேண்டாம். அதில் எனக்கு இச்சையில்லை. அதையும் வேண்டுமென்று கேட்க மாட்டேன். ஸ்வாமி! மாறி எடுத்தாடிய திருவருட்பாதம் எனக்குச் சொந்தமாயிருக்க இந்தப் பாக்கியத்தை விட மற்றெந்த பாக்கியத்தை நினைக்கப் போகின்றேன். ஆபத்பாந்தவா.

## விருத்தம்

**சுவாமி :**

283. எண்ணமிலி பத்தினியாள் சந்த னத்தாள்
இளங்குழந்தை சீராளன் நின்னால் அவர்க்கும்
எண்ணமொன்றா யிருந்ததுபோல் உலகில் யார்க்கும்
இராதிதுவே ஆச்சரியம் என்பால் அம்மை

எண்ணமிரு வீடேற்றி ஆள்க வென்றும்
இறைஞ்சினாள் தையற்கிசைந் தேனெழில் மூவர்க்கும்
எண்ணமதே வானவர்க்கு மிருடி கடக்கு
மேறுவீர் விமானமிதோ ஏறு வீரே. (283)

## உரை

ஹே அம்பரே! உமக்கு இச்சையான வரத்தைக் கேளும். அதனை என்னால் கொடுக்கத் தடையில்லை என்று சொன்னால் எனது திருவடி மோட்ச சுகத்தையல்லாமல் வேறு எந்த சுகமும் இச்சைக் கொண்டு கேட்கத் தனக்கு எண்ணமில்லை யென்குறீர். இன்னுந் தெரிவிக்கக் கேளும். உலகில் ஒருவருக்கு இருவர் உதவினால் அவ்விருவரில் ஒருவர் மனம் மற்றொருவர் மனதோடு ஒருமைப்பாடடைவது என்றும் பொருந்தாத காரியம். ஆகையால் நீரும் சந்தனத்தாளும் சீராளனும் உங்கள் நால்வருடைய மனமும் ஒன்றுபட்டு என்னால் செய்யும் குதர்க்கப் பரீட்சைகளுக்கெல்லாம் லேசமும் பேதமின்றி ஒத்து நடந்ததே மிக்க ஆச்சரிய மென்பதில் எனக்குப் பேரானந்த முண்டாயிற்று. இதல்லாமலும் எனது வாம பாகத்துற்ற உமையாளும், திரிமூர்த்திகளும், எனது குமார சிகாமணிகளாகிய விநாயகர் சுப்ரமணியர் வீரபத்திரரும், இந்திர வானவர்களும், சந்திர சூரியரும், சித்தர் வித்தியாதர இருடிகளும் உங்கள் நால்வர்களைப் பற்றி மிக்க விசேஷித்து உடன் எமது மோட்ச பதவீட்டைச் சேர்க்க வேண்டுமென்று பிரார்த்திக்கின்றார்கள்.

இதல்லாமலும் முன் சென்மத்தில் என் பாலுற்ற சிவசாருபர்கள் மேற்படியார்களில் ஒருவராகிய காரணர் ஸ்ரீரேயாரும். மேற்படியார்களில் ஒருவராகிய வீயோமர் என்பவர் சீராளரேயாகும். பராசத்திபாலுற்ற சத்திசாரூபர்கள் 42 கோடியருள் ஒருவராகிய ஜெனனியென்பவர் திருவெண்காட்டம்மை யாகும். பராசத்திபாலுற்ற சத்தி சாரூபர்கள் பல கோடியில் ஒருவளான நோக்கனங்கு என்பவர் சந்தமே ஆகையால் இதோ வந்திருக்கும் விமானமீதில் ஏறி வரக்கடவீர்கள்.

## விருத்தம்

நாயனார் :

284. தருந்தவத்தில் கூழளிக்கும் பலத்தை யீந்தோன்
தராதிபனில் தருதிபதி கௌட மன்னன்

பெருந்தவத்தால் வறுமையின்றிப் பெற்ற பாக்யம்
பெருமானின் றிருவடி நேரான தாலே
பொருந்த அந்த மகிபனருட் பதமடைந்தால்
புனிதமிந்த பலனென்பேன் புவியு மெச்சும்
கருந்தார் நீள்சடையானே அருளிச் செய்கக்
கரும்பினிய மலர்பதத்தை விரும்பி னேனே. (284)

## உரை

யோ சந்வேசா! உலகின்கண் முப்பத்திரண்டு தர்மங்களிலே மேலான இந்த அன்னதான தர்மத்தைச் செய்ய யேதுவில்லாத வறுமையாளனாகிய அடியேனுக்குப் பூமண்டலாதிபதி பதியும் தானாதிபதியுமான கொடைமன்னனுடைய பெருங்கருணையினால் மகிழ்ந்து தரித்திரமின்றி அளவற்றப் பெருந்திரவியத்தைக் கொடுக்க, அந்தச் செல்வப் பெருக்கினால் பரமேச்சுரனாகிய சுவாமிகள் திருவடி பாக்கியங் கிடைக்கப் பெற்றேன். என்னால் சம்பாதித்து இட்ட தர்மத்தினாலே இந்தத் திருவருள் கடாட்சம் அறிந்தேனல்லேன். ஆகையால் அந்த இரணியவர்ம பூமானுக்கு என் போன்ற திருவருட் பதங்கிடைத்தால் அதுவே நான் செய்து வந்த தவத்தின் விசேஷ மாவதோடும் உலகினருக்கும் சம்மதமாகும். ஆகையால் கொன்ற மாலையும் நீண்ட கரிய சடைகளுடைய பெருமானே! விருப்பத்தின்படி என் எஜமான் கௌட மன்னனுக்கும் மோட்சத் திருவருள் கிடைக்க வேண்டுமென்று கரும்பினிய கமல பதத்தைப் பிரார்த்திக்கின்றேன்.

## விருத்தம்

**சுவாமி :**

285. விரும்பிய சத்சாந்த குணவே தியாகேள்
விருப்பம்போல் அக்கொடை பூமா னுக்கும்
தரும்பதவி திருப்பணிகள் சிலபு ரிந்து
தரணிமெச்ச சண்பகப்பூ வாடை யோடு
--------- --------- --------- ---------
மகள்தாயும் தாதியும்நீர் நால்வர் வந்த
பெரும்புலவர் பூமாரி பொழிய யேறிப்
பெருகுவீர் உடன்என்பின் வருகு வீரே. (285)

## உரை

ஹே சத்சாந்த குண வேதியரே! நீர் என்னிட மிச்சாத்துக் கேட்ட பரோபகார விருப்பத்திற்கு யேற்க இந்த மூன்று வரமுங் கொடுக்கத் தடையில்லை. அப்படியே கொடுத்தேன். அந்தக் கௌட மன்னனுக்கு உலகிலுள்ளோர் காண சில சிவ திருப்பணிகள் செய்ய வேண்டி யிருப்பதால் அது முடிந்து பின்னால் நீரடையும் பதவி வீட்டை அடைய நீர் காண்பீர். அக்கௌவுட பூபதி பதவியடையுங் காலம் உலகமெங்குஞ் செண்பகப்பூ வாடை பரிமளிக்கும். எனது திருப்பதம் வந்து சார்வான். இது நிச்சயம். நீரும் உன் பத்தினியும் தனையனுந் தாதியும் நால்வருமாகக் காலதாமதஞ் செய்யாமல் வானுலகத்தார் பூமாரிப் பொழிய என்னுடனே யிந்த விமானத்தில் ஏறி வருவீர்கள்.

ஜயா விஜயா பவாசதா சத்தத்சித்
சற்குருவே நம :

## பொது விருத்தம்

286. பரவுமிந்த விதந்துதித்து நிற்கச் சோதி
பரமனர்க் கிந்தராரளி கடைக்கண் சாற்ற
கிருபையுறுஞ் சிறுத்தொண்டர் நங்கை யாரும்
கீர்த்திவளர் சீராளர் சந்த னத்தாள்
மருவிதிரு விமானத்தில் மேவி யென்றும்
வாழ்பர மானந்த சுகமனுப விக்கப்
பெருமரிய சித்திரைநாள் பரணி தன்னில்
பெற்றுளார்க் கயிலாய முற்று ளாரே. (286)

## தர்பார் கவசம்

(செய செய என்ற மெட்டு)

287. ஜெயதந்தி ஜெயகந்த ஜெயவிந்ர மூர்த்தி
ஜெயரவி ஜெயமதி ஜெயவான்ம மூர்த்தி
கிர்த்திய ஐவர்கள் மூர்த்தி ப்ரதாப
வர்த்தன முத்தமிழ் சித்தி மனோப (ஜெய)
நித்திய சத்திய வித்தக னாத
உத்தம சத்துவ கர்த்த விநோத
அண்டவ கண்டப்ர கண்ட சம்போ
கண்ட கிலாண்டப்ர மாண்ட உத்யோ (ஜெய)

காரண பரிபூரண நிறை ஆரண
அறிவா னந்தகுரு ஜய ஜயா. (287) (ஜெய)

## பாட்டு

(நின்னாம என்ற மெட்டு)

இராகம்: பூபாளம் தாளம்: மங்களம்

288. ஸ்ரீஓம் அரஹர மகாதேவ
தேஜோ மயானந்த மங்களம்
பரிபூரண நித்யானந்த பரப்ரம்ம
சாபல்ய மங்களம் (ஸ்ரீஓம்)

வானவர்கள் துதிக்கும் ஆனைமுகப் பிள்ளைக்கும்
ஞானவடி வேலர்க்குஞ் சுபமங்களம்
பாணியமரர் கட்கும் நித்ய மங்களம் (ஸ்ரீஓம்)

பொங்கு மருள்சாம்பவி செங்கமல சீதேவி
எங்கள் கலைவாணிக்குஞ் சுபமங்களம் - அஷ்ட
மங்கள கல்யாணிக்குஞ் ஜெயமங்களம் - புகழ்
தங்குஞ் சர்வேஸ்பரிக்கும் நித்ய மங்களம் (ஸ்ரீஓம்)

அப்புவி போற்றும் ஞான சம்பந்த மூர்த்திக்கும்
அப்பர் ஸ்வாமிகளுக்குஞ் சுபமங்களம் - கலை
ஒப்புஞ் சுந்தரருக்குஞ் ஜெயமங்களம் - வேதம்
செப்பும் வாதவூர்க்கும் நித்ய மங்களம் (ஸ்ரீஓம்)

விண்புகழ் சீர்சிறுத் தொண்டர் சீராளர்க்கும்
வெண்காட்டம்மை யாருக்கும் சுபமங்களம் - சாந்த
சந்தனத் தாளுக்கும் ஜெயமங்களம் - ஞான
விண்காட் டிருடிகட்கும் நித்ய மங்களம் (ஸ்ரீஓம்)

செயிரறுந்தே யருள் கொண்டியலுங் கணேசருக்கும்
பயன்கொள் நம்பியாருக்குஞ் ஜெயமங்களம் - எங்கும்
இயல்கொள் சுருதிகட்கும் நித்ய மங்களம் (ஸ்ரீஓம்)

நீடுமூவு லகிற்குந் தேடறிய ஞானிக்கும்
பாடுங்கவி ஞருக்குஞ் சுபமங்களம் - கொண்
டாடுமன்னதான விஜைய மங்களம் - இன்
நாடகம் புகழ்பெற நித்ய மங்களம். (288) (ஸ்ரீஓம்)

## வாழி விருத்தம்

289. நின்மல விநாயகன் வல்லமையும் வாழ்க! - வேல்
நிருபன் சரவண பவந்தன்
நேசதெய் வானையும் வள்ளியும் வாழ்க! - மேல்
நிருவாண வீடும் வாழ்க!
நித்திய கிருத்தியக் கற்றவருஞ் செய்கை
நிகழ்சத்தி யைவர் வாழ்க!
நீடுசூரிய சந்திரர் காதலியொடும் வாழ்க!
நிகரில் பேருலகம் வாழ்க!
தன்மைவைம் பூதங்கள் வாழ்க! வைராணி
காதலனும் வானவர்கள் வாழ்க!
தக்கவெண்புக்கு பாலகர் மனைவியொடும் வாழ்க!
தன்ம நற்கன்மம் வாழ்க!
தரணிமணி முடியேக சக்ராதிபதி யுந்தன்
ரதியோடு நீடு வாழ்க!
சர்வ சமயங்களும் வாழ்க! மாச்சங்
கராச்சாரிய சுவாமி வாழ்க!
தொன்மை புவியரவு நீள்விட்டுணு சிவத்தலந்
துலங்கித் தெய்வீகம் வாழ்க!
தூயமறை யோர்வாழ்க! நால்வேதமும் வாழ்க!
தூய சிம்மா தனபதி
சொல்லறிய வாழ்வார்கள் பன்னிருவர் வாழ்க! - மேல்
துதிக ளறுபத்து மூவர்
வன்மை யருணிறை வாழ்கவிச் சிறுத்தொண்ட
ருமைந்தரு மம்மைத் தாதி
வாழ்வினிகரில் சரிதங் கண்டு கேட்டுறைசெய
மகிழ்ந்து மிக்குரு பூசையை
மாறாமல் வருடமுறை பக்தியோடு செய்தவர்கள்
வாழ்வே முதலை முறைக்கும்
வாழையடி வாழையா யிகபர சுகானந்த
மார்க்கண் டன்போல் வாழ்கவே! (289)

சுபம் சுபம் சுபம்

## தோடையம்

290. சௌபாக்கிய சிவ போக
ஜயய ஜயய ஜயய ஜயய
சௌபாக்கிய சிவ போக
ஜே ஜே ஜே ஜே (சௌபா)

சகலாண்டப் புவனப் போக
தர்ம்மார்த்த யாக யோக
சுகநீதி யரசு வாழ்க
ஜயய ஜயய ஜயய ஜயய (சௌபா)

அன்பார்ந்த வன்பின் பாக
அன்ன தான ப்ரவாக
இன்பார்ந்த உலகர் வாழ்க
ஜயய ஜயய ஜயய ஜயய (சௌபா)

கருணைகுடி பெருவர் வாழ்க
கற்றோர் மற்றோரும் வாழ்க
அருணிறைந்த வன்பர் வாழ்க
ஜெயய ஜெயய ஜெயய ஜெயய (சௌபா)

அறிஞனின் னூரும் வாழ்க
ஆண்டுவிழா செய்வர் வாழ்க
அறிவா னந்தன் சொல்வாழ்க
ஜெயய ஜெயய ஜெயய ஜெயய
சௌபாக்கிய சிவ போக
ஜே ஜே ஜே ஜே. (290) (சௌபா)

**சுபம் சுபம் சுபம்**

# பாட்டு முதற்குறிப்பகராதி

(எண் - பாடல் எண்)


அஆ நான் வல்லனே 11
அகண்டிதா 225
அகர முதலாக 54
அஞ்சாக் கொலையும் 116
அஞ்சுகத்தைப் பழிக்கும் 187
அடைக்கலங் கருணா 161
அண்டை கணேச 135
அண்ணல் பெருங் 175
அந்தண குல அண்ணன் 217
அப்பா எனக்கிஷ்டம் 211
அம்மை யாரும் 129
அய்யனே இதெனக்கு 169
அய்யனே வடியேன் 201
அரகரா கொடிய 106
அரனே அருட் ப்ரகாச 268
அரி ஓம் நமவென்று ஓதுவாய் 50
அரி ஓம் நமவென்றோதி 52
அரி கி ஓம் 51
அருந்த முலைப்பால் 166
அருந்தவ முனியே 68
அருந்தவனே வடதேசம் 165
அரும்பொருளே 155
அருமைசேர் 194
அருள்மிகுந்த 248
அருளிறை பொருளடி 82
அவையவங்கள் ஊன 186
அறிந்த மைந்தர் 237
அன்னம் படைத்திடுவாய் 33
அன்னமே ஒரு வார்த்தை 73
அன்னமே நீ கேளாய் 21
அன்னை குசலாம்பிகா 19
அன்னை தந்தையர்கள் 212
அன்னை தந்தையர்களே 229
அன்னையே கேள் 101
அனாதியும் ஆனேனே 274
ஆ ஆ ஆ 192
ஆக்கை நிலை என 28
ஆகாகாக 228
ஆண்டவரே வாரும் 93
ஆண்டிகளுக்கு 231
ஆத்துமன் நானே 45
ஆதியந்தம் இலானே 60
ஆ முன்னின்று 24
ஆயிதென்ன காரணமோ 71
ஆரடி உனக்கு 121
ஆராகிலும் இந்த 77

ஆறுமா அப்பா 275
ஆனந்தம் ஆனந்தம் 152
இடையரிது சொன்ன 148
இத்தனை கோபம் 244
இதனுட் பிறந்த 58
இதுதானா கண்ட 272
இது வென்ன 160
இந்த சோதனை 81
இப்படிக்கு வரும் 119
இப்படி வீதி 92
ஈகை பொன் 143
உண்ண இசைந்திலான் 130
உண்ணுமாறு சுவைகளும் 168
உம்மாலே ஆகாது 167
உலகடம்ப ஒப்பனைக்கு 157
உலகெலாந் தாதா 174
உறக்கம் வந்துற்ற 196
உனக்குள்ள கவலை 100
எண்ணமிலி பத்தினி 283
எதுவோ நான் சொல்லும் 149
எப்படி யான் 140
எல்லாஞ் சிவார்ப்பணமே 262
எற்றுக்கோ 267
என்னகத்தில் வாழ்சுத்த 20
என்னடா புதுமை 198
என்ன யோசனை 266
என்னுயிர்த் துணைவர் 200
எனது சேவகனே 44
ஏ சீராள தேவனே 269
ஏண்டா வீணே 256
ஏதடா குழந்தாய் 207
ஏலேலோ எலிலலோ 223
ஏவல் சிலதி 126
ஐம்பூதத்தினை 233
ஐயமிட்டு உண்ணா 136
ஐயையோ நான் 195
ஐயோ யீதென்ன 118
ஐயோ வயிறெரியுது 109
ஒப்பிலார்பின் 132
ஓகோ அண்ணமாரே 215
ஓகோ யிதற்கென்ன 179
ஓம் அரகர 181
ஓம் சிவாய 261
ஓம் வேதாந்த 2
ஓமெனும் பொருளை 49
கண்சாடை காட்டி 255
கண்டீர்களோ 107
கண்டேன் கண்டேன் 151
கண்மணி சீராள 208
கணப்பொழுது 78
கர்த்தனே சிவனே 112
கருணாகர கசமுக 10
கருத்தெனக்கு மது 190
கல்லாப் பிழையும் 245
கல்லாலின் கீழ் 279
கலங்கலென்ன 189

கள்ளனே உனது 241
கள்ளியான் பாவி 122
கன்னவாய் வாங்கி 7
காட்சி என் 176
காட்சி தெய்வ 270
காணாமற் கண்ட 95
காணுறுந் தவத்தினார் 125
காரணமாய்ப் பரமகுரு 18
குழந்தை யான் 206
கூ கூ பரமன் 235
கூரார் விரைதேர்ந்து 42
கூற்றுதைத்தோம் 277
கேட்டதும் சம்மதமே 29
கேட்டது மேல் 23
கேளுமப்பா ஆயர்களே 145
கோடி போயினதே 193
சகலாண்ட புவன 76
சங்கர சங்கரனே 238
சஞ்சலப் படாதீர் 111
சண்டாளி பாவி 120
சண்முகேசனே அருட்கண் 48
சத்தியவான் 183
சதுர்வேத முத்தா 13
சந்தி நானகன்ற 123
சமைத்திடும் போதில் 257
சத்தியத்தை சுமந்தவர்கள் 259
சந்தனா இதுவென்ன 273
சரணஞ் செய்குறேன் 154
சரண மையா சங்கமரே 31
சரவணப் பெருமாள் 210
சரவண பவகுரு 110
சாட்சி சைதன்யமே 34
சாட்டுதல் என்னென்னோ 115
சாதுக்கள் திருவடி 39
சாம வேதத்தில் 6
சாமி உங்களுக்கு 144
சிந்தமென்று அறைந்த 202
சிவசிவா என்ன 232
சிவயநம என்றால் 88
சிவனே என் செய்வேன் 263
சிவா சிவா சிவா 30
சீச்சீ போ 242
சீர்காழி சிவபாத 35
சீர் கொண்ட 87
சீரார்ந்த உலகம் 1
சுவாமி எங்களை 96
சுவாமி தயை 260
சுவாமி நான் 204
செகதீசா! ஓ பரமேசா!! 113
செந்தண் பூம்புனல் 43
செய்யவும் அஞ்சேன் 170
சொல்லல் என் பெண்களுக்கு 22
சொன்ன தெல்லாம் 171
சோதி சிற்பரானந்த 282
சௌபாக்கிய சிவ 290
ஞாயம் உமக்கழகோ 230

ஞான நான்மறை 63
டேய கூ ஹெ 142
தம்பி சீராள 199
தயையிலா துரத்தில் 99
தூரமறியா 188
தருந்தவத்தில் 284
தன்போலி கேவலன் 61
தாங்காதினி பிராணன் 162
தாய்மார்களே பசியால் 90
தாயே சொல்வதை 85
தாரணியுஞ் சடையானே 80
தானதத் தகுதான 141
திருபானந்த கடலின் 250
திருவமுது பரிமாறி 252
திருவுளச் செயலறியா 253
தினமுஞ் சத்சங்கமர் 83
துரிதமாக யானறியும் 53
தெய்வமே யான் 137
தேசிகனே உன்னை 280
தேவரீர் மனையிருந்து 102
தேவன் பஜனை செய்யும் 8
தேவியிட மாகா 79
தேனே சித்தாந்த 36
தொட்டளித்திடுங் கறி 254
தொழகுலம் புலவரே 184
நல்லது சொன்னீர் 65
நல்ல நல்ல 251
நல்ல வார்த்தை 94
நல்லார்க்கு நிடேதம் 182
நலமிகுந்த செயல் 249
நாட்டிலுறும் 138
நாதச் சங்கீத 276
நாதன் வரக் காணேனே 86
நாயினேன் பிழை 67
நாரத மாமுனிவருக்கு 69
நான் எனது 243
நான் பட்டதை 159
நானடிமை யாயினேன் 5
நிகழுமா தாரப் பொருளான 55
நின்மல விநாயகன் 289
நிர்க்குண விநோதா 209
நீர்தானோ திருவளரும் 163
நீர் மலிந்த 239
நெல்லொடு தென்காசி 103
நேர்த்தி நீ செய்ய 98
பக்குவத்தில் அறிய 139
பட்டார்க்குப் பழிநினை 84
பணிந்த சொல்லறிந்தவர் 127
பணிந்து அமுதுக்கு 246
பத்தினிக்கு உடன் உரைத்தேன் 131
பத்தினி தனில் 66
பரவுமிந்த விதம் 286
பராவு மன நினைவு 156
பற்றாததெலாம் 224
பாங்கனே உன்னை 216
பாம்பு கடிக்க 205

பார்க்கடல் கடைய 234
பாலகனே வா 218
பாலகனே வா பண்டிதனே 271
பாலா நீ 203
பாவி பலபல 104
பிச்சாண்டி செம்படச்சி 12
பிச்சாந்தேகி 89
பிடிபடி மாமானே 227
பிரம்ம ஸ்ரீசா 191
பிள்ளைக்கறி கேட்டும் 278
பிள்ளைக்கறி யென்ற 173
பிள்ளையே 236
பிறந்தென்ன 180
பின்னருந்த 134
புலமையீர் கேட்ட 25
புறங்கொண்ட போதில் 70
பூதகண நாதர் 222
பூர்வத்தில் யான் 72
பூவார் புகழ்ந்தோங்கும் 3
பெண்குணப் புரட்டு 128
பெற்ற கலி தீர 264
பைங்கோட்டு மலர் 41
போடா போ உனது 265
போ போ 258
போற்றி போற்றி 247
போறேன் இதோ 177
மதன சிந்தாமணி 226
மதி கதி மாறினும் 172
மரகத மாணிக்கமே 4
மறை கொண்ட 40
மறையோர் அரசே 108
மன்னுயிர் எல்லாம் 47
மனோன்மணி சோடசத்தால் 75
மாமறை சொல் 32
மிதமிலாது இந்த 59
முக்காலங் காண்பேன் 62
முனம்பாக்கி வினைபேதம் 26
மூவுலகு எங்கும் 74
மெய்ப்பொருள் இன்னதென 57
மெய்ப்பொருளான 56
மெய்யன் நரசிங்கபதி 16
மேலதாந் தலங்க 114
மைந்தா உனை பிரிந்து 213
ராம வான்ம 97
ராராரோ ராரிரரோ 219
லாலி சர்வாத்ம 220
வடதேசம் அறிவானந்தம் 133
வந்தார் வைரவ 105
வந்து அமுது 240
வந்தேன் வந்தேன் 281
வந்தேனான் இந்த 17
வரவெனத் தூது 46
வள்ளல் புறத்தடைந்த 124
வளவன் முனம்வகுத்த 9
வறுமையிலாது 178
வாசமிகும் பூங்குழல் 185

வாடியே வருந்த 146
வாடும் பயிர்க்கு 153
வாருங்கள் வாருங்கள் 15
வாரும் வாரும் 197
வாழ்வினை சதம் 214
விட்டேன் இப்பொய் 158
வித்தகனே போற்றி 164
வித்தார மான 150
விந்தை அழகு 91
விரும்பிய சத்சாந்த 285
வெள்ளை மேனி 14
வேதகுல திலக 37
வேதா வேதத்தின் 64
ஜய லாலி 221
ஜய ஜய சுவாமி 38
ஜாதி வரம்பற்று 117
ஜெயதந்தி ஜெயகந்த 287
ஜென்மமென்ன ஜென்மமடி 27
ஸ்ரீ ஓம் அரஹர 288
ஹரிராமா அமரேச 147

# நூலுள் எடுத்தாளப்பட்ட மெட்டுகள்

(எண் - பாடல் எண்)


1. அவாசங்கமகமென என்ற மெட்டு 37
2. ஆதாரம் யாருமில்லை என்ற மெட்டு 230
3. ஆரடி உன் ஊர்பேர் என்ற மெட்டு 115
4. ஆரண்யம் போய் அலைவததென்ன என்ற மெட்டு 259
5. ஆவியுடன் மெய் மறந்து என்ற மெட்டு 173
6. ஆனந்தசெகன் மோகனா என்ற மெட்டு 36
7. இதர்க்கோடா மைந்தா உன்னை என்ற மெட்டு 137
8. இவளாரா யானறியேன் என்ற மெட்டு 268
9. என் முகம் பார்த்தருளையா என்ற மெட்டு 208
10. என்னை மணம் புரிந்து என்ற மெட்டு 124
11. கண்மணியே இன்னும் தூக்கம் என்ற மெட்டு 160
12. கலிலோகரி என்ற மெட்டு 10
13. காந்திரிஷி என்ற மெட்டு 88
14. காவடி சிந்து வர்ண மெட்டு 19
15. கானகத்திலே வன்னி என்ற மெட்டு 20
16. கைச ஜாத்துடலா என்ற மெட்டு 111
17. கையை நோகுதே என்ற அரிச்சந்திரா மெட்டு 154
18. கோருங்கள் கோருங்கள் என்ற மெட்டு 15
19. சத்யமெங்குமே தளரா என்ற மெட்டு 34
20. சாலைமர நிழலில் சொர்ப்பனாவஸ்தை என்ற மெட்டு 106
21. சீரார் சபையில் வாழும் என்ற மெட்டு 250
22. சுகுந்த சுந்தரனே என்ற மெட்டு 94
23. சுந்தரம் நிறைந்த திருச்செந்தில் என்ற மெட்டு 91
24. செந்தி மேவலை கந்த வேல் என்ற மெட்டு 282
25. செந்தூர் கெம்பீரா என்ற மெட்டு 62

26. செந்தூர் வேலாண்டி என்ற மெட்டு 29
27. செய செய என்ற மெட்டு 287
28. சென்று கனி பறித்துக் கொண்டு என்ற மெட்டு 64
29. சென்னை ராஜகுட்டி என்ற மெட்டு 14
30. சோம சேகரன் அருளும் வருளவனேன் பரா என்ற மெட்டு 97
31. ஞான பண்டித மோதிலால் என்ற மெட்டு 81
32. டாபரே உன்னை நம்பின என்ற மெட்டு 142
33. தனக்கோர் இணையில்லாத என்ற மெட்டு 13
34. தஜரத ராஜ குமாரா என்ற மெட்டு 110
35. தாயே நான் அறுத்துகோ என்ற மெட்டு 203
36. திரிலோகமும் என்ற மெட்டு 12
37. நமோநம நாம சண்முகா என்ற மெட்டு 38
38. நாவேறு பாமணந்த என்ற மெட்டு 90
39. நானே பெற வரம் இரண்டு அருள்வீர் என்ற மெட்டு 185
40. நின்னாம என்ற மெட்டு 288
41. நீ யென்னடாவதிஷ்டா என்ற மெட்டு 170
42. பட்சமிருக்க வேணும் மன்னனே என்ற மெட்டு 187
43. பட்டாபிஷேகத்தை என்ற மெட்டு 104
44. பண்டித மோதிலால் நேரை என்ற மெட்டு 119
45. பலராமனையனே என்ற மெட்டு 262
46. பித்தா பிறைசூடி என்ற மெட்டு 79
47. மடாலயம் வந்தபின் என்ற மெட்டு 108
48. மாட்டை மடக்கி என்ற மெட்டு 141
49. மாதேவு சோதையே கேளம்மா என்ற மெட்டு 199
50. மேரே மைலபுலா என்ற மெட்டு 85
51. வந்தனந் தந்தேன் என்ற மெட்டு 48
52. வந்தான் செயராமன் என்ற மெட்டு 281
53. வால சித்த யிந்தே என்ற மெட்டு 209
54. வாலசித்தயிற்த என்ற மெட்டு 93

## நூலுள் இடம்பெற்ற இராகங்கள்

(எண் - பாடல் எண்)

1. அடாணா 27
2. ஆனந்த பைரவி 19,121
3. இங்கிலீஷ் நோட்டு 270
4. இந்துஸ்தான் தோடி 31
5. எதுகுல காம்போதி 264
6. கல்யாணி 4
7. காதல் நீலாம்புரி 219
8. காப்பி 76,94
9. காம்போதி 115
10. கை தோடி 215
11. சங்கராபரணம் 17,21,167,218,255
12. சாவேரி 89
13. சுருட்டி 191,242
14. செஞ்சுருட்டி 180,260
15. சேதனாமிர்தம் 222,223
16. தன்னியாசி 113
17. தாண்டகம் தோடி 239
18. தியான நமாதி 234
19. தில்லாந்திரி 211
20. தேசிக கமாராகம் 243
21. தேசிக கமாஸ் 244
22. தேசிக தோடி 32,269
23. தோடி 73,101
24. தோழிதா ரூபகம் 240
25. நாட்டை 2,175,177
26. நாதநாமக்கிரியை 79
27. நீலாம்புரி 219
28. பியாக்கு 71,280
29. பூபாளம் 288
30. பைரவி 5,77
31. மத்யமாவதி 3
32. முகாரி 149
33. மோகனம் 257
34. ஸ்ரீராகம் 145,179

## நூலுள் இடம்பெற்ற தாள வகைகள்

(எண் - பாடல் எண்)

1. அட தாளம் 221
2. அதி துரிதம் 2
3. ஆதி 167
4. ஏகம் 280
5. மங்களம் 288
6. ரூபகம் 3

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| பயிலரங்கக் கவிதைகள் | 18.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-2 | 64.00 |
| சங்க கால மன்னர்களின் காலநிலை தொகுதி-1 | 56.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி-2 | 65.00 |
| ON TRANSLATING TIRUKKURAL | 50.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| செந்தமிழ் அகராதி | 150.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| பொருள் புதிது | 35.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| தமிழர் கொடிகள் | 30.00 |
| தமிழர் சமூகவியல் | 35.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| தமிழ் கற்பித்தலில் உன்னதம் | 20.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| சதகத்திரட்டு தொகுதி-1 | 80.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள் | 45.00 |
| கிறித்தவத் தமிழ் | 20.00 |

**Pub. No. 416**

அறிவானந்த அடிகள் இயற்றிய
சிறுத்தொண்டர் நாடகம்

**75.00**